உ

சிவமயம்.

# முனிவர் முத்துமலர்

## முருகப் பெருமானின் போர்ப்படைத் தளபதிகள்
## வீரபாகு உள்ளிட்ட செங்குந்த கைக்கோள நவவீரர்கள்



வீரதீர செங்குந்தர் வீராந்தக செங்குந்தர் வீரமார்த்தாண்ட செங்குந்தர் வீரராக்கத்த செங்குந்தர் வீரபாகு செங்குந்தர் வீரகேசரி செங்குந்தர் வீரமகேந்திர செங்குந்தர் வீரமகேசுவர செங்குந்தர் வீரபுராந்தக செங்குந்தர்

**வண்ணக்களஞ்சியம்**

**காஞ்சி நாகலிங்க முனிவரரின்**

எண்பதாம் ஆண்டு நிறைவினையொட்டி

வெளியிடப்பெற்றது.



முனிவர் வாழ்க்கை வரலாறும், பல அறிஞர் கட்டுரைகளும்
அடங்கிய நூல்.



வெளியிட்டோர்:

முனிவர் முத்துவிழாக் குழுவினர், சென்னை.

1944 ஜூலை] [விலை ரூபா 1-4-0

## முனிவரரின் சிறப்புப் பெயர்களும்
## அவற்றைத் தந்தருளியவரும்.

**கச்சியடிகள்—**

ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச சுவாமிகள்

**மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்—**

ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண சுவாமிகள்

**காஞ்சிமாநாட்டு வித்தியா பிரசாரகர்—**

ஸ்ரீ பொன்னம்பல பிள்ளை, இலங்கை

**வண்ணக்களஞ்சியம் —**

ஸ்ரீ • தண்டபாணி சுவாமிகள்



Printed at lhe Senguntha Mithran Press, Madras.

## விழாக் குழுவினர் :

**தலைவர் :**

சுவாமி உருத்திரகோடீசுவரர்

**அமைச்சர்கள் :**

மு. அரசன் கண்ணனார், பி. ஒ. எல்.
தமிழ் விரிவுரையாளர்,
கும்பகோணம் அரசினர் கல்லூரி

சிறுவை, நச்சினார்க்கினியன்
செயலாளன், நக்கீரர் கழகம்

**பொருளாளர்கள் :**

காஞ்சி, மணிமொழியார்
செயலாளர், ஞானியார் மன்றம்

சி. நடராச முதலியார்
செயலாளர், தென்னிந்திய செங்குந்த
மகாசன சங்கம்

**உறுப்பினர்கள் :**

பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியார்
தலைவர், சித்தாந்த பிரகாச சபை

மயிலை, சிவ. முத்துக்குமாரசாமி முதலியார்
தலைவர், மணி அரசு மன்றம்

வல்லை, பாலசுப்பிரமணிய முதலியார்
தலைவர், மாணவர் மன்றம்

சி. ரா. பழனியாண்டி
செயலாளர், ஒய். எம். வி. எ. தமிழ்
வளர்ச்சிக் கழகம்

கு. சி. நாகலிங்க முதலியார்
திருவல்லிக்கேணி வீரவாகு சங்கம்

வ. சுப்பையா பிள்ளை
செயலாளர், தென்னிந்திய தமிழ்ச்சங்கம்

இலக்குமணசாமிசெட்டியார், பி.ஏ.எல்.டி.
தலைமை ஆசிரியர், முத்தியாலுப்பேட்டை
உயர்நிலைப்பள்ளி

டாக்டர், தருமாம்பாள் அம்மாள்
தலைவர், பெத்துநாயக்கன் பேட்டை
தாய்மார் கழகம்

கா. வே. அப்பாதுரை முதலியார்
செயலாளர், சென்னைச் சிவனடியார்
திருக்கூட்டம்

அ. தம்பிரான் முதலியார்
ஆசிரியர், தொண்டைமண்டல
உயர்நிலைப்பள்ளி

T. V. முருகேச முதலியார்
துணைத்தலைவர், கல்விச்சங்கம், புரசை

மா. அ. கனகசபை முதலியார்
தலைவர், தமிழர் நல்வாழ்க்கைக் கழகம்



# பொருளடக்கம்.

# அணிந்துரை

பேச்சு வழக்கில் வாழ்ந்து பண்டைப் பெருமொழிகளில் ஒன்றாய்ச் சிறந்து செம்மைப் பண்பு நிறைந்து இன்பம் தளும்பும் தனிப் பெருமையது தமிழ்மொழி. இவ்வாறே காலங்கடந்த முதல்வனைப் போற்றும் தனிநெறி, சிவநெறி. இவற்றின் உண்மைத் தன்மையில் கருத்தூன்றி, ஊன்றிய வன்மையிலேயே வாழ்க்கையை அமைத்து அமைந்த சான்றோர் உயர்திரு. வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள்.

முனிவரவர்களின் வாழ்க்கை சென்ற அறுபானாண்டுகளின் தமிழக வரலாறெனின் மிகை ஆகாது. அவர்களின் தொண்டு தமிழகம் சிறப்பாக அறிந்ததொன்று. அன்னாரின் எண்பதாவது ஆண்டு அண்மையில் நிறைவுற்றது. அப்பெருந்தகையாளரின் வாழ்க்கைக் குறிக்கோளினை எவரும் அறிதல் வேண்டியது இன்றி அமையாத தாதலின் அவர்களைப் பாராட்டும் வழியே முத்துவிழாக் கொண்டாட்டமும் முத்து மலர் வெளியீடும் நிகழ்தல் வேண்டும் எனத் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் உயர்திரு. சபாபதி முதலியார் அவர்களும் சங்கமும் நினைந்தவாறு முத்து விழாக்குழு ஒன்று அமைக்கப்பட்டு அதன்மூலம் அவைநிகழலாயின.

'முத்விழா' என்ற குறியீடு அறிஞர் பலர் எண்ணி அமைத்தது. முத்தாலும் முத்தமிழாலும் விண்ணையும் வென்றது வீரம் செறிந்த தமிழ் நாடாதலின் முத்தமிழிலும் தமிழிலுறை இறைவன் மாட்டும் அழுந்திய அண்ணல், அறிவாகிய முனிவராகவே—சிறப்பாக இவ்விழாவும் வெளியீடும் 'முத்து' எனும் சொல்லோடு இணைக்கப்பெற்றன.

இம்மலரில் முதலில் காண நிற்பது முனிவரவர்களின் வாழ்க்கை வரலாறு. இஃது இந்நாள்வரைத் தமிழுலகம் அறியாது நின்ற உண்மை நிகழ்ச்சிகள் பலவற்றை அறிவிக்கின்றது. பிறர் பெருமைகளைப் பெரிதும் போற்றும் பேராண்மை மிக்க அடிகள் வேறு வழியான் தெரிதற்கியலாத நிகழ்ச்சிகள் பலவற்றை எழுத்துருவத்தில் உதவி, உதவிய வழியானும் பெருந்தொண்டாற்றியிருக்கின்றார்கள். இவ்வரலாறு எஞ்ஞான்றும் நின்று நிலைதலுறும் நேரிய இயல்பில் பல புலவர்களின் வரலாற்றினைப் பொலிவுறச் செய்கின்றது.

அடுத்துக் காணக்கிடப்பன கட்டுரைகள். இவை பல அறிஞர்களால் எழுதப் பெற்றன. பல்வகைப் பொருளால் இயல்வன ; நுண்மாண் நுழைபுலம் மிக்கன ; அறிவின் ஆற்றலைத் தெற்றெனத் தெரிவிப்பன ; வரலாறு, ஆராய்ச்சி, விஞ்ஞானம் போன்ற பல துறைகளில் செழித்து நிற்பன ; இயல் வளம் நிறைந்தன. இவை கற்போர்க்குப் பேரின்பத்தையும், மேலும் நினைத்தற்குத் தூண்டும் நிலைமையினையும் உடையனவாய் ஆக்கந் தருவனவாய் அழகொழுகச் சிறந்து நிற்கின்றன.

மூன்றாவது 'வாழ்த்துரைகள்' பெரியோரை வாழ்த்துதலின் பயன் தாம் வாழ்தற்காவதே. 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்' என்றனர் சிவநெறிச் செம்மலாராகிய மணிமொழியார். பெரியார் முனிவரவர்கள் மேலும் வாழ்வதால் தமிழகமும் சிவநெறியும் நாளும் சிறக்கும் என்பதில் ஐயமும் உளதோ!

இறுதியில் கந்தபுராணக் கட்டுரைகளைப் பெய்து வெளியிட வேண்டுமென விழாக்குழுவினர் பெரிதும் விரும்பினர். அவ்விருப்பம் பல காரணங்களால் நிறைவேறாமற்போயிற்று. கந்தபுராணக் காண்டங்களாகிய உற்பத்திகாண்டம், அசுரகாண்டம், மகேந்திர காண்டம், உயுத்தகாண்டம், தேவகாண்டம், தட்சகாண்டம் இவற்றினை அறிவின் செல்வர்களான இந்து அறநிலையக் கழக விரிவுரையாளர் சமரபுரிமுதலியார், வித்துவான் கோ. வில்வபதி, வித்துவான் மு. அரசன் கண்ணனார், பி. ஓ. எல்., வித்துவான் K. இலக்குமித் தாயாரம்மாள், வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், மயிலை சிவ. முத்துக்குமாரசாமி முதலியார் இவர்கள் முறையே ஒவ்வொரு காண்டத்தினை மேற்கொண்டு வரலாற்றுக்குறிப்பு, கச்சியப்பரின் புலமை, நயங்கள் முதலியவற்றைத் தெளிந்த நடையில் எழுதியுதவினர். இவர்கட்கு எம் மனமார்ந்த நன்றி.

இனி, சென்ற ஐந்து திங்கள்களுக்கு மேலாக மறைத்திரு உருத்திரகோடீசுரரைத் தலைவராகக் கொண்ட முத்துவிழாக்குழு, கிழமைதோறும் கூடிப் பெருமுயற்சியை மேற்கொள்ளவும், அவனவற்றை எல்லாம் முதல் தொடங்கி முடிவுவரை உள்ளக் கிளர்ச்சியுடன் செயலாற்றத் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தார் முன்னிற்க இவ்விழாவும் மலரும் பொதுளும் மாபெருஞ் சோலை காணப் பெறுகின்றது. ஆதலின் அவர் தமக்கு எம் உளமார்ந்த நன்றி.

தமக்கெனப் பெருமை வேண்டா தனிவீறுற்ற முனிவரவர்கள் இவ்விழாவிற்கு இசைந்தமைக்கும், இவ்விழாவினைத் தென் ஆப்பிரிக்கா, யாழ்ப்பாணம், போன்ற மிகத் தொலைவில் வாழும் அன்பர்களும் தென்னிந்திய கிளைச்சங்கத்தினரும் கொண்டாடி மலருக்கு வேண்டிய அளவு உதவியதற்கும் தம் காலத்தி னருமையைக் கருதியும் சிறந்த கட்டுரைகளைத் தந்த பெருமக்களுக்கும் குன்றாத ஊக்கத்துடன் இரவு பகல் பாராது அச்சிட்டுத் தந்த அச்சகத்தார்க்கும் நன்றி; நன்றி.

சிலருடைய கட்டுரையை வெளியிட முடியாமைக்கு வருந்த வேண்டியிருக்கின்றது; தாள் பஞ்சமும் அச்சகத்துக்கு ஆள் பஞ்சமும் தடையாயின; எனினும் அவற்றைத் திங்கள் வெளியீடாகிய செங்குந்த மித்திரனில் வெளியிட முடிவு செய்யப்பட்டிருக்கின்றது; ஆகவே அறிஞர் மன்னிப்பாராக.

செந்தமிழ் வாழ்க! சிவநெறி ஓங்குக! முனிவரின் சிறப்பு பொலிக.

—விழாக் குழுவினர்.

# என் வாழ்க்கை வரலாறு

## காஞ்சி - நாகலிங்கன்

பாலாறு பாய்ந்து பல்வளங் கொழிக்கும் சான்றோர் நிறைந்த தொண்டை நன்னாட்டின் தலைநகராகிய காஞ்சிபுரத்தை யடுத்துப் பேட்டையென்னும் பெயருடன் பல சிற்றூர்கள் உள்ளன. அவற்றுள் பிரதாபராயன் பேட்டையென்பதும் ஒன்று. அவ்வூர் இப்போது ஐயம்பேட்டைக் கருகிலுள்ள ஏக்கனும்பேட்டை யென்னும் ஊரில் ஒரு தெருவின் பெயராக வழங்கி வருகிறது. மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த எனது மூதாதையருள் பிரதாப முதலியார் என்பவர் ஒருவர். அவர் அக்காலத்திலிருந்த ஒரு மகமதியச் சிற்றரசன் ஆட்சியில் உத்தியோகஞ்செய்து பிரதாபராயன்என்றபட்டம் பெற்றதோடு ஒரு சிற்றூரையும் இனமாகப் பெற்றார் என்றும் அவ்வூர் எங்கள் குடும்ப ஆட்சியிலேயே பல ஆண்டுகள் இருந்து வந்ததென்றும் எங்கள் வீட்டு முதியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனால் அவ்வூராட்சி எங்கள் குடும்பத்தைவிட்டு விலகி ஒரு தெருப் பெயராகமாறியதற் குரிய காரணமுங் காலமும் விளங்கவில்லை. இவ்வாறு தம் பட்டப் பெயரால் ஒரூரினை இனமாகப் பெற்ற எனது முன்னோராகிய அப் பிரதாபராயர் என்பவரது இயற்பெயர் இன்னதெனத் தெரியவில்லை. அவர் வழிவந்த ஆசிரியர் சரவணப்பெருமாள் முதலியார் என்பவர் என் தந்தையார் ஆவர். என்தாயார்பெயர் மனோன் மணியம்மையார் என்பதாகும். யான் பிறந்தது இரத்தாட்சி யாண்டு ஐப்பசித் திங்கள் ஆறும் நாளாகும்.

திராவிடமாபாடிய கர்த்தரான சிவஞான முனிவரது மாணக்கர் பரம்பரையில்வந்தமுத்துக்குமாரசாமி தேசிகர் என்னுஞ் சைவப் பெரியாரிடத்து என் தந்தையார் கல்வி பயின்று வந்தார். வாலாஜாபாத்து மிலிட்டரி பாடசாலையில் இவர் (தமிழாசிரியராக) இருந்துவந்தார். பாலிநதி புராணம், சிவகாமி யம்மைபிள்ளைத்தமிழாகிய நூல்கள் இவரால் இயற்றப்பெற்றன. இவரது மாணக்கருள் பிரபல ஆசிரியர் கச்சபாலய தேசிகரும் ஒருவர்.

யான், எனது ஐந்தாவது வயதில் குமாரதேவர் பரம்பரையினரும் என்தந்தையாரின் மாணவருமாகிய மேற்கண்ட வீரசைவர் கச்சபாலய தேசிகரைக் கொண்டு கல்வி துவக்கப்பெற்றேன். இளமையிலேயே என் தந்தையை இழந்த யான் ஐயம்பேட்டையில் என் பாட்டியார் வீட்டிலிருந்து

கொண்டு வள்ளுவப்பாக்கம் சீனிவாச முதலியாரிடம் படித்து வந்தேன். இவர் என் தந்தையாரிடம் கல்வி பயின்றவராவர். இவரால் இயற்றப்பட்ட 5000 செய்யுட்களைக் கொண்ட பாரதம் இன்னும் அச்சிடப்பெறாமல் இருக்கிறது. பன்னிரண்டாவது ஆண்டுமுதல் யான் நெசவுத் தொழிலினை மேற்கொண்டேன். இரண்டோராண்டுகட்குப் பின்னர், அக்காலத்திற் பிரபல வியாபாரியாகவிருந்த இரங்கூன் முருகேச முதலியாரின் மனைவியார் இறந்துபோன சமயம் அவர்கள் பெண்வயிற்றுப் பேரனாகிய இராஜாம்பேட்டை பஞ்சாட்சர முதலியாரால் (மானேசர், கமிசரியேட்) சென்னைக்கு வரவழைக்கப்பெற்றுச்சென்று அங்கேயே தங்கிவிட்டேன். அந்நிலையில் சென்னை ஆர்மி குலோத்திங்போர்டு மானேசராகவிருந்த எனது சிறியதந்தையார் புஜங்கராவ் முதலியாரால் தமது சொந்த மகன்போலவே வளர்க்கப்பெற்று வந்தேன். என் தாயாரும் புஜங்கராவ் முதலியார் மனைவியாரும் உடன் பிறந்தவர்கள். நான் புஜங்கராவ்முதலியார் வீட்டுக்கு வந்தபிறகு அவருக்குத் தியாகராய முதலியார் என்னும் ஒரு மகன் பிறந்தார். இப்போது சென்னைப் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராக இருந்துவரும் ம. சண்முகசுந்தர முதலியார் M.A, L.T. இத்தியாகராய முதலியாரின் மூத்த மகனாவர்.

புஜங்கராவ் முதலியாரின் முன்னோர்கள் இன்றைக்கு ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் காஞ்சிபுரம் ஐயம்பேட்டை பெரிய தெருவிலிருந்து சென்னை மயிலாப்பூருக்குவந்து குடியேறினார்கள். இம்மயிலாப்பூரார்குடும்பத்திற் பிறந்தவர்கள் அன்றுமுதல் இன்றுவரை தொடர்ந்து ஆங்கிலம் படித்து உத்தியோகம் செய்து வந்திருக்கிறார்கள்என்பது அவ் வீட்டுக்கணக்கு முதலியவை ஆங்கிலத்திலேயே யெழுதப்பட்டிருப்பதனால் தெரியவருகிறது. யான் இளமையிலேயே யெனது பெற்றோர்களை யிழந்த காரணத்தால் என்வளர்ப்புத்தந்தையாக அமைந்த புஜங்கராவ் முதலியாரே தம் குடும்பத்தைச் சேர்ந்த காமாட்சியம்மையென்னும் பெண்ணை எனக்கு வாழ்க்கைத் துணையாக மணமுடித்து வைத்தார்.

யான் சென்னைக்கு வந்தபிறகு ஆங்கிலம் படிப்பதற்கு வேண்டிய வசதிகளிருந்தும் எனக்குத் தாய்மொழியாகிய தமிழைக் கற்க வேண்டுமென்கிற ஆர்வம் மிகுந்திருந்தபடியால் சித்தாந்த சரபம், அஷ்டாவதானம், பூவை. கலியாணசுந்தர முதலியாரவர்களை யடுத்து, மறைசையந்தாதி, நால்வர் நான்மணிமாலை முதலிய பிரபந்தங்களும், திருவிளையாடற் புராணம், பெரியபுராணம் முதலிய சைவபுராணங்களும், தமிழ் மறையாகிய திருக்குறளும் பிறவும் கற்றேன். வித்துவான் திருமயிலை சண்முகம் பிள்ளையவர்களிடம் இராமாயணமும், இராயபுரம் ஜக்காராவ்முதலியார் (இறந்தவர்) அவர்களிடம் நன்னூலும் பயின்றேன். பெரியபுராண

வுரையாசிரியர் திருவண்ணுமலை யாதினம் குன்றக்குடி ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளிடம் (பிற் காலத்துத் திருவாவடுதுறை யா தீனத்து பட்டத்தி லெழுந் தருளியிருந்த) ஸ்ரீலஸ்ரீ அம்பல வாண சுவாமிகளுடன் சிவதத்து வவிவேகம் பாடங் கேட்டேன். எனது இருபத்தோராவது வய தில், (பிற்காலத்தில் வைதிகசைவ சித்தாந்த சண்டமாருதம் என் னும் பட்டத்தோடு பிரசித்தி பெற்று விளங்கிய) சென்னை சூளை சோமசுந்தர நாயகர் அவர்களு டன் காஞ்சிபுரம் உபயவேதாந்தம் முத்துக்கச்சபேசுர சிவாச்சாரிய சுவாமிகளிடம் சமயவிசேட தீக் கைகள் பெற்றேன். இருபத்தைந் தாவது ஆண்டில் திருவாமாத் தூரில் தண்டபாணி சுவாமிகள், திருப்புகழ் சுவாமிகள், முருக தாச சுவாமிகள் என்னும் பெயர் களுடன் வீற்றிருந்தருளிய சுவா மிகளிடத்தில் கௌமார தீக்கை பெற்றேன்.

நாட்டுவரலாற்றையும் பெரி யோர்கள் வரலாறுகளையும் உள் ளபடியே அப்போதைக்கப்போது குறித்து வைத்துப் பின் சந்ததி யார்க்கு உதவுமாறு செய்யும் பழக்கம் நம் நாட்டில் இல்லை யாகையால் யான் நேரில் அறிந் தும் கேள்விப்பட்டும் உள்ளபல பெரியோர்கள் சம்பந்தமான குறிப்புக்களையும் இவ்வரலாற்றிற் குறிக்குமாறு நண்பர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்கி எனக்குத் தெரிந்தசில வரலாற்றுக் குறிப்புக் களை என் வரலாற்றுக்கிடையே குறிப்பிடுகின்றேன்.

### தண்டபாணி சுவாமிகள்

திருத்தணிகை வண்ணமஞ்சரி யென்னும் நூலையியற்றிய யான் என் கௌமார தீக்ஷாகுருவாகிய திருப்புகழ்த் தண்டபாணி சுவா மிகளின் முன்னிலையில் தெரிவிக்க விரும்பித் திருவாமாத்தூர்க் குச் சென்றேன். அதனை யன்பு டன் பார்வையிட்டருளிய சுவாமி கள் பெரிதும் மகிழ்ந்து,

"நற்றணிகை வேலனுக்கு
நங்காஞ்சி நாகலிங்கம்
சொற்றவண்ண மஞ்சரியைச்
சூழ்வார்க்குக்—கொற்றம்
முழுதும் பெறக்கிடைக்கும்
மூவுலகிற் பல்லோர்
எழுதும் புகழ்ச்சி
யுண்டாமே"

எனும்பாடலைத் திருவாய் மலர்ந் தருளி வண்ணக்களஞ்சியம் என் னும் சிறப்பினையும் அடியேனுக்கு வழங்கியருளினார்கள். பின்னர் யானியற்றிய தென்கடம்பந் துறைப்பதிற்றுப்பத் தந்தாதி யைக்கண்ணுற்ற சுவாமிகள் கீழ்க் காணுஞ் செய்யுட்களைச் சிறப்புப் பாயிரமாக வழங்கினார்கள்.

கடம்பந் துறைவாழ்கம்
கந்தன் கழற்றாள்
இடம்பற்றத் தாதிவனைத்
திட்டான்—தடம்பலசூழ்
கச்சிநகர் வந்த
நவிநாக லிங்கனுமை
மெய்ச்சிலம்பிற் றோன்றுகுல
வேள்,

தெய்வகுஞ்சரிக்கும்
 இருவார்ந்த வள்ளிக்கும்
மெய்வளப்பா மாலை
 விளம்பினன்—கைவடிவேற்
கந்தன் மகிழ்ந்து
 கருணைசெயக் கச்சிநகர்
வந்தவிர்ந்த நாகலிங்க
 மால்.

நம் கண்டபாணி சுவாமிகள் இயற்றிய பாடல்களுள் இதுகாறும் ஏறக்குறையப் பன்னீராயிரம் பாடல்களே அச்சிடப்பெற்று வெளிவந்துள்ளன. சுவாமிகள் விரும்பியபடியே முருகப்பெருமான் காட்சியளிக்க வில்லையென்ற வருத்தத்தால் கழுகுமலை, பழநி முதலியதலங்களில் சுவாமிகளாற் கிழித்தெறியப்பட்ட ஏடுகளிவிருந்தனபோக எஞ்சிய வற்றுள் ஐம்பதினுயிரத்துக்கு மேற்பட்ட பாடல்கள் இன்னும் வெளிவராதிருக்கின்றன. சுவாமிகள் பாடிய பாடல் முழுவதும் எட்டுப்பிரதியாகத் திருவாமாத்தூர் மடத்திற் பாதுகாப்பில் வைக்கப்பெற்றுள்ளன.

திருநெல்வேலி நகரில் சைவ வேளாள குலத்திற் றேன்றிய சுவாமிகள் உரியகாலத்திற்பள்ளியில் வைக்கப்பெற்றாராயினும் எட்டாம் வயதிலேயே முருகன் திருவருளால் தமிழ்ப் பாமாலைபாடத் தொடங்கினர்.

இவர் இல்வாழ்க்கையி லிருந்துகொண்டே சைவவைணவத் திருக்கோயில்கட்குப் பலமுறை யாத்திரையாகச் சென்று வணங்கித் தெய்வப்பாமாலை பல இயற்றியுள்ளார். விழுப்புரத்தையடுத்துள்ளதும், சைவசமய ஆசிரியர்களாலும் அருணகிரிநாத சுவாமிகளாலும் பாடப்பெற்றதுமாகிய திருவாமாத்தூரில் கடைசியாக ஒன்பதாண்டுகள் தங்கியிருந்து முருகன் திருவடிநிழலையடைந்தார்கள். இவரது சந்ததியார்கள் இன்னும் இவ்வூரில் சிறந்த தமிழ் அறிஞர்களாக இருக்கின்றார்கள்.

சுவாமிகள் தம் காலத்தில் எந்தெந்தப் பெரியோர்களை எங்கெங்கு சந்தித்து என்னென்ன பொருள்களைப்பற்றிபேசினர்கள் என்னென்ன குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன என்பன போன்றவற்றைத் தம்முடைய பாடல்களிலேயே யமைத்துப் பாடியுள்ளார்கள். யாத்திரையாகச்சென்ற சுவாமிகள் ஒருசமயம் வேலூரிற் றங்கியிருந்த போது பிராமணரொருவரும் வேளாளரொருவரும்சுவாமிகளிடம்வந்து வடமொழியே யுயர்ந்தது தமிழ் தாழ்ந்தது என்று வாதஞ் செய்தார்கள். அதுகேட்ட சுவாமிகள் இருமொழிகளும் ஒத்தனவேயன்றித் தம்முள் ஏற்றத்தாழ் வுடையன அல்ல எனப் பலவாறு விளக்கிக்கூறியும் அவ்விருவரும்ஏற்றுக் கொண்டாரல்லர். பின்னும் வாதந் தொடர்ந்து நடந்தது. இவர்கள் பிடிவாதத்தைக்கண்ட சுவாமிகள் தமிழே வடமொழியினும் உயர்ந்தது என்னும் உண்மையினைத் தம் வாதத்தால் நிலைநிறுத்துவாராயினர். இவ்வாதம் ஒருநாளிரவு விடியுமளவும் நிகழ்ந்தது. வாதத்தில்தோற்ற அவ்விருவரும் சுவாமிகளது பேச்சுவன்மையால் தான் தமிழ் உயர்வுடையதாகச் சாதிக்கப் படுகிறதன்றி உண்மை

யவ்வாறன்று என மீண்டும்மறுத் துரைத்தனர். அதுகேட்ட சுவாமிகள், தம்மால் வழிபடப்பெறும் வேற்படையின் முன்னிலையில் இருசாரார் கருத்தினையும் திருவுளச் சிட்டெழுதி எடுக்கச்செய்வோமெனத்தெரிவித்த முடிபினை அவ்விருவரும் ஒத்துக்கொண்டார்கள். பின்னர் வடமொழியே உயர்ந்தது, தமிழேயுயர்ந்தது, தமிழ் தாழ்ந்தது, வடமொழி தாழ்ந்தது, இரண்டும் ஒத்தனவே என்பன முதலிய தொடர்களைக்கொண்ட சிட்டுக்கள் குலுக்கியிடப்பெற்றன. ஒரு சிறுமியைக் கொண்டு எடுக்கச் செய்ததில் "தமிழே உயர்ந்தது" என்ற முதல்சிட்டே கிடைத்தது. அது கண்ட சுவாமிகள் தம் வழிபடுகடவுளாகிய முருகன் தமிழே யுயர்ந்ததென உலகிற்கு அறிவிக்கும்படி தமக்கு இட்ட ஆணைச்சீட்டாகஅதனையெண்ணித் தமிழின் சிறப்பினைத் தமிழலங்காரம் என்றநூலால் வெளிப்படுத்தியுள்ளார்கள். அன்று நடந்த வாதத்தினையும் அவ்வாறே செய்யுட்களி லமைத்துப்பாடி யிருக்கிறார்கள். 'உலகோர் மெச்ச' என்ற வண்ணத்தில்

*தனிவாச முற்றதென்ற*
*லாற்றற் படைத்த*
*பொதியா சலத்திலன்று*
*தோற்றிப்பழுத்த*
*தமிழே யுயர்ச்சியென்று*
*சீட்டுக்கொடுத்த பெருமாளே.*

என இக் கருத்து குறிக்கப்பட்டிருக்கிறது.

இந்நூல் தமிழரனைவரும் படித்துணர்தற்குரிய தாகும்.

திருக்குறளாசிரியர் தம்நூலில் உய்த்துணரவைத்தவீட்டுப்பாலினை நான்காவதாக வெளிப்படக் கூறக்கருதிய சுவாமிகள் நாற்பாலும் சேர்த்து மநுநெறித்திருநூல் என்றபெயராற் பாடக்கருதி உலகப்பேராசிரியராகிய தெய்வப் புலவர் செய்தருளிய திருக்குறளுக்குத் தம்நூல் எத்துணையுந் தாழ்ந்ததே என்று உலகர்க்கு அறிவிக்கு முகத்தால் திருக்குறள் அதிகாரத்தொகை நூற்றுமுப்பத்து மூன்றிற் குறைத்து நூற்று முப்பது அதிகாரங்களையுடையதாகத்தம் நூலை இயற்றினார்கள்.

சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளைக் கூடலூரிலும், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களை மாயூரத்திலும், மாம்பழக்கவிராயரைப் பழநியிலும், ஆறுமுக நாவலரைச் சென்னையிலும்கண்டு அளவளாவியதாகச் சுவாமிகள் தம்பாடல்களிற் குறிப்பிட்டுள்ளார்கள். புலையுங் கொலையுந் தவிர்ந்த அன்புநெறியே உலக முழுவதும் பரவவேண்டு மென்பதைத் தம் வாழ்க்கை நோக்கமாகக்கொண்டு சுவாமிகள்வாழ்ந்துவந்தார்கள். இவர்களது முயற்சியால்பல இடங்களில் உயிர்ப்பலிகள் நிறுத்தப்பெற்றன. இவர்களியற்றிய தில்லைத்திருவாயிரம், பழநித்திருவாயிரம், திருவரங்கத்திருவாயிரம், புலவர்புராணம் தெய்வத் திருவாயிரம், திருச்செந்தில் எழாயிரம் என்னும் பெருநூல்களுள் தில்லைத் திருவாயிரம் சென்னைப் பெத்து நாய்க்கன் பேட்டைக் காசி விசுவ

நாதர் கோயிலில் அடியேன் எடுபடிக்கச் சுவாமிகளால் அரங்கேற்றப்பெற்றது. ஒருநாள்,

பலிக்கென்று ஒருஓடுகைக்கொண்டு
வெண்ணீறணி பான்மையராய்
புலிக்கன்று அன்றுரித்ததோல்
போர்த்துத்
தில்லைப் புண்ணியனார்
இங்குவந்தார்.

என்றபாடலைப் படித்து நிறுத்தியபோது சென்னை சூளை அவதானம்பாப்பையர் வீதியில் தில்லை நடராஜர் கோயில் எடுப்பித்த துபாஷ் வெங்கடேச முதலியார் கோவணத்தோடு திருநீறு உருத்திராக்க மணிந்து புலித்தோல் போர்த்துக் கொண்டு ஒரு திருவோட்டைக்கையிலே தாங்கியவராய்த் திடீரென்று சபையெதிரே வந்துநின்றார். சுவாமிகள் உடனே யெழுந்து ஓடிவந்து 'இதோ வந்தா'ரென்றுசொல்லி அவரைத் தழுவிக்கொண்டார். சபையோர் ஆச்சரிய முற்றனர். அச்செல்வர் பிறகு அப்படியே துறவியாகப் போய்விட்டார். நூலரங்கேற்றுமிடத்திற்குச் சுவாமிகள் ஒருநாள் சென்றுகொண்டிருந்த பொழுது பூண்டி அரங்கநாத முதலியார் என்னும்பேரறிஞர் தம் தாயாரது இறுதிக்கடனை முடித்துக்கொண்டு எதிரேவருபவர் சிவவேடத்தோடிருந்த சுவாமிகளைக்கண்டு தெருவிலேயே வீழ்ந்து வணங்கினார். சுவாமிகளும் அவரை அன்புடன் வாழ்த்தினார்கள்.

பூண்டி அரங்கநாத முதலியார்

ஊற்றுமலைக் கந்தசாமிக்கவிராயர் அரங்கநாத முதலியாரவர்களைப் பார்க்க விரும்பியவர் என்னையும் உடனழைத்துச்சென்று முதலியாரவர்கட்கு அறிமுகஞ் செய்துவைத்தனர். அன்றுமுதல் முதலியாரவர்கட்கும் எனக்கும் தொடர்ந்த நட்பு உண்டாயிற்று. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தாரால்பொற்பதக்கம்தரப்பெற்றமையாற் கணிதசாத்திரத்தில் மாத்திரம் முதலியார் நிபுணரென்று பலர்கருதலாம். உண்மை யதுவல்ல. ஆங்கிலம்,தமிழ்,அறிவியல் நூல், வரலாறு, ஆட்சிமுறை, பொருள் புரிநூல், உடற்பயிற்சி, சதுரங்கம் முதலிய எல்லாத் துறைகளிலும் துறைபோயவர். அவர் அறியாத கலைகள் இல்லையென்றேசொல்லலாம். அவர் ஆங்கில நாட்டிற்குச் சென்றதில்லையெனினும் அந்நாட்டுமக்களது வரையறை வாழ்க்கை முறையினையுணர்ந்து தமது வாழ்க்கையிற் கையாண்டவராவர். இவர் சென்னைப் பிரசிடென்சி கல்லூரியில் பேராசிரியராக இருந்தபோது இவர்தம் ஆசிரியராகிய துரைமகனாரே கல்லூரித் தலைவராக விருந்தார். தம் ஆசிரியர் எது கூறினும் மறுத்து பேசலாகாதெனஇந்நாட்டிற் பலர்கொண்டுள்ள கொள்கை முதலியா ரவர்கட்குப் பிடிக்காது. தவறுகண்ட விடங்களில் அஞ்சாது கண்டிக்குமியல்புடையவர் இவர். இவ்வியல்புடைய முதலியாரிடத்தில் ஒரு சிறு தவறாயினுங் கண்டுபிடித்தற்குரிய செவ்வியினைக் கல்லூரித் தலைவர் எதிர்பார்த்திருந்தார். ஒருநாள் முதலியார் கல்லூரிக்கு வந்தபோது தொடக்க நேரத்திற்கு இரண்டு

நிமிடந் தாமத மேற்பட்டது. இங்ஙிலையில், இவ்வாறு நேரங் கழித்து வந்தது என் எனக் கல்லூரித்தலைவர் வினவினர். 'குறித்த நேரத்திலேயே யான் வந்துவிட்டேனே' என முதலியார் விடையிறுத்தார். 'கடிகாரத்தைப்பார்' என்றார் கல்லூரித்தலைவர். இக்கடிகாரந் தவறுடைத்தென்றார் முதலியார். உடனே விண்மீன் பார்வைநிலையத்தை டெலிபோன் வழியாகக் கேட்டதிற் கல்லூரி கடிகாரமே பிழைபட்டதென்றும், முதலியார் சிறிதும் காலந்தவறி வந்திலர் என்றும் உணர்ந்த கல்லூரித்தலைவர் முதலியாரைப்பெரிதும் பாராட்டி மகிழ்ந்தனர்.

## கச்சிக்கலம்பக அரங்கேற்றம்

பூண்டி அரங்கநாத முதலியாரியற்றிய கச்சிக் கலம்பகம் சென்னைத் தொண்டமண்டலம் துளுவ வேளாளர் உயர்நிலைப் பள்ளியில் சிதம்பரம் ஈசானமடம் இராமலிங்க சுவாமிகள் தலைமையில் அரங்கேற்றப் பெற்றது. உலகப் பிரசித்திபெற்ற நூலாசிரியரையும், அரங்கேற்றும் சுவாமிகளையும் முன்னிட்டுத் திரளான புலவர் பெருமக்கள் குழுமியிருந்தார்கள். தமிழன்னையின் பெருந்தவப் புதல்வராகிய சுவாமிகள் ஆழ்ந்த கல்வியும் விரிந்த அறிவும் அமைந்தவராதலால் கச்சிக் கலம்பகத்திலுள்ள ஒவ்வொரு பாடலையும் தெளிவாக விளக்கிப் பொருள் கூறியதோடல்லாது தாம் படித்த பல பழைய கலம்பகங்களிலிருந்தும் அவ்வத்துறைக்குரிய பாடல்களையும் மேற்கோட்செய்யுட்களாக எடுத்துக்காட்டி யினிது விளக்கினார்கள். இங்ஙனம் சுவாமிகள் மேற்கோளுக்கு எடுத்தாண்டதில் கலம்பகம் என்னும் ஒரு பிரபந்த வகையிலடங்கிய நூல்களே மிகுதியாக இருக்குமானால் ஏனையபிரபந்தவகைகளில் சுவாமிகளுக்குள்ள பயிற்சியை நாம் எங்ஙனம் அறிதல் கூடும் எனப் புலவரனைவரும் வியந்து போற்றுவாராயினர்.

## சிதம்பரம் ஈசானமடம் இராமலிங்க சுவாமிகள்

காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையம் மண்டபத்தெருவில் செங்குந்தமரபிற்றோன்றிய நல்லக்கம்ப முதலியார் என்னும் பெரும் புலவரொருவர் இருந்தார். இவர் மாதவச் சிவஞான யோகிகளின் மாணாக்கர் பரம்பரையில் வந்த மகாவித்துவான் பூசை. நமசிவாய முதலியாரின் முதன்மையானமாணாக்கருள் ஒருவர். சைவசித்தாந்தக் கொள்கையினராக விருந்த இவர், ஏகாத்துமவாதம் வீரசைவம் முதலிய பிற சமயக்கொள்கையினவாகிய நூல்களிலும் நன்கு தேர்ந்திருந்தார். தெருவில் இளவயதினரான ஒருவர் பிச்சையெடுத்து வருவதைக் கண்ட இவர் அவரது முகப்பொலிவை நோக்கி அவரையழைத்து அவரது உணவுக்கு வேண்டிய வசதிசெய்து, வேதாந்தநூல்களிற்றேர்ச்சியும் பற்றுமுடைய தம் நண்பரொருவரும் வெள்கும்படி அவ்விளைஞர்க்கு மனப்பாடஞ்செய்யும் நிலையிற் பாடஞ் சொல்லி வைத்தார். பின்னர்

சென்னையிலிருந்த சில வித்து வான்களிடம் மேலும் படிக்கு மாறு வசதிசெய்து அனுப்பினார். அவ்வாறு சென்னைக்கு வந்த இளந்துறவியார் சோமுசெட்டி யார் என்பவரால் ஆதரிக்கப்பெற் றுப் பலரிடமும் பாடங்கேட்டுவந் தார். இவரது கூரிய அறிவையும் நல்லொழுக்கத்தையுங் கண்ட செட்டியார் தாம் சிதம்பரத்தில் நடத்திவந்த வியாபாரத்தில் இவ ரைப் பங்காகச்சேர்த்து அவ் விடத்திற்கு அனுப்பி யிருந்தார் இவர் சிதம்பரத்தில் தங்கியிருந்த போது நடராசர் காலசந்திக்கட் டளை தில்லைநாயக முதலியார் முதலிய பல மாணவர்கட்குப் பாடஞ்சொல்லித் தமிழைவளர்த் தார். பின்னர் அங்குள்ள ஈசான மடத்திற் சேர்ந்து துறவறம் பூண்டார். இச்சுவாமிகளே கச் சிக்கலம்பகம் அரங்கேற்றிய சிதம் பரம் ஈசான மடத்து இராமலிங்க சுவாமிகள் ஆவார். சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத்தினையும் குமரகுருபரர் பிரபந்தத்தினை யுந் திரட்டிக் குறிப்புரையும் எழுதி முதன்முதலாக வெளியிட்டவர் அச்சுவாமிகளேயாவர். இவ்விரு பிரபந்தத்திற்கும் பின்னுள்ளோர் எழுதிய குறிப்புரை யாவும் பெரி தும் இவர் தம் குறிப்புரையினைப் பின்பற்றியனவென்றே சொல்ல லாம்.

### சிதம்பரம் காலசந்திக் கட்டளை தில்லை நாயக முதலியார்

சிதம்பரம் எனவழங்குந் தில்லை நகரை யறியாத தமிழர் ஒருவரும் இரார். சைவர்களுக்கு முதன் மையான தலம் தில்லையேயாகும். அங்கு ஐந்தொழிற் கூத்தாடியரு ளும் நடராசப் பெருமானுக்கு அன்றாடம் நடக்கும் ஆறுகால பூசைகளில் முதன்மையாகக் கரு தப்படும் காலசந்திப்பூசை தென் னாட்டிலுள்ள செங்குந்தப் பெரு மக்களால் சிதம்பரம்வெல்லப் பிறந்தான் முதலியார் குடும்பத் தவர் மூலமாக தொன்றுதொட் டுச் செய்யப்பட்டுவருகிறது. பல நூற்றாண்டுகட்கு முன்னரே இக் காலசந்திப்பூசையைச் செங்குந் தர்கள் ஏற்றுக்கொண்டு ஆண்டு தோறும் தலைக்கட்டுக்கு இவ் வளவுபொருள் தரவேண்டுமென கட்டுப்பாடான ஏற்பாடுகள் செய்து அக்காலத்தில் தில்லையிற் செங்குந்தமரபில் தக்கோராய் விளங்கிய வெல்லப் பிறந்தான் முதலியாரும் அவர் வழிவரு வோரும் மேற்படி ஏற்பாட்டின் படி பொருள்தண்டி இப்பூசையை நடத்திவரவேண்டுமெனத் திட் டம் வகுத்துவைத்தார்கள். இப் பொறுப்புள்ள பெருஞ்சிவத் தொண்டை ஏற்றுக்கொண்ட பெரியார் குடும்பத்தில் அறுபது ஆண்டுகளுக்குமுன் தில்லைநாயக முதலியார் என்னும் ஒரு பெரி யார் தோன்றினார். இவர் இப் போது மேற்படி காலசந்திக்கட் டளையை நடத்திவரும் சிதம்பர நாத முதலியாரது பெரியதந்தை யாராவர். சிதம்பரம் ஈசானமடம் இராமலிங்க சுவாமிகளின் மாண வராய இவர் தமிழ்த் தாய்க்கும் சைவத்திற்கும் இளமையிலிருந் தே தொண்டாற்றிவந்தார். பல சைவ சித்தாந்தக் கூட்டங்களி லும் அரிய சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். இவர் தமிழறிஞர் பலராலும் பாராட்டப் பெற்றவர்

சிதம்பரத்தில் செந்தமிழ்ச்சங்கம் என்னும் ஒரு தமிழ்க் கழகம் நிறுவி அதன் துணைத்தலைவராக விருந்து, பல மாணவர்கட்குப் பாடஞ் சொல்லி வந்ததோடு சென்னை யரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட தமிழகராதிக்குழுவின் கௌரவ உறுப்பினராகவும் இருந்துவந்தார். மேலும் நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலையில் பண்டித வகுப்பில் நாடோறும் ஒன்றிரண்டு மணிநேரம் ஊதியமின்றிப் பாடஞ் சொல்லிவந்தார்.

தில்லைநாயகமுதலியார் சிதம்பரம் குமரவேள்மும்மணிக்கோவை யென்னும் அரிய சித்தாந்தக் கருத்துக்களடங்கிய நூலொன்று இயற்றியுள்ளார். இந்நூல் திருவாங்கூர் பொன்னம்பலம்பிள்ளை, தில்லைத் தீட்சிதர்கள், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் ஆகிய பெரியோர்களாற் பாராட்டப் பெற்றிருக்கிறது.

திருநாரையூர் முத்துக்குமார பிள்ளை, வேலூர் ஊர்ஹீஸ் கல்லூரித்தமிழாசிரியர் C.S. இராஜா பிள்ளை, காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் ஏகாம்பர ஐயரென்னும் வீரசைவர், நாவலர் கலாசாலை யாசிரியர்களான வேங்கடாசலம்பிள்ளை, கிருட்டினமூர்த்தி ஐயர் முதலிய பலர் நமது முதலியாருடைய மாணாக்கர்களாவர். தமது குடும்பத்து முன்னோர்களைப்போலவே தில்லைநாயகமுதலியாரும் புலவர்களையும் அடியார்களையும் அன்போடு போற்றியும் ஆதரித்தும் வந்தார்.

## ஞானம் இரண்டா? நான்கா?

யான் சிகாழிப் புராணத்தை அச்சிட்டபோது அதிற் 'படரிருஞானமும் பெற்றனராங்கே' என வருமிடத்தில் இருஞானம் என்பதற்கு பரஞானம் அபரஞானம் ஆகிய இரண்டு ஞானம் எனக் குறிப்பிற் காட்டியிருந்ததை சோமசுந்தர நாயகர் 'ஞானம் நான்கே இரண்டல்ல' எனக்கூறிக் கண்டித்தார். செந்தமிழ்த் தாயினிடம் தாம்கொண்டுள்ள அளவு கடந்த பேரன்பினாலும், வடமொழியாளர் தாமெனக் கூறிக் கொண்டு நம் தமிழைச் சிதைக்கும் நோக்கத்தினாற் சிலர் செய்து வரும் அட்டூழியங்களை வெறுத்தமையினாலும் பரிதிமாற்கலைஞன் எனத் தமது பெயரை மாற்றிக்கொண்ட தனித் தமிழ்ப் பேராசிரியராகிய சூரியநாராயண சாத்திரியாரின் ஆசிரியர் மதுரை சபாபதிமுதலியார், சபாபதி நாவலர், செந்திநாதையர், ஆசிரியர் பூவை கலியாணசுந்தர முதலியார் ஆகியவர்கள் இச்சமயத்தில் ஞானம் இரண்டென எழுதியதனை ஆதரித்தார்கள். அக்காலத்தில் ஞானபேத சூடாமணி, ஞானபேதவிளக்கம் முதலிய நூல்கள் வெளியாயின. பின்னர் இவ்வாதம் திருவாவடுதுறையாதீனம் வரையிற்சென்று அங்கு பட்டத்துச் சுவாமிகள் திருமுன்னர்க் கூடிய சைவப் பெருமக்களால் ஞானம் இரண்டென்றுகூறுவதே சாலச் சிறந்ததெனத் தீர்மானிக்கப் பெற்றது.

சிதம்பரத்தில் செந்தமிழ்ச்சங்கம் என்னும் ஒரு தமிழ்க் கழகம் நிறுவி அதன் துணைத்தலைவராக விருந்து, பல மாணவர்கட்குப் பாடஞ் சொல்லி வந்ததோடு சென்னை யரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட தமிழகராதிக்குழுவின் கௌரவ உறுப்பினராகவும் இருந்துவந்தார். மேலும் நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலையில் பண்டித வகுப்பில் நாடோறும் ஒன்றிரண்டு மணிநேரம் ஊதியமின்றிப் பாடஞ் சொல்லிவந்தார்.

தில்லைநாயகமுதலியார் சிதம்பரம் குமரவேள்மும்மணிக்கோவை யென்னும் அரிய சித்தாந்தக் கருத்துக்களடங்கிய நூலொன்று இயற்றியுள்ளார். இந்நூல் திருவாங்கூர் பொன்னம்பலம்பிள்ளை, தில்லைத் தீட்சிதர்கள், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாதையர், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள் ஆகிய பெரியோர்களாற் பாராட்டப் பெற்றிருக்கிறது.

திருநாரையூர் முத்துக்குமர பிள்ளை, வேலூர் வூர்ஹீஸ் கல்லூரித்தமிழாசிரியர் C.S. இராஜா பிள்ளை, காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் ஏகாம்பர ஐயரென்னும் வீரசைவர், நாவலர் கலாசாலை யாசிரியர்களான வேங்கடாசலம்பிள்ளை, கிருட்டினமூர்த்தி ஐயர் முதலிய பலர் நமது முதலியாருடைய மாணாக்கர்களாவர். தமது குடும்பத்து முன்னோர்களைப்போலவே தில்லைநாயகமுதலியாரும் புலவர்களையும் அடியார்களையும் அன்போடு போற்றியும் ஆதரித்தும் வந்தார்.

## ஞானம் இரண்டா? நான்கா?

யான் சீகாழிப் புராணத்தை அச்சிட்டபோது அதிற் 'படரிரு ஞானமும் பெற்றனராங்கே' என வருமிடத்தில் இருஞானம் என்பதற்கு பரஞானம் அபரஞானம் ஆகிய இரண்டு ஞானம் எனக் குறிப்பிற் காட்டியிருந்ததை சோமசுந்தர நாயகர் 'ஞானம் நான்கே இரண்டல்ல' எனக்கூறிக் கண்டித்தார். செந்தமிழ்த் தாயினிடம் தாம்கொண்டுள்ள அளவு கடந்த பேரன்பினும், வடமொழியாளர் தாமெனக் கூறிக் கொண்டு நம் தமிழைச் சிதைக்கும் நோக்கத்தினற் சிலர் செய்து வரும் அட்டூழியங்களை வெறுத்தமையினும் பரிதிமாற்கலைஞன் எனத் தமது பெயரை மாற்றிக்கொண்ட தனித் தமிழ்ப் பேராசிரியராகிய சூரியநாராயண சாத்திரியாரின் ஆசிரியர் மதுரை சபாபதிமுதலியார், சபாபதி நாவலர், செந்திநாதையர், ஆசிரியர் பூவை கலியாணசுந்தர முதலியார் ஆகியவர்கள் இச்சமயத்தில் ஞானம் இரண்டென எழுதியதனை ஆதரித்தார்கள். அக்காலத்தில் ஞானபேத சூடாமணி, ஞானபேதவிளக்கம் முதலிய நூல்கள் வெளியாயின. பின்னர் இவ்வாதம் திருவாவடுதுறையாதீனம் வரையிற்சென்று அங்கு பட்டத்துச் சுவாமிகள் திருமுன்னர்க் கூடிய சைவப் பெருமக்களால் ஞானம் இரண்டென்றுகூறுவதே சாலச் சிறந்ததெனத் தீர்மானிக்கப் பெற்றது.

### சென்னையில் முதற் சைவசபை

யான் இருபது வயது இளைஞனாக இருந்தகாலத்தில் சென்னை அருணாசலம் வீதியிற் செங்குந்த மரபினரான திருமயிலை தணிகாசல முதலியார் வீட்டிற் சைவசித்தாந்த சபையொன்று கோடக நல்லூர் சுந்தரசிவாச்சாரிய சுவாமிகளைக்கொண்டு துவக்கப்பெற்றது. இவர்கள் அப்போது ஏகாம்பரேசுவரர் அக்கிரகாரத்திற் சூதசம்ஹிதைசொல்லிக்கொண்டிருந்தார்கள். இச்சபையே சென்னையில் முதன் முதலாக நிறுவப்பட்ட சைவசபையாகும். இதன் ஆதரவில் சைவ சித்தாந்த சாத்திர ஆராய்ச்சி, சைவச்சொற்பொழிவுகள் முதலியவை நடைபெற்றுவந்தன. இங்கு ஆறுமுக நாவலர்மாணவர் திருமயிலை தணிகாசல முதலியார் பெரிய புராணம், கந்தபுராணம், திருவிளையாடற்புராணம் முதலிய எல்லாச் சைவபுராணங்களையும் சொல்லி முடித்தார். இச்சபைக்கு யானும் தவறாது சென்று சொற்பொழிவுகளைக் கேட்டுவந்தேன்.

### சிவஞான சுவாமிகள் நூல் நிலையம்

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்துள் சிவஞான முனிவர் நூல் நிலையம் எனது முயற்சியாலும் சிவநேயர் பலரது உதவியாலும் நிறுவப்பட்டது. புதுக்கோட்டை நீதிபதியாகவிருந்த யாழ்ப்பாணம் தாமோதரம் பிள்ளையவர்களிடம்

பூமருவு பொய்கைப்
புதுக்கோட்டை வாழ்புனிதன்
பாமருவு பாரதிசேர்
பண்புடையோன்—தாமருவு
தாமோதரன்றனைத்
தன்னகத்தில் தானடக்கும்
தாமோ தரன்சமுகம் சார்.

என்ற வெண்பாவை எழுதியனுப்பினேன்.

அதைக்கண்ட பிள்ளையவர்கள் மகிழ்ந்து தாம் அச்சிட்ட எல்லா நூல்களையும் எனக்குக் கொடுத்தனுப்பினர். அவற்றுள் சிதம்பர முனிவரால் இருநூறு நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டியெழுதப்பட்ட ஒருபா வுண்மையுபதேசவுரையும் ஒன்றாகும். இந்நூல்களையெல்லாம் சிவஞான முனிவர் நூல் நிலையத்திற்கே கொடுத்துவிட்டேன். இவ்வாறு பல்லாற்றானும் முயன்று இந்நூல் நிலையத்திற்கு நூல்கள் பலசேர்த்தேன்.

### மெய்கண்ட சந்தான சபை

சென்னை அருணாசலேசுவரர் வசந்தமண்டபத்தில் நிறுவப்பெற்றுச் செயலாற்றிவந்த மெய்கண்ட சந்தான சபையின் ஆதரவில் திருக்கச்சூர் வேலு தேசிகரைக்கொண்டு தேவார பாடசாலையொன்று நடத்திவந்தோம். இச்சபைக்கு எனது ஆசிரியர் அஷ்டாவதானம் முதலியார் தலைவராகவும் யான் துணைத்தலைவராகவும் இருந்தோம். மெய்கண்டான் கல்லூரியையும் இம்மண்டபத்தில்தான் நடத்திவந்தேன்.

அருணாசலேசுவரர் கோயிலிலுள்ள அணியண்ணாமலைக் கோயிலில் உஷக்கால பூசையைத்

தொடங்கி நடத்திவந்தேன். அக்கோயிலின் கோபுறத் திருப்பணியும் பிறவிடங்களைப் பழுது பார்த்துத் திருத்திய பணியும் பெரிதும் எனது முயற்சியாலேயே நிறைவேறின.

திருவாளர்கள் கா. நமச்சிவாய முதலியார், சிவஞானம்பிள்ளை, கா. ர. கோவிந்தராஜ முதலியார் முதலியோர் உயர்மன்ற நீதிபதி டி. வி. சேஷகிரி ஐயரவர்களைத் தலைவராகக்கொண்டு இம்மன்றத்தை நிறுவியபோது யானும் உடனிருந்து தொண்டாற்றி வந்தேன். சோமசுந்தர நாயகரவர்கள் சென்னை ஏகாம்பரேசுவரர் ஆலயத்தில் நாற்பது நாள் நடத்திய நால்வர் திருநாளில் அவருடனிருந்து தொண்டாற்றியுள்ளேன்.

## பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்

அண்மையில் முருகப்பெருமான் திருவடியடைந்த பாம்பன் சுவாமிகள் வடமொழி தென்மொழியாகிய இருமொழிகளையும் நன்குதேர்ந்த பெரும்புலவர். ஆரவாரமற்ற மிக்க தூய்மையும் அமைதியும் நிறைந்த துறவு நிலையில் நின்றவர். முருகன் திருவடிகளைக் கணமேனும் மறவாத தவ நிலையினர். திருப்பா, பரிபூரணானந்தபோதம் முதலிய பல அரிய ஞான நூல்களை இயற்றியுதவிய அருளாசிரியருமாவர். இப்பெரியாரைப்பற்றி யறியாத சென்னைவாசிகள் இருக்கமாட்டார்கள். காஞ்சிபுரத்தையடுத்த ஐயம்பேட்டைப் பெரியதெரு வென வழங்கும் கந்தப்பர் தெருவில் திருக்கோயில்கொண்டுள்ள கந்தப்பெருமான்மீது பாடிய கந்தகோட்ட மும்மணிக்கோவையும், நவவீரர் நவரத்தனமும் ஆகிய இரு பிரபந்தங்களையும் சுவாமிகளே கந்தப்பர் கோயிலில் அரங்கேற்றினார்கள். அதுபோது அவற்றைக்கேட்டு மகிழும் பேறு பெற்ற யான் சிறப்புப்பாயிரமாக ஒருபாடல் பாடியுள்ளேன். நூல்களைக்கேட்டு மகிழ்ந்த ஐயம்பேட்டைவாசிகள் சுவாமிகளைப் பல்லக்கில் வைத்து நகர்வலஞ் செய்வித்துப் பாராட்டினர். இவ்வரங்கேற்றத்தின்போது ஐயம்பேட்டையிற் பெரும்புலவராக விளங்கிய சூரப்பமுதலியாரவர்களும் பிறபுலவர்களும் வந்திருந்தனர்.

## ஐயம்பேட்டை சூரப்ப முதலியார்

ஐயம்பேட்டையிற்பெரும்புலவராக விளங்கிய இம்முதலியார் எனது நெருங்கிய உறவினருள் ஒருவர். இவர் சிவஞான முனிவர் மாணுக்கர் பரம்பரையினராகையால் தணிகைப்புராணம் காஞ்சிப்புராணம் கந்தபுராணம் முதலிய சைவநூல்களை மரபுதவறுது பாடஞ்சொல்வதில் வல்லவர். இவர்தம் மாணுக்கருள் எனது நண்பர் சென்னை இராமலிங்கத் தம்பிரானும் ஒருவர். சம்பந்த சரணுலய சுவாமிகளியற்றிய கந்தபுராணச் சுருக்கத்துக்குச் சுருக்கமாக அன்பர் வேண்டுகோட்கிணங்கி அறுநூறு பாக்களில் இவர்ஒருநூல்செய்துள்ளார். இவர் தம் புதல்வராகிய காளப்ப

தொடங்கி நடத்திவந்தேன். அக்கோயிலின் கோபுரத் திருப்பணியும் பிறவிடங்களைப் பழுது பார்த்துத் திருத்திய பணியும் பெரிதும் எனது முயற்சியாலேயே நிறைவேறின.

திருவாளர்கள் கா. நமச்சிவாய முதலியார், சிவஞானம்பிள்ளை, கா. ர. கோவிந்தராஜ முதலியார் முதலியோர் உயர்மன்ற நீதிபதி டி. வி. சேஷகிரி ஐயரவர்களைத் தலைவராகக்கொண்டு இம்மன்றத்தை நிறுவியபோது யானும் உடனிருந்து தொண்டாற்றி வந்தேன். சோமசுந்தர நாயகரவர்கள் சென்னை ஏகாம்பரேசுவரர் ஆலயத்தில் நாற்பது நாள் நடத்திய நால்வர் திருநாளில் அவருடனிருந்து தொண்டாற்றியுள்ளேன்.

## பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்

அண்மையில் முருகப்பெருமான் திருவடியடைந்த பாம்பன் சுவாமிகள் வடமொழி தென்மொழியாகிய இருமொழிகளையும் நன்குதேர்ந்த பெரும்புலவர். ஆரவாரமற்ற மிக்க தூய்மையும் அமைதியும் நிறைந்த துறவு நிலையில் நின்றவர். முருகன் திருவடிகளைக் கணமேனும் மறவாத தவ நிலையினர். திருப்பா, பரிபூரணானந்தபோதம் முதலிய பல அரிய ஞான நூல்களை இயற்றியுதவிய அருளாசிரியருமாவர். இப்பெரியாரைப்பற்றி யறியாத சென்னைவாசிகள் இருக்கமாட்டார்கள். காஞ்சிபுரத்தையடுத்த ஐயம்பேட்டைப் பெரியதெரு வென வழங்கும் கந்தப்பர் தெருவில் திருக்கோயில்கொண்டுள்ள கந்தப்பெருமான்மீது பாடிய கந்தகோட்ட மும்மணிக்கோவையும், நவவீரர் நவரத்தனமும் ஆகிய இரு பிரபந்தங்களையும் சுவாமிகளே கந்தப்பர் கோயிலில் அரங்கேற்றினார்கள். அதுபோது அவற்றைக்கேட்டு மகிழும் பேறு பெற்ற யான் சிறப்புப்பாயிரமாக ஒருபாடல் பாடியுள்ளேன். நூல்களைக்கேட்டு மகிழ்ந்த ஐயம்பேட்டைவாசிகள் சுவாமிகளைப் பல்லக்கில் வைத்து நகர்வலஞ் செய்வித்துப் பாராட்டினர். இவ்வரங்கேற்றத்தின்போது ஐயம்பேட்டையிற் பெரும்புலவராக விளங்கிய சூரப்பமுதலியாரவர்களும் பிறபுலவர்களும் வந்திருந்தனர்.

## ஐயம்பேட்டை சூரப்ப முதலியார்

ஐயம்பேட்டையிற்பெரும்புலவராக விளங்கிய இம்முதலியார் எனது நெருங்கிய உறவினருள் ஒருவர். இவர் சிவஞான முனிவர் மாணாக்கர் பரம்பரையினராகையால் தணிகைப்புராணம் காஞ்சிப்புராணம் கந்தபுராணம் முதலிய சைவநூல்களை மரபுதவறாது பாடஞ்சொல்வதில் வல்லவர். இவர்தம் மாணாக்கருள் எனது நண்பர் சென்னை இராமலிங்கத் தம்பிரானும் ஒருவர். சம்பந்த சரணாலய சுவாமிகளியற்றிய கந்தபுராணச் சுருக்கத்துக்குச் சுருக்கமாக அன்பர் வேண்டுகோட்கிணங்கி அறுநூறு பாக்களில் இவர் ஒருநூல்செய்துள்ளார். இவர் தம் புதல்வராகிய காளப்ப

முதலியார் என்பவரும் புலமை நிரம்பியவரே.

புதுக்கோட்டை இராமச்சந்திர புரம் தி. நா. முத்தையசெட்டியா ரவர்கள் F. R. S. A. 1924-ஆம் ஆண்டு அச்சிட்டுத் தக்கோர்க்கு இனுமாக வழங்கிய திருவருட் பாப் பதிப்பிற்குப் பல குறிப்புக் கள் என்னுற்கொடுக்கப்பெற்றன. எனது நண்பர் மோசூர் கந்த சாமி முதலியார் B.A., அப்பதிப் புக்குத் தாமெழுதிய முன்னுரை யில் இச்செய்தியைக் கீழ்க்கண்ட வாறு குறித்துள்ளார்கள்.

"காஞ்சிபுரம் ஸ்ரீ ஞானப்பிர காச சுவாமிகள் ஆதீனத்தில் துற வறம் பெற்றவரும் மெய்கண்ட சாத்திரப் பிரவர்த்தகருமாகிய நாகலிங்கமுனிவர் என்பால் உத விய திருநெறிக் குறிப்புக்களைக் கொண்டும் இப்பதிப்பு வெளி வருவதாயிற்று"

அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்கசுவாமிகளின் மாண வருள் நரசிங்கபுரம் வீராசாமி முதலியாரும் ஒருவர். இவர் செங்குந்த மரபினர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழா சிரியராக இருந்த இவர், காஞ்சி புரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் எழுதிய "சேனைத் தலைவர் மரபு விளக்கம்" என் னும் நூலுக்கு மறுப்பாகச் "சேனைத்தலைவர் மரபு விளக்கச் சூறுவளி" என்ற நூலையெழுதி யவராவர். இந்நூல் என்னுற் பதிப்பிக்கப்பெற்ற செங்குந்தர் பிரபந்தத்திரட்டில் இடம்பெற் றுளது. காஞ்சிபுரம் சபாபதி முதலியார் சேனைத் தலைவரென் றும் இலைவணிகரென்றும் சொல் லப்படும் குலத்தினராவர். செங் குந்தர்கள் முருகப்பெருமான் துணைவர்களாகிய நவவீரர்கள் வழியில் வந்தவர்களென்றும்முசு குந்தச் சக்கரவர்த்திக்குப் படைத் துணைவர்களா யிருந்தவர்களென் றும் வழங்கும் புராணக்கதைக ளைத் தமது மரபிற்குரியவை யென்றுகூறுமுகத்தான் சேனைத் தலைவர் மரபுவிளக்கம் என்ற நூல் காஞ்சி சபாபதி முதலியா ரால் இயற்றப்பெற்றது. அதனைக் கண்டித்துப் பழைய கதையே வலியுடைத் தென்று வீரா சாமி முதலியார் சேனைத்தலைவர் மரபுவிளக்கச் சூறுவளியென்னும் இம்மறுப்பினை எழுதுவா ராயினர்.

செங்குந்தமரபிற்றேன்றி வறு மையில் வாடி மெய்யடியார் பத்தி யிற்சிறந்த சென்னைக் கந்தசாமி முதலியார் என்பவர் இராமலிங்க சுவாமிகளைப்பணிந்து தமது வறுமை நோயொழியப் பிரபுக்க ளுக்குச் சீட்டுத்தரும்படி வேண்ட,

> எட்டாலுங் கேளய லென்பாரை
> நான்சிரித் தென்னைவெட்டிப்
> போட்டாலும் வேறிடங் கேளே
> னென்னுணைப் புறம்விடுத்துக்
> கேட்டாலும் என்னை யுடையா
> னிடஞ்சென்று கேட்பனென்றே
> நீட்டாலும் வாயுரைப் பாட்டாலும்
> சொல்லி நிறுத்துவனே

என்று பாடிக்கொடுத்து உடைய பெருமானிடத்தேகேட்கவேண்டு மென்று போதித்தருளினர்.

சென்னைச் சபாபதி முதலியார்

செங்குந்தமரபினராகிய சென்னைச் சபாபதிமுதலியார் என்பார் வீட்டுத் திருமணத்திற்கு வரும்படி வேண்டிக்கொண்டதற்கிணங்கச் சுவாமிகள் வந்தபோது சட்டை பாகை முதலிய அணிகளின்றிச் சென்றால் வாயிற்சேவகன் திருமண இல்லத்திற்குள் நுழைய விடானென் றெண்ணி எதிர்வீட்டுத் திண்ணையிலிருக்க அதனையறிந்த அவ்வீட்டிற்குரியார் சபாபதி முதலியாருக்குணர்த்த எதிர்பாராதவகையில் நிகழ்ந்தவற்றிற்காக வருந்திய முதலியார்சுவாமிகளைப்பணிந்து திருமணத்திற்கு வருமாறு அழைத்தபோது,

> சோடில்லை மேல்வெள்ளைச்
> சொக்காயில்லை நல்லசோமனில்லை
> பாடில்லை கையிற் பணமில்லை
> தேகப் பருமனில்லை
> வீடில்லை யாதொரு வீறுப்புமில்லை
> விவர்கமது
> நாடில்லை நீ நெஞ்சமே
> எந்தவாறினி நண்ணுவையே.

என்று பாடி உரிய தலைவர்க்குச் சில வுண்மைகளைப் புகட்டினர்.

சென்னை ஏழுகிணற்றுத் தெருவில் வீரசைவ அநுட்டான சீலராகிய திருமழிசை வயித்தியலிங்க தேவர் என்னும் செங்குந்தர் இராமலிங்கசுவாமிகள் சென்னையிலிருந்தகாலத்தில் அவர்பால் மிக்க அன்புபூண்டொழுகியவர். அவர் தம் குமாரராகிய முத்துச்சாமிமுதலியார் என்பார் சிவபிரான்மீது பாடிய பாக்களைக் கண்ணுற்ற இராமலிங்க சுவாமிகள்,

> ஒருவகைப் பொருடெரித் துயவுநீர்
> மறைகணான் கொன்றிவாழ்க
> உயரான் தருமேழு நான்கதா
> மாகம முலகில்மல்க
> இருவகைப் பவமொழித் திலகும்
> வெண் ணீற்றின மெங்கு மோங்க
> இணையினல் லறமுனும் பயனொரு
> நான்குமீ டேறிவெல்க
> பொருவலற் றரையரெத் திசையுறு
> நீதியாற் பொலிகயாரும்
> புகழ்சிவாத் துவிதசித் தாந்தமெய்ச்
> சரணரெண் புல்காளும்
> திருவருட் பனுவல்சொற் றிடுமவர்க்
> கெண்டிரு சேர்க வாதைச்
> செப்புமுத் துச்சுவா மிக்கவிக்
> குரிசில்சீர் செழிக மாதோ

என்ற சாற்றுக்கவியைத் தந்தருளினர்.

பிறகு வள்ளலார் வடலூர்ப் பெருவெளியில் எழுந்தருளியிருந்தகாலத்து சென்னையில்இம் முத்துச்சாமி முதலியாருக்குத் திருமணம் நடந்தேறியது. அக்காலை வள்ளலார் தாம் திருமணத்திற்கு வரத்தடையாயின இவையெனக் குடும்பகோரம் என்னுந் தலைப்பிட்ட 412 அடிகளாலாகிய அகவலொன்று வரைந்து கொளுந்தமூர் சீனிவாச வரதாச்சாரியார் மூலமாகக் கொடுத்தனுப்பினர். முத்துச்சாமிமுதலியார் இவ்வகவலை மனப்பாடஞ் செய்து அவர் சொல்ல மோசூர் கந்தசாமி முதலியார் B.A. எழுதி வைத்திருந்தனர். அது சித்தாந்த சரபம் கலியாணசுந்தர யதீந்திரரால் பரிசோதிக்கப்பட்டுத் தொழிற்கல்வியென்னும் பத்திரிகையில் என்றால் ஆனந்த ஆண்டு ஆவணி புரட்டாசித் திங்கள் மலர்களில் வெளியிடப்பட்

டது. இக்குடும்ப கோரம் இராமச்சந்திரபுரம் தி. நா. முத்தையசெட்டியாரது திருவருட்பா பதிப்பில் இடம்பெற்றிருக்கிறது.

இம் முத்துச்சாமி முதலியார் ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு நிறுவப்பெற்றுச் சமூகத்தொண்டாற்றிவந்த செங்குந்தப்புலவர் சங்கத்தின் முதன்மையான உறுப்பினராவர்.

## சிதப்பரம் இராமலிங்க ஸ்வாமிகளும் செங்குந்தரும்

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் சென்னை யருணைசலம் வீதியில் திருமழிசை முத்துச்சாமிமுதலியார், வடிவேல் முதலியார், சிதம்பரம் இரத்தினசபாபதி முதலியார், திருப்பத்தூர் குமாரசாமி முதலியார் முதலிய பல புலவர் பெருமக்கள் செங்குந்தப் புலவர் சங்கம் ஒன்றை நிறுவி, ஈட்டி யெழுபது, செங்குந்தர் பிள்ளைத் தமிழ், திருக்கைவழக்கம், வல்லான் காவியமென வழங்கும் வீரநாராயணர் விஜயம், கவனக்குறிப் பட்டவணையோடு கூடிய ஒட்டக்கூத்தர் சரித்திரம், கந்தபுராணம் (உரையுடன்) முதலிய பல நூல்களை யச்சிட்டு வெளியாக்கியதுடன் சமூக சீர்திருத்தமுஞ் செய்துவந்தார்கள். அச்சங்கத்தார் செங்குந்தர் சங்கப்பட்டயம் என்னும் ஒரு சிறு நூலை 1896 ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டார்கள். அதில் திருவிரிஞ்சை, திருப்பத்தூர், காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம் முதலிய இடங்களிலிருந்த செங்குந்தகுல மடாதிபதிகள் நாளடைவில்வேறுஇனத்தவராகி விட்டார்கள் என்றும், இப்பட்டயம் எழுதிய காலத்தில் இம்மரபில் அனாதியாகவே வந்துள்ள குருபீடங்களில் காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் ஆளவந்த வள்ளலார் ஆதீனத் திருமடத்தில் ஆசாரியர் சதாசிவ தேசிகரும், கணபதி தேசிகரும், சிவசங்கர தேசிகரும் திருவாலங்காட்டுக் கார்கோடக மடாலய ஆசாரியர் திருமழிசை சிவப்பிரகாச தேசிகரும், படப்பைநாட்டு மடத்தில் குருசாமி தேசிகரும், சோம்பாக்கம் கயிலாயபுரி மடத்தில் காளத்தி தேசிகரும், பெருநகர் கணபதி மடத்தில் பரஞ்சோதி தேசிகரும் ஆக ஆங்காங்கு குலகுருக்கள் இருக்க என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. மேலே காட்டிய ஐந்து குருபீடங்களுள் இப்போது காஞ்சிபுரம் திருமழிசை படப்பை ஆகிய மூன்று ஆதீனத்தவர்களே இன்றைக்கும் செங்குந்த குலத்தவர்களென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். எஞ்சிய பெருநகர், சோம்பாக்கம் என்னுமிடங்களிற்செங்குந்த குருமார்கள் இப்போதில்லை யாகையால் பட்டயத்திற் காட்டியுள்ள திருவிரிஞ்சை திருப்பத்தூர் முதலிய ஆதீனத்துக் குருமார்களைப் போலவே இவர்களும் தம் குலப் பெயரை மாற்றிக்கொண்டனர் எனத் தெரிகிறது. திருச்சிராப்பள்ளிசில்லா குவாகத்திலுள்ள குருபீடமும், கோவைசில்லா பெருந்தலையூரிலுள்ள பரஞ்சோதி சுவாமிகள் மடாலயமும் இப்பட்டயமெழுதிய சங்க வுறுப்பினர்க்குத் தெரியாதுபோலும்.

செங்குந்தகுல குருபீடங்களுள் கச்சியாளவந்த வள்ளலார் ஆதீனம் முதன்மையானது. இவ்வாதீனத்துக் குருக்கள்மார் பெரும்பாலும் இருமொழிகளிலும் புலமை வாய்ந்தவர்களாய்ச் சொல்வன்மையும் செல்வாக்கும் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. இன்றைக்குத் தொண்ணூற்றுறு ஆண்டுகளுக்குமுன் இவ்வாதீனத்துத் தலைவராக இருந்த கச்சபேசுர தேசிகர் சிதம்பரத்திலும் அதனைச்சூழ்ந்த இடங்களிலுமுள்ள செங்குந்தர்களுக்கும் வேளாளருக்கும் ஏற்பட்ட மாறுபாடு காரணமாகச் சாலிவாகன சகாப்தம் 1769 பராபவ ஆண்டு தை 22 ஆம் நாள் ஆங்குச் சென்று அங்குள்ள செங்குந்தர்களுக்கு வேளாள குருவை விலக்கித் தாமே குருவாயிருந்து முதன்முதலாகச் சிவதீக்கை செய்துவைத்தார். முத்துக்குமார தேசிகரும் அவர் புதல்வராகிய இக்கச்சபேசுர தேசிகரும் இவர்தம் மகனாகிய சதாசிவ தேசிகரும் இருமொழிகளிலும் புலமை வாய்ந்தவர்கள். சதாசிவ தேசிகர் ஆகமக்கிரியா விதிகளில் இணையற்ற பயிற்சியுடையார். இவர் கூறும் சித்தாந்தத்தைப் பூருவபக்கஞ் செய்வது மிகவும் அருமை. இவர் சாம்பசிவ சாத்திரியாரிடத்தில் வடமொழி இலக்கிய இலக்கணங்களும், ஏகாம்பர குருக்களிடம் ஆகமங்களும் பயின்றவர். சிவஞான முனிவர் மாணவர் பரம்பரையினராகிய காஞ்சிபுரம் வித்துவான் பூசை கந்தசாமி முதலியாரிடத்தில் தமிழ் பயின்றார். இவர் தம் சுவீகாரப் புத்திரரும் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளின் மாணவரும் ஆகிய திரு. சிவசாமி தேசிகர் அவர்கள் கச்சியாளவந்த வள்ளலார் ஆதீனத்தின் குருவாக இதுபோது இருந்து வருகிறார்.

வடநூற்கடலும் தென்றமிழ்க் கடலும் நிலைகண்டுணர்ந்த சிவஞான யோகிகள் எனப் பாராட்டப்பெறும் சிவஞானமுனிவரவர்கள் தமது வாழ்க்கையின் பிற்பகுதியிற் பெரிதும் காஞ்சிபுரத்திலேயே தங்கிப் பல பெரிய நூல்களை யியற்றினார்களென அறிகின்றோம். திருவாவடுதுறை யாதீனத்துக் கலைச்செல்வராகிய முனிவரவர்கள் திருவாவடுதுறையினையும் விடுத்துக் காஞ்சியிலேயே பலநாள் தங்கியிருக்கும்படி அவர்களைப்பேணிப் போற்றிய பெருஞ்செல்வர் காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் சாலைத் தெருவிலிருந்த மணியப்ப முதலியார் என்னும் செங்குந்தப் பெரியார் ஆவார். இவர் தாய்மொழியாகிய தமிழையும் திருநெறியாகிய சைவத்தையும் வளர்க்க வேண்டுமென்ற பேரார்வமும் சிவனடியார்பாற் பேரன்பும் நிரம்பப்பெற்றவர். சிவஞானசுவாமிகள் நீராடுதற்கெனத் தாம்வதிந்த சாலைத் தெருவின் கோடியில் வேகவதியாற்றின் வடகரையில் ஒருகுளமும், அக்குளத்தின் வடகரையில் சுவாமிகள் சிவபூசை செய்வதற்கும் மாணவர்கட்குப் பாடஞ்சொல்வதற்குமென ஒரு மண்டபமும் நந்தவனமும், குளத்தின் கீழ்க்கரையில் சுவாமி

கள் வழிபடுவதற்கென ஒரு பிள்ளையார் கோயிலும் அமைத்துச் சுவாமிகளுக்கும் வேண்டும் வசதிகளைச்செய்து போற்றிவந்தாரெனவும் மேற்படி நந்தவனத்திற்குத் தாமே தண்ணீரிறைப்பதுண்டெனவும் முதியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். சிவஞான சுவாமிகள்பொருட்டு மணியப்ப முதலியாரா லியற்றப்பெற்ற இவை முறையே மணியப்பன் குளம், மணியப்பன்சாவடி, மணியப்பன் நந்தவனம் என இன்றும் வழங்கப்பெறுகின்றன.

இவ்வாறு மணியப்ப முதலியாரால் ஆதரிக்கப்பெற்ற சிவஞான சுவாமிகள் முதலியார் வேண்டுகோட்கிணங்கிக் காஞ்சிப்புராணத்தை யியற்றியருளினர் எனவும் தாமியற்றிய புராணத்துள் தம்மை யாதரித்தமணியப்ப முதலியார் பெயரைக்குறித்து,

‘பொருவில் கச்சியம்புராணம்
வண்தமிழினிற் புகலென்
திருநிலம்புகழ் மணியப்பன்’

எனப்பாடத்தொடங்கிய நிலையில் சுவாமிகளுடனிருந்த மணியப்ப முதலியாரவர்கள் சுவாமிகளை வணங்கி முதல்வனாகிய ஏகம்பன் இயல்புரைக்கும் பெருநூலில் எளியேன் பெயரை யமைத்தல் ஒத்ததன்று எனத்தடுத்துரைத்தனரெனவும் அவரது உளநிலையறிந்து மகிழ்ந்த முனிவரவர்கள் அப்பாடலை

பொருவில்கச்சியம் புராணம்
வண்தமிழி னிற்புகலென்
திருநிலம்புகழ் மணிமதிற்
கச்சியேகம்பர்
திருவருட்குறி யான்றவர்
கூறிய சிறப்பால்
உரிமையுற்றெழும் ஆசையா
லுரைத்திட லுற்றேன்

என மாற்றியமைத்தன ரெனவும் காஞ்சிபுரத்தில் வழி வழியாகக் கேட்கப்படும் செய்தி இம்மணியப்ப முதலியா ரவர்களது நன்மாண்பினைத் தெள்ளிதின் விளக்குவதாகும்.

சிவஞான சுவாமிகளின் மாணவருள் ஒருவராகிய காஞ்சி சிதம்பரமுனிவர் என்பார் இம் மணியப்பமுதலியார்க்குப் புதல்வராவார். ஒருபாவுண்மை யுபதேசவுரை இவரால் இயற்றப்பெற்றதேயாம்.

காஞ்சிபுரத்திற் சிவஞான முனிவர் தங்கியிருந்தபோது இயற்றிய பெருநூல்களுள் சிவஞானபோதப் பேருரையாகிய திராவிட மாபாடியமும் ஒன்றாகும். மெய்கண்ட சாத்திரத்தில் நிரம்பிய பயிற்சியும் தமிழ் வடமொழி ஆகிய இருமொழிப் புலமையும் திருவருளனுபவமும் ஒருங்குபெற்ற சிவஞான முனிவரவர்களின் புலமையினை நன்குணர்ந்த கல்விச்செல்வர்களாகிய காஞ்சிநகரச் செங்குந்தர்கள் சுவாமிகளை யடைந்து மெய்கண்டார் அருளிய சிவஞான போதம் என்னும் சைவசித்தாந்த முதனூலுக்குச் சைவமரபு தவறாது பேருரையொன்று எழுதி யுதவ வேண்டுமெனவேண்டிக்கொண்டதுடன் அதனை யெழுதிமுடிக்குமளவும் சுவாமிகளுக்குவேண்டிய உணவு முதலிய வசதிகட்குத் தம் நகரச் செங்குந்தப் பொதுமக்கள்

ஒவ்வொருவரும் ஒவ்வொருநாள் படியளித்தற்குரிய திட்டத்தையும் நிறைவேற்றிச் சுவாமிகளைப் பேணிவந்தன ரெனவும் அவ்வன்பர்கள் ஆதரவுகொண்டே திராவிடமாபாடியம் நிறைவுபெற்றதெனவும் அறிகின்றோம். இதனை மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களும் தாம் எழுதிய மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் முதற்பகுதி 121 - வது பக்கத்தில்

"சிவஞான முனிவர் காஞ்சிபுரத்தின் ஒருபாலுள்ள திருவாவடுதுறை மடத்தில் இருந்து வந்தார். அவ் வூரிலிருந்த செங்குந்தர்கள் தினத்திற்கு ஒரு வீடாக முறை வைத்துக்கொண்டு உணவுப்பண்டங்கள் கொடுத்து அவரை ஆதரித்து வந்தார்கள். அங்கே இருக்கையில் காஞ்சிப் புராணம், சிவஞான போத பாஷியம் முதலியவற்றை இயற்றினர். தம்மை ஆதரித்துவந்த செங்குந்தர்களுக்குப் பஞ்சாட்சர உபதேசமும் தீட்சையும் செய்வித்துப் பூசையும் எழுந்தருளுவித்தார்" எனக்குறிப்பிட்டுள்ளார்கள்.

இவ்வரலாறு சிவஞானமுனிவரவர்களின் தவசிப்பிள்ளையிடம் திரு மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் நேரில் கேட்டறிந்ததெனவும் குறிக்கப்பட்டிருக்கிறது.

எனது நண்பர் காஞ்சிபுரம் பிள்ளையார்பாளையம் மந்தூர் சாமிநாதமுதலியார் அவர்களின் ஐந்தாம் பாட்டனாராகிய சரவண பத்தரெனப்பெறும் சரவண தேசிகரென்பார் சிவஞான சுவாமிகளின் பன்னிரு மாணவருள் ஒருவர். சுவாமிகளையாதரித்தவருள் இவருமொருவராவர். சிவஞான சுவாமிகள் தம்மாணவராகிய இவரது வீட்டிலும் அதனையடுத்துள்ள கச்சியானந்த ருத்திரேசர் திருக்கோயிலிலும் தங்கியிருப்பது வழக்கம் எனவும் சுவாமிகளும் அவர் தம் மாணவர்களும் கச்சியானந்த ருத்திரேசரைப்பற்றிப் பல பிரபந்தங்கள் செய்ததற்குச் சுவாமிகள் அங்குத்தங்கியிருந்ததென்றே காரணமெனவுங் கூறுவர். இச்சரவணதேசிகர் என்பார் திருவாவடுதுறை யாதீனத்துப் பரமாசாரியரால் தீக்கை செய்துபதேசிக்கப்பெற்றுத் துறவுபூண்டுஅவ்வாதீனத் தம்பிரான் அவர்களோடு நெருங்கி இருந்து பலநாள் அங்குத்தங்கி வாழ்வாராயினர்.

காஞ்சி சரவண தேசிகர் இயற்றிய நூல்களாவன: ஒருபா வுண்மையுபதேசம், வீட்டுநெறியுண்மை, பஞ்சாக்கர அனுபூதி, உபதேச சித்தாந்தவிளக்கம், ஒருபா வொருபஃது, முத்திமுடிவு, கச்சியானந்த ருத்திரேசர் பதிகம், சிவஞானயோகிகள் தோத்திரம் என்பனவாம்.

இவையனைத்தையும் தொகுத்துச் சரவணதேசிகர் சாத்திரத் திரட்டு என ஒரு தொகுதியாக யான் வெளியிட்டுள்ளேன். இச்சரவணதேசிகரது சமாதி வேகவதியாற்றங்கரையில் உளது. இவரது குருபூசைமுதலிய வழிபாடுகள் மந்தூர் சாமிநாதமுதலியார்

குடும்பத்தினரால் இன்றும் செய்யப்பெற்று வருகின்றன.

சரவணதேசிகர் வழிவந்த இம் மத்தூரார் குடும்பம் காஞ்சிபுரத்திலுள்ள செங்குந்தர் குடும்பங்களில் முதன்மையானவற்றுளொன்று. இக்குடும்பத்தினர் காஞ்சியில் முனிசிபாலிடி ஏற்பட்ட காலந்தொட்டு 60 ஆண்டுகள் வரை தொடர்ச்சியாகக் கவுன்சிலர்களாக இருந்தும் தாலூகா ஜில்லா போர்டுகளில் அங்கம் வகித்தும் வந்துள்ளார்கள். இக்குடும்பத்தின் இப்போதையதலைவர் ம. சாமிநாதமுதலியார் ஆவர்.

## காஞ்சி. பூசை நமசிவாயப் புலவர்

இவர் காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையம் மண்டபத் தெருவில் வாழ்ந்த செங்குந்தப் புலவராவார். சிவஞானமுனிவர் மாணவர் பரம்பரையிற் கல்விபயின்ற புலவர் பெருமக்களுள் முதன்மையானவர் இவரே. தமிழ்நூற் பரப்பனைத்தும் நன்கு தேர்ந்த இப் பெரியார் பாடஞ்சொல்லுங்கால், சுவடியைப் பாராமலே தொடர்ச்சியாகச் சொல்லும் மன வன்மையுடையவர் என்பர். காஞ்சி நகரத்தும் வெளியூர்களிலுமிருந்து வந்து இவர்பால் தமிழ் பயின்ற மாணவர்கள் எண்ணிலாதவராவர். சைவசித்தாந்தம், வேதாந்தம் ஆகிய இரு சமய நூல்களிலும் நல்ல பயிற்சியுடையவர். ஆயினும் இவரது அழுந்திய சமயக் கொள்கை சைவசித்தாந்தமே. எல்லா நற்குணங்களுக்கும் நிலைக்களமானவர். தாம் மாணவர்க்குப் பாடஞ் சொல்வதற்கென்று தனியே நேரம் வகுத்துக்கொள்வதில்லை. தமக்குரிய தொழிலாகிய நெசவுத் தொழிலின் சார்பாகப் பல தொழில்களை மேற்கொண்டு செய்யும் காலத்தும் தவறாது பாடஞ் சொல்லும் இனிய இயல்புடையவர். இவர் மிக மிக ஏழைக் குடும்பத்தவரெனினும் தம் மாணவர் எவரிடத்திருந்தும் பாடஞ் சொல்வதற்கென ஒரு சிறு தொகையும் ஏற்றுக்கொள்ளாத உறுதிப்பாடுடையவர் ஆவர். இவரது இயல் புணர்ந்து இவரை யாதரித்து வந்த செல்வராவார் காஞ்சி ஏகம்ப நாதர் திருக்கோயில் தருமகர்த்தாவாகவிருந்த சைவ வேளாளராகிய முனிசாமி முதலியாராவார். அவர் காலத்திலிருந்து நாலாம் தலைமுறையாகிய இன்றுவரை இப்புலவர் குடும்பத்திற்கும் தருமகர்த்தா அவர்கள் குடும்பத்திற்கும் நெருங்கிய நட்புத் தொடர்பு நீடித்துள்ளமை பாராட்டுதற்குரியதேயாகும்.

இப் புலவர் தாம் நெய்தஆடையினை விற்றற்பொருட்டு வெளிச் செல்லுங்கால் இவரை முதன் முதல் எந்தத் துணி வியாபாரி எதிர்ப்படினும் உடனே இப் புலவரை யழைத்து இவர் நெய்த ஆடையின் உயர்வு தாழ்வு நோக்காது வாங்கிக் கொண்டு அதற்குரிய பொருளைக் கொடுத்தனுப்புதலை வழக்கமாகக் கொண்டிருந்தார்களென்றால் இப்புலவரது பெருந்தகைமை காஞ்சி நகர மக்கள் அனைவர்க்கும் அக்காலத்தி

நன்கு தெரிந்திருந்தமை புலனுகின்றதன்றோ?

அருட்பிரகாச வள்ளலார்க்கும் இப்புலவர் பெருமானுக்கும் நெருங்கிய நட்பிருந்தது. வள்ளலாரவர்கள் தமக்குத் தெரிந்த மாணவர்களை இப்புலவர்பால் படித்தற்கு அனுப்புவது உண்டென்றும் இவ்விருவர்க்கும் அடிக்கடி கடிதப்போக்குவரத்து நடப்பதுண்டென்றும் தெரிகிறது. இவர் பல மாணவர்கட்குப் பாடஞ்சொல்லுங் கலையறிவு சிறக்கப் பெற்றுராயினும் பிற பெரியோர்கள் வாய்மொழியாகிய பொருளுரைகளை மாணவர் நிலையிலிருந்து கேட்டு மகிழ்வதிற் பெரு விருப்புடையவராவர். திருவண்ணமலையிலிருந்து யாத்திரையாகக் காஞ்சிபுரத்திற்கு வந்திருந்த ஒரு சுவாமிகளிடத்தில் இவர் கைவல்லியம் பாடங்கேட்டு வந்தார். அந்நூல் முற்றுப் பெறுமுன் சுவாமிகள் திருவண்ணமலைக்குத் திரும்பினர். அதையறிந்த நமசிவாய முதலியார் என்னும் இப் பெரியார் ஆசிரியராகிய சுவாமிகள் கருத்திற்குத் தடைகூறுவது மாணக்கர்க்கு அழகல்லவென்று எண்ணி, பல்லக்கிற் செல்லும் சுவாமிகளின் முகத்தைப் பார்த்தவண்ணம் பின்புறமாகவே நடந்து பாடங் கேட்டுச் சென்றூர். காஞ்சிபுரத்திற்குத் தெற்கே 25 கல் தொலைவிலுள்ள வந்தவாசி யென்னும் ஊரையடைந்ததும் கைவல்லிய பாடம் முற்றுப்பெற்றது. பின்னர் இவர் சுவாமிகளிடம் விடைபெற்றுக் காஞ்சிக்குத் திரும்பினர் என்னும் வரலாறு இவரது கல்வி விருப்பத்தையும் ஆசிரியர்பால் இவர் கொண்ட மதிப்பினையும் நன்கு விளக்குகின்றதன்றோ? பல பொருள்படச் சிலேடையாகப் பேசுந் திறமை இவர்பால் நன்கமைந் திருந்ததென்பதற்குப் பல சந்தர்ப்பங்கள் உண்டு.

## காஞ்சீபுரம் மகாவித்வான் பூசை. கந்தசாமி முதலியார்

தந்தையறிவு மகனறிவு என்றபடி பூசை. நமசிவாய முதலியார் அவர்களின் தவப் புதல்வராய்த் தோன்றிய பூசை. கந்தசாமி முதலியார் தமது அருமைத் தந்தையாரைப்போன்றே எல்லா நற்குணங்களும் அமையப்பெற்றிருந்ததோடு கலைமகள் திருநோக்கையும் நிரம்பப்பெற்றுப் பல மாணவர்கள் சூழப் புலவர் சிகாமணியாய் விளங்கினர். பாடம் சொல்லும் முறையிலும் தமது தந்தையாரையே பின்பற்றி வந்தார். உள்ளூர் வெளியூர் வாசிகளிடத்தில் நமசிவாய முதலியாருக்கிருந்துவந்த மதிப்பும் சிறப்பும் அப்படியே இவருக்கும் இருந்து வந்தது. பெரியபுராண உரை எழுதிய மகாலிங்க ஐயர் அப்போதைக்கப்போது தமக்குத் தோன்றும் ஐயங்களை கந்தசாமி முதலியாரிடம் சென்று தான் தீர்த்துக்கொள்வது வழக்கம். இவர்கள் காலத்தில் காஞ்சிபுரம் மண்டபத் தெரு வாசிகளுள் பெரும் பகுதியினர் புலவர்களாகவே யிருந்தபடியாலும் வெளியூர்ப் புலவர்கள் பலரும் அத்தெருவைநாடி வருவார்களாகையாலும் அத் தெரு தமிழ் மணங்கமழ்ந்தபடியே யிருந்தது.

முதலியார் அவர்கள் நெய்தற் றொழில் செய்யும் இடத்தை அடுத்த மேல் தரையும், தெருத் திண்ணையும் ஆயிரக்கணக்கான பெருமக்கள் உட்கார்ந்து பாடங் கேட்டு, உரையாடிய இடங்களா கும். சென்னையில் சைவர் திலக மாய் விளங்கிய யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலர் அவர் கள் ஒரு முறை ஒரு திங்கள் வரை காஞ்சியில் தங்கியிருந்து கந்தசாமி முதலியாரிடத்தில் பல சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்தார். அருட்பா மருட்பா விவாத காலத்தில் முதலியார் இராமலிங்க சுவாமிகளின் கட்சி யையே ஆதரித்து வந்தார். இத னலேயே அக்காலத்தில் காஞ்சியி லிருந்த அறிஞர்களிற் பெரும் பாலார் அக் கட்சியையே சார்ந்து நின்றனர்.

இவர்கள் புதல்வராகிய பூசை ஆறுமுக முதலியாரும் தமிழறி ஞராய்த் தம் முன்னோர்களைப் போல் பலருக்கும் பாடஞ் சொல்லி வந்தார். இப்போது செங்கற்பட்டு சென்ஜோசப் உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரியரா யிருந்து வரும் பூசை. நமசிவாய முதலியார் இவ் வாறுமுக முத லியாரின் மூத்த மகனுவர். முதல் நவசிவாயர் முதல் இரண்டாம் நமசிவாயர் ஈறு உள்ள நான்கு தலைமுறையினும் வந்தவர்கள் தொடர்ந்து தமிழ்ப் புலவர்க ளாய் விளங்கி வருவது பெரிதும் போற்றத் தக்கதாகும்.

## பூசை முதலியார் குடும்பத்து மாணவர்கள்

இக் குடும்பத்து முதல்வ ராகிய நமசிவாயப் புலவரிடத்தி லும் இவர் புதல்வராகிய கந்த சாமி முதலியாரிடத்திலும் வெளியூர்களிலிருந்து வந்து பாடங் கேட்ட மாணவர் பல ராயினும் கால நீட்சியால் அவர் களைப் பற்றிய குறிப்பெதுவும் தெரிதற்கில்லை. இவர்களிடம் தமிழிலக்கிய இலக்கணங்களும், சமய நூல்களும் பயின்ற பலர் பின்னர் தமிழ் நாட்டு மடங்கள் பலவற்றின் மடாதிபதிகளாக இருக்கும் பேறுபெற்றதுமுண்டு. நமசிவாயப் புலவரவர்க ளிடம் தமிழ் பயின்ற உள் ளூர் மாணவராவார் பூசை கந்த சாமி முதலியார், நல்லக்கம்ப முதலியார், மொட்டைசாமி முத லியார், தீர்த்தகிரி முதலியார், ஐயங்கார் குளம் நாராயணசாமி முதலியார், ஒற்றைத் தெரு தனிப்பாடல் வேலாயுத முதலி யார், பிரமநகர் செங்கல்வராய முதலியார், தர்மகர்த்தா முனி சாமி முதலியார் முதலிய பல ராவர். இவர்களுள் பூசை கந்த சாமி முதலியார் ஆசிரியர் நமசி வாய முதலியார் தானத்தி லிருந்து பாடஞ் சொல்லுவார். மேற்கூறிய மற்ற மாணுக்கர்கள் தனித் தனியே தம் மாணவர் கட்குப் பாடஞ் சொல்வதுண் டெனினும் பூசை முதலியார் வீட்டையே பொது ஆசிரியர் தானமாகக் கருதி அதற்கு முதன்மைகொடுத்துவந்தார்கள். பல சமய நூல்களினும் வல்லவர் களாகிய பூசை முதலியார் பரம் பரையினர் தமது கொள்கையிற் சைவ சித்தாந்திகளாயிருந்தும் அவர்கள் மாணவர்களாகிய தீர்த்தகிரிமுதலியார், மொட்டை

சாமி முதலியார், வேதாசல முதலியார், சோணாசல முதலியார் முதலிய சிலர் ஏகான்மவாதிகளாயிருந்து வந்தனர். கந்தசாமி முதலியாருக்கு அடுத்த நிலையில் எண்ணத்தக்கவர் நல்லக்கம்ப முதலியாராவர். இவர் சொல் வன்மை மிக்க வல்லாளர். உறுதியான சைவ சித்தாந்தக் கொள்கையினர். தம் காலத்து வாழ்ந்த புலவர் எவரேனும் பொருந்தாக் கொள்கைகளை நூல்வாயிலாக வெளியிடுவரேல் அவற்றை வன்மையாகக் கண்டித்து மறுப்புரை வரைவதிற் சிறிதும் பின்னடையாத உரவோர் ஆவர். காஞ்சிக்கு வரும் புலவர் யாராயினும் இவரையும் இவர்தம் ஆசிரியக் குடும்பத்தினரையும் பார்த்தபின்னரே தம் கடமையைச் செய்து போவது வழக்கம். இந் நல்லக் கம்ப முதலியாரே சிதம்பரம் ஈசானமடம் இராமலிங்க சுவாமிகளின் ஆசிரியராவர்.

ஒற்றைத்தெரு வேலாயுத முதலியாருக்கு அளவிறந்த தனிப்பாடல்கள் மனப்பாடமாக வரும். அவர்தம் உரையாடல்களிலும் மேற்கோள்களாகத் தனிப்பாடல்கள் பல பழகினமையின் அவருக்குத் தனிப்பாடல் முதலியார் என்ற பெயரும் உளதாயிற்று. மொட்டைசாமி முதலியாரென்பவர் வள்ளலார் சாத்திரத்திற் பெரிதும் பற்றுள்ளவர். அவரது முயற்சியாலேயே வள்ளலார் சாத்திரம் முதன்முதலாக அச்சிடப்பெற்றது. இவர் மிக அழகாகப் பேசி எத்தகையோரையும் தம் வயப்படுத்தி மகிழச் செய்யும் ஆற்றல் வாய்ந்தவர். இவரது சுவைநிறைந்த பேச்சினை அன்றாடங் கேட்டு மகிழ வேண்டுமென்று விரும்பிய இராஜா வேங்கடவரதாரெட்டியார் என்பார் இவரைத் தமது அரண்மனைக்கு நாடோறும் வந்து ஒருமணிநேரம் தம்முடன் உரையாடி அளவளாவுதற்கெனத் திங்கள்தோறும் ஊதியங் கொடுத்து வந்தார்.

பூசை கந்தசாமி முதலியாரவர்களின் மாணவராவார் சின்ன காஞ்சிபுரம் சினிவாசசெட்டியார், ஆமூர் சாமிநாத முதலியார், சிவ சங்கர தேசிகர், பி. செ. முருகேச முதலியார் முதலிய பலராவர். பிரமகசுர்செங்கல்வராய முதலியாரின் புதல்வராகிய பி. செ. முருகேச முதலியார் பிரபல வியாபாரியாவார். தமிழுஞ் சைவமுந் தழைக்க வேண்டுமெனுங் கருத்துடைய கழகங்களனைத்திலும் முன்னின்றுழைக்கும் இயல்புடையார். இவரது முயற்சியாலேயே முதன் முதல் ஞானியார் சுவாமிகள் காஞ்சியிற் பல விடங்களிலும் சொற்பொழிவாற்றும் வாய்ப்பேற்பட்டது. காஞ்சிபுரத்தில் சுவாமிகட்கு இவர் செய்த சிறப்பு வேறிடங்களில் நிகழ்ந்ததில்லை எனச் சுவாமிகளே கூறக் கேட்டிருக்கிறேன். ஏகாம்பரநாதர் திருவிழாப் பா இயற்றியும், இரட்டைப் புலவர் சரிதம் முதலிய பல நூல்களை வெளியிட்டும், பல சைவ சபைகளையும், தேவார சபைகளையும் தோற்றுவித்துத் தமிழ் மொழிக்கும் சைவத்

திற்கும் தொண்டாற்றி வந்தார். காஞ்சியிற் கால்வைக்கும் அறிஞர்கள் கல்வியாளர்கள் எவரும் இவரைக் காணாமலும், இவர் நல்லுதவி பெறாமலும் இருந்ததில்லை.

செங்குந்த மித்திரன் ஆசிரியராகவும் தென்னிந்திய செங்குந்த மகாசன சங்க அமைச்சராகவும் இருந்து பணியாற்றியவரும், இப்போது செங்குந்த மித்திரன் அச்சகத்தை நடத்துவோராகவும், தமிழர் நலங்கருதிச் சென்னையில் நிகழும் பொது வியக்கங்களிற் பங்கு கொள்பவராயும் உள்ள காஞ்சி மணிமொழியார் என்னும் பி. செ. மாணிக்கவாசக முதலியார் இவருடைய உடன் பிறந்த கடை சித்தம்பியாரவர். முருகேச முதலியாரைக் காண்பதற்காகச் செல்லுபவர்களை மணிமொழியார் அவ்விளமையிலேயே பெரிதும் உபசரிப்பதுண்டு. அச்சிறு வயதிலேயே கச்சிக்கலாவல்லித் தமிழ்ச் சங்கத்தையும், கலாவல்லி பள்ளிக்கூடத்தையும் கலைமகள் நூற்குழுமத்தினையும், தியாகராயர் வாசகசாலையினையும் தொடங்கிமிகத்திறம்பட நடத்தி வந்தது பாராட்டத்தக்கது.

காஞ்சிபுரம் நூற்றுக்கணக்கான சிவத்தலங்களைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது. அவற்றுட் சில பெரிய கோயில்களாகவும், பல சிறிய கோயில்களாகவும், மற்றும் பல கோயில்களில்லாத் தனிச் சிவலிங்கங்களாக நன்செய் புன்செய் நிலங்களிலும், புறக்கடைகளிலும் வெற்றிடங்களிலும் அமைந்தனவாகவும் உள்ளன. கோயில் பெற்றவை நீங்க ஏனையவற்றுள் இதுதான் இப் பெயரையுடைய தலமென்று சொல்லத்தக்க நினைவும் அனுபவமுமுள்ள பெரியோர்கள் அண்மையில் காஞ்சி நகரத்து இருவரே யிருந்தனர். அவ்விருவருள் பூசை. கந்தசாமி முதலியாரின் மாணவராகிய காலஞ்சென்ற ஐயா ஏகாம்பர முதலியார் என்பவர் ஒருவர். சென்ற சிலவாண்டுகளாக ஞாயிறுதோறும் காஞ்சித் தலயாத்திரை செய்துவரும் மெய்கண்டார் கழகத்தார்க்கு இவை இன்னின்ன தலமென்று காட்டுவதிற் பேருதவியாக இருந்தவர் இவரே. ஆலாலசுந்தரம் பிள்ளையவர்களின் மாணவராக இப்போதுள்ள சின்னகாஞ்சிபுரம் குப்புச்செட்டியார் என்பவர் மற்றொருவராவர்.

அண்மையிற் காலஞ்சென்ற ஐயங்கார்குளம் நாராயணசாமி முதலியார் பூசை நமசிவாயப் புலவரிடத்தும் அவர் புதல்வர் கந்தசாமி முதலியாரிடத்திலும் கல்வி பயின்றவர். சைவ சித்தாந்தம், ஏகான்மவாதம், ஆகிய சமய நூல்களிலும் சோதிடம் முதலிய பிற கலைகளிலும் வல்லவர்.

சென்னை பரங்கிமலையையடுத்த வேளச்சேரியிற் செங்குந்தர் மரபிற்றோன்றித் திருவருளநுபூதி பெற்ற சிதம்பர சுவாமிகளின் மாணவராகிய காஞ்சி ஏகாம்பர சிவயோகியார் என்பவர் காஞ்சி நகரப் பெரும்புலவர்களில் ஒருவர். வைதிக சைவ சித்தாந்த

சண்டமாருதம் சோமசுந்தர நாயகர் அவர்கட்கும் மெய்கண்ட நூல்களை யுபதேசித்த ஆசிரியர் இவரே.

ஐயங்கார்குளம் நாராயணசாமி முதலியாரின் மாணவராக இப்போதுள்ள அ. க. பொன்னுசாமி முதலியாரவர்கள் (ஞானியார் சுவாமிகளிடத்துத் துறவு நிலை பெற்ற பின்னர் இவர்க்கு வழங்கும் தீக்கைப்பெயர் குமாரசாமியார் என்பதாகும்) தமிழ் நாடு முழுவதுஞ் சென்று சைவ நூற் சொற்பொழிவு செய்து பல சைவ சபைகளை நிறுவியுள்ளார். ஐயங்கார்குளம் செல்வ விநாயகர் பதிகம், கச்சியேகம்பர் மாலை யென்பன இவராலியற்றப் பெற்றனவாம். செங்குந்தர் முன்னேற்றங் கருதி ஈட்டி யெழுபது முதலாகப் பதின்மூன்று நூல்களடங்கிய தொகுதியை இவர் 1911-ல் செங்குந்தர் சாதிநூற் கோவை யென்னும் பெயருடன் வெளியிட்டுள்ளார்.

பாரத இராமாயணப் பிரசங்கம் செய்வதில் வல்லவரான எனது நண்பர் சோணாசல பாரதியாரும், காஞ்சி பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகவிருந்த வெண்பாப்புலி வேலுசாமிப் பிள்ளை அவர்களும் காஞ்சிபுரத்தில் அண்மையில் இருந்துவந்த புலவர்களாவர். வெண்பாப்புலி வேலுசாமிப் பிள்ளை கந்த புராணத்தை 3663 வெண்பாவால் பாடியுள்ளார். இவரது பாட்டனாராகிய மாரிமுத்தா பிள்ளை என்னும் பெரியார் "புலியூர் வெண்பா" இயற்றியவர்.

தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும், வேதாந்த தர்க்க சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்று இப்போது குடியேற்றம் முனிசிபல் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருந்துவரும் செங்கல்வராய முதலியாரும், காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராக இருந்துவரும் க. வச்சிரவேலு முதலியாரும் செங்குந்த குலப் புலவர்களாவர். வச்சிரவேல் முதலியார் சைவ சித்தாந்தம் தர்க்கம் ஆகிய சாத்திரங்களில் வல்லவர். யாழ்ப்பாணத்திலும் தென்னாட்டிலும் சைவப்பிரசாரம் செய்து வருவோராவர். இவர் அண்மையில் தருமபுர ஆதீனத்தவரால் ஆதீனப் புலவராக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளார்.

மேற்கூறிய காஞ்சிபுரத்துப் புலவர்கள் வரலாற்றாலும், கந்தபுராண ஆசிரியராகிய கச்சியப்ப சிவாசாரியாரின் மாணவரும் உபதேச காண்டம் இயற்றியவருமாகிய குகனேரியப்ப நாவலரும் அவர் வழி வந்த மாணாக்கர்கள் பலரும் செங்குந்தராகையாலும், காஞ்சிபுரத்தில் தேவாரம் பெற்ற தலங்களுள் பிள்ளையார் பாளையத்திலுள்ள திருமேற்றளிப்பதிகத்தில் அப்பர் சுவாமிகள் "கல்வியைக் கரையிலாத காஞ்சிமா நகர்தனுள்ளால்" என ஓதியிருத்தலாலும், காஞ்சிபுரத்தில் தமிழையும், சைவத்தையும் போற்றி வளர்த்தவர்களிற் பெரும்பாலார் செங்குந்தர்களாகவே இருந்திருத்தல் கூடும் என எண்ண இடமிருக்கிறது.

### கைத்தொழிற் சாலை

காஞ்சிபுரத்துச் செய்திகளைக் குறிப்பிடும்போது, பிள்ளையார் பாளையத்தின் மேற்குக் கோடியில் குழாய்த் தண்ணீர்த் தொடக்க இடத்திற்கு அண்மையில், வேகவதியாற்றின் தென் கரையில், செங்குந்த இளைஞர் T. ராசமுதலியாரால் இப்போது நடத்தப்பட்டுவரும் ஆதித்திராவிடக் கைத்தொழிற் சாலையும் என் மனக்கண் முன்னே நிற்கின்றது.

இதில் பல பிள்ளைகள் கல்வி, ஒழுக்க முறை, கடவுள்வழிபாடு ஆகியவற்றுடன், துணி நெய்தல், பொத்தான் செய்தல், தேனீ வளர்த்தல், தோட்டவேலையாகிய பல தொழில்களில்பயிற்சிபெற்று வருகிறார்கள். சாதாரண ஆரம்பப் பாடசாலை ஆசிரியராக இருந்த இவ்விளைஞர் பிறர் உதவி இன்றி ஒடுக்கப்பட்ட மக்களின் முன்னேற்றங்கருதி உழைத்து வருவது நாட்டுப் பற்றுடையாரால் பாராட்டத்தக்கதாகும்.

### சென்னையில் சமயப் பூசல்

எனது இளமைப் பருவத்தில், சிறப்பாகச் சென்னையிலும், பொதுவாகத் தமிழகத்திலும் சைவசித்தாந்தம், விசிஷ்டாத்துவிதம், கேவலாத்துவிதம் முதலிய கொள்கையினராகிய ஞானசோமசுந்தரநாயகர், பூவை கலியாணசுந்தர முதலியார், ஏகாங்கி சுவாமிகள், ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள், சை. இரத்தின செட்டியார் போன்ற பெரும் புலவர்கள் தங்கள் தங்கள் சமயக் கொள்கைகளைப் பரப்புங் கருத்துடன் புராணச் சொற்பொழிவுகளும் சாத்திரப் பிரசாரமும் செய்யத் தொடங்கினர். அதன் விளைவாக ஒரு சமயத்தார் மற்றொருசமயத்தைதாக்கிப்பேசவும் ஆரம்பித்தனர். வாதக் கூட்டங்கள் எண்ணில நடந்தன. சென்னையில் எங்கு பார்த்தாலும் சமயப் பூசல் பற்றிய பேச்சுக்களே நடந்தன. பொது மக்களும் இத்தகைய பூசல்களிலீடுபடலாயினர்

சமயத் துவேஷம் அதிகரித்தது. சரபம், கோளரி, சண்டமாருதம் முதலிய அச்சந் தரத்தக்க பட்டங்களைத் தாங்கிய புலவர்பெருமக்கள் தத்தஞ் சமயங்களே சிறந்தவையென வேதம், உபநிடதம், ஆகமம், புராணம், மெய்ந் நூல்கள் ஆகியவற்றிலிருந்து மேற்கோள்கள் காட்டி நிறுவ முற்பட்டனர். இத்தகைய கல்வி பற்றி யெழுந்த வாதப் பூசல்களால் தமிழ் நாட்டுப் பொதுமக்களுக்குச் சமய வுணர்ச்சியும் நூலறிவும் நிரம்பத் தொடங்கியது. இந் நாட்டில் ஒரு வகுப்பாரே ஆண்டவனைப் பற்றிப் பேசும் குரவராதற்குரியார் என்னும் இடைக்காலத்தெழுந்த மயக்க வுணர்வு அடியோடு அகலத் தொடங்கிய காலம் இதுவே யென்று சொல்லலாம்.

### எனது ஆசிரியர் பூவை கலியாண சுந்தர யதீந்திரர்

இப்போசிரியரது வரலாறு விரிவாக வெளியிடப் பட்டிருப்பினும் யான் ஈண்டு அவர்களைப் பற்றிச் சில குறிப்புக்களையேனும்

சொல்லுதற்குரிய கடமை யுடையேனுவேன். என் ஆசிரியர் சித்தாந்த சரபம் அட்டாவதானம் பூவை கலியாண சுந்தர யதீந்திர சுவாமிகள் தமிழையும் சைவத்தையும் வளர்க்கவே அவதரித்தவரெனச் சொல்லலாம். இவர்களிடத்திற் பயின்ற மாணவர்கள் எண்ணிலராவர். தமிழ் மொழியையோ சைவ நூல்களையோ கற்க வேண்டு மென்று தருவோர் எவராயினும் எந்நேரத்தில் வரினும் இவர்கள் பாடஞ்சொல்லத் தயங்குவதே யில்லை. கல்வி பயில விரும்பாதவர்க்கும் அவ்விருப்பத்தை யுண்டாக்கிக் கல்வி யயிற்றுதலைத் தமது கடமையாகக் கொண்டிருந்தார்கள்.

இவர்களியற்றிய நூல்களாலும் சொற்பொழிவுகளாலும் வாதங்களாலும் சைவமுந் தமிழும் வளர்ந்தோங்கச் செய்தார்கள். சென்னைத் தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர் நிலைப் பள்ளியில் கீதைப் பிரசங்கஞ் செய்து வந்த வட மொழியிற் பிரபல வித்துவானுகிய பிராமணரொருவர் ஒரு சமயம் பாண்டிய என்னும் சொல் பாண்ட்ய என்னும் வடசொல்லின் திரிபே யெனக் கூறினர். அதனைக் கேள்வியுற்ற யதீந்திரரவர்கள் அச்சொல் தூய தனித் தமிழ்ச் சொல்லே; வடமொழித் திரிபென்று கூறிய தமிழறியார் கூற்றுப் பொருந்தாது எனத் தக்க சான்றுகளுடன் மறுப்பெழுதி வெளியிட்டுக் கிளர்ச்சி செய்யலாயினர். அதனை யுணர்ந்த பிராமணப் பிரசங்கியார் அடுத்த கிழமைப் பிரசங்கத்தின்தொடக்கத்தில் "பாண்டியன் என்னுஞ் சொல் தூய தமிழ்ச் சொல்லாகவும் அதனை வட மொழித் திரிபென யான் கூறியதற்கு எனக்கு நிரம்பிய தமிழ் நூற் பயிற்சியின்மையே காரணமாகும்" எனக் குறிப்பிட்டுத் தமது பிழையினை ஒத்துக்கொண்ட பிறகே கீதைப் பிரசங்கத்தை நிகழ்த்துவாராயினர்.

இவ்வாறு தமிழ் மொழியின் தூய பண்பினை நிலை நாட்டிய யதீந்திரரவர்களின் செய்கையை நோக்குமிடத்து அவரது புலமையும் தாய் மொழிப் பற்றும், அவர்க்கு நாட்டிலுள்ள செல்வாக்கும் நன்கு விளங்கும்.

## எனது தென்னுட்டு யாத்திரை

யான் தென்னுடு முழுவதும் முறையாக எட்டு முறை யாத்திரை செய்து வந்திருக்கிறேன். பலர் அழைப்பிற் கிணங்கித் தனியாகவும் பல ஊர்கட்குச் சென்றுளேன்.

இச் சமயங்களிற் பல சங்கங்களை நிறுவியும் பல கூட்டங்களுக்குத் தலைமை யேற்றும் சொற்பொழிவுகளாற்றியும் வந்திருக்கிறேன். யான் இல்லறத்தி லிருந்தபோது எனக்குண்டான உடல் மெலிவு தீர திருக் கயிலாய பரம்பரைதிருவாவடுதுறையாதீனத்து மகா சன்னிதானமாக விருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண சுவாமிகள் செவந்திபுரம் தெட்சிணகார்பார் சுவாமிகள் (வைத்தியலிங்க தேசிக சுவாமிகள்) மூலமாகக் குடும்பத்துடன் தென்னுட்டு

யாத்திரைக்குச் சென்ற காலங்க
ளில் தென்காசி முதலிய பல
இடங்களிலும் ஆடம்பரமான
வரவேற்புடன் உபசரிக்கப் பெற்
றேன். தென்காசி பாங்கர் ப. கு.
ஆறுமுக முதலியாரவர்கள் எனக்
குச் செய்த உபசாரத்தை என்
னால் என்றும் மறக்க முடியாது.
அவ்வாறே அம்பாசமுத்திரத்
தில் காலஞ் சென்ற வழக்கறிஞர்
கே. என். சுப்பிரமணிய முதலி
யார் பி. ஏ., இப்போது தீர்த்த
பதி உயர் நிலைப் பள்ளி யாசிரி
யராயிருந்து வரும் P. A. கண
பதி முதலியார், B.A,L.T. ஆகிய
வர்களாலும், திருநெல்வேலியில்
பிரபல வழக்கறிஞர்கள் பூமிநாத
முதலியார், பழநியாண்டி முத
லியார் ஆகியவர்களாலும், திருவ
னந்தபுரத்தில் சட்ட கலாசாலை
மாணவராயிருந்த (இப்போது
சயன்ஸ் கல்லூரித் தமிழ்ப் பேரா
சிரியராக இருக்கும்) பன்னிரு
கைப் பெருமாள் முதலியார்
M.A.,B.L., அவர்களாலும், கோட்
டாற்றில் V. P. வேலாயுத முத
லியார் முதலிய அறிஞர்களாலும்
வரவேற்கப் பெற்று எல்லா வசதி
களுஞ் செய்துகொடுக்கப் பெற்
றேன்.

புகைவண்டி வசதியில்லாத
காலத்தில் யான் இராமேச்சுர
யாத்திரை செய்தபோது இராம
நாதபுரம் பாஸ்கர சேதுபதியவர்
கள் யான் குடும்பத்துடன்
இராமநாதபுரத்திலிருந்து இரா
மேச்சுரம் சென்று திரும்பும்
வரை தேவையான எல்லா வசதி
களையும் செய்து உதவினார்கள்.
இவ்வாறு யான் பல தடவை
செய்த தென்னாட்டு யாத்திரைக்
காலங்களில் பல பெரியோர்களை
யும் கண்டுமகிழும் வாய்ப்பினைப்
பெற்றுள்ளேன். விரிவஞ்சி
அவர்களுட் சிலரைப் பற்றிய
குறிப்புக்களையே இங்குத் தரு
கின்றேன்.

### திருவாவடுதுறை யாதீனத் தொடர்பு

திருக்கயிலாயபரம்பரை திரு
வாவடுதுறை யாதீனத்தில்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக
சுவாமிகள் மகா சந்நிதானமாக
எழுந்தருளியிருந்த காலத்தி
லேயே அவ்வாதீனத்திற்கு அடிக்
கடி சென்றுவரும் வாய்ப்பு எனக்
கேற்பட்டது. இவர்களுக்குப்
பின் நீண்டகாலம் மகாசந்நிதான
மாக வீற்றிருந்தருளிய அம்பல
வாணதேசிக சுவாமிகளும்
யானும் இளமையில் ஸ்ரீலஸ்ரீ
ஆறுமுகத்தம்பிரான் சுவாமிக
ளிடம் சிவதத்துவ விவேகம்முத
லிய நூல்களைப் பாடங்கேட்டு
வந்த ஒரு சாலை மாணவராகை
யால் இவர்காலத்தில் இவ்வாதீ
னத் தொடர்பு இன்னும் அதிக
ரிப்பதாயிற்று.

இத்தேசிகசுவாமிகளின் விருப்
பமும் ஆதரவுங் கொண்டு யான்
அச்சிட்டு வெளிப்படுத்திய நூல்
கள் பலவாகும். யான் சென்னை
யில் நடத்திவந்த மெய்கண்டான்
கல்லூரிக்கு வேண்டும் பொரு
ளுதவி செய்தவர்களும் இவர்
களேயாவார்கள். மதுரையில்நான்
காவதாகத் தமிழ்ச் சங்கத்தை
நிறுவிய புரவலராகிய பாலவநத்
தம் ஜமீன்தார் பாண்டித்துரைத்

தேவரவர்கள் வேண்டுகோளின் படி சிவஞான போதச் சிற்றுரை யினை யான் வெளியிட நேர்ந்தது. சிவஞான முனிவரியற்றிய பேருரையாகிய திராவிட மாபாடியம் ஒருவாரலும்வெளியிடப்பெறாது திருவாவடுதுறை யாதீனத்து நூற் பேழையிலேயே காவலிலிருந்த காலம் அதுவாகும். எனவே சிவஞான போதச் சிற்றுரையினைப் பயில்வார்க்குத் தெளிவேற்படும் வண்ணம் இன்றியமையாத விடத்துத்திராவிடமாபாடியக் குறிப்புக்களையும் கீழ்க்குறிப்பாக அச்சிட்டுவெளிப்படுத்த வெண்ணினேன். இந் நோக்கத்துடன் எனது ஆசிரியர் கலியாணசுந்தர யதீந்திரவர்களும் யானும் திருவாவடுதுறை மடத்தில் ஒரு திங்கள் வரை தங்கியிருந்து திராவிட மாபாடியத்தினைக்காவலிலிருந்து படித்து வந்தோம். இக்காலத்தில் திராவிட மாபாடியத்திலிருந்து யான் எழுதிக்கொண்ட இன்றியமையாத குறிப்புக்களே சிவஞான போதச் சிற்றுரையினை யான் வெளிப்படுத்திய காலத்து அடிக்குறிப்பாக அச்சிடப் பெற்றன. சிவஞான மாபாடியம் வெளிவராத காலத்திற்சிவஞான போதம் பயில்வார்க்குப் பேருதவியாயமைந்தது இவ் வடிக் குறிப்பே யென்பதனைத் தமிழகம் நன்குணரும். சிவஞான போதச் சிற்றுரையிற் சில விடங்களிற் பொருள் வெளிப்படை யென முனிவர் குறித்துச் சென்றவற்றிற்குப் பொருளாக முனிவர்க்கு முன்னவராகிய திருவாவடுதுறை யாதீனத்து வேலப்ப தேசிகரின் பழையவுரையாகிய பதவுரையினை யச்சிட்டுள்ளேன். வேலப்ப தேசிகரின் பதவுரையாகிய இப்பழைய வுரையின்னும் வெளிவந்திலது. வெளிவாராது கம்மாதீனத்து எட்டுப் பிரதியாக இருந்த இதனைப் பார்த்துக் குறித்துக்கொள்ளும் உரிமையினை வழங்கிய ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண சுவாமிகளுக்கு எழுமையும் நன்றியுடையேன்.

சிவப்பிரகாசத்திற்குக் காஞ்சி சிதம்பர முனிவர் எழுதியவுரையினை முதன் முதல் அச்சிட்டு வெளிப்படுத்தினேன். சிவஞான போதம் முதலாகவுள்ள சைவ சித்தாந்த நூல்கள் பதினன்கினையும் உரையுடன் ஒருதொகுதியாகச் சேர்த்துத் திருவாவடுதுறை யாதீன மரபின்படி 'மெய்கண்ட சாத்திரம்' எனப் பெயர் தந்து முதன் முறையாக வெளியிட்டேன்.

இங்ஙனம் மெய்கண்ட நூல்களை விளக்கக் குறிப்புக்களுடன் அச்சிட்டுத் தமிழக மக்களுக்கு வெளிப்படுத்துவதிற் பேரார்வங் கொண்டு யானியற்றிய பணிகளையுடனிருந்து கண்ட ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள் 'மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்' என்னும் பட்டத்தினை அடியேனுக்கு வழங்கி உளமுவந்து பாராட்டினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள் நடுவண் வீற்றிருக்க அவர்கள் வலப்பக்கத்தில் எனது ஆசிரியர் கலியாணசுந்தர யதீந்திரரவர்களும் இடப்பக்கத்தில் யானும் ஆகவிருந்து நிழற்படம்

எடுத்துக் கொள்ளுமளவில் திருவாவடுதுறை யாதீனத்திற்கும் எனக்கும் நெருங்கிய தொடர்பிருந்தது. இன்று வரை அத்தொடர்பு நிலைத்துள்ளமை குறிப்பிடற்குரியது.

இவ்வாறே திருப்பனந்தாள் காசி மடமாகிய சமயநிலையத்துடனும் நெருங்கியதொடர்புகொண்டிருந்தேன். தமிழ்மொழி தழைத்தோங்க ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான தொகைகளைப் பரிசாகக் கொடுத்தற்கு நிலைத்த ஏற்பாடுகளைச் செய்து அண்மையில் இறைவன் திருவடியடைந்த காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான்சுவாமிகளுக்குஆசிரியராய்த் திருப்பனந்தாட் காசிமடத்துத் தலைமையினைமேற்கொண்டிருந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசிசொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள் ஆதரவு கொண்டு திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் என்னும் இருநூல்களையும் அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளேன்.

## சிக்கல் பொருள் வைத்தசேரி உகந்தலிங்க சுவாமிகள்

நாகப்பட்டினத்தை யடுத்த பொருள்வைத்த சேரியென்னும் ஊரிலுள்ள உகந்தலிங்க ஞான தேசிகர் ஆதீனத்திற்குச் சென்ற போது அங்குச் சில குறிப்புக்கள் கிடைத்தன. தென்னாட்டில் வழங்கும் கேவலாத்துவிதமெனப்படும் வேதாந்தக் கொள்கையினரை பிராமண வேதாந்திகள் தமிழ் வேதாந்திகள் என இருவகையாகப் பிரிக்கலாம். பிராமண வேதாந்திகட்குரிய தலைமை நிலையங்கள் சிருங்கேரி மடமும் காஞ்சி காமகோடி பீடமாகிய கும்பகோண மடமும் ஆம். இவை சங்கராச்சாரியார் மடங்களாம். இங்கு உபதேசம் பெறுந் தகுதி பிராமணர்க்கேயுரியதாகும். தமிழ் வேதாந்திகளுக்குரிய மடங்களாகத் திருவண்ணாமலையிலும், கோயிலூரிலும் சிதம்பரத்திலும், பொருள் வைத்த சேரியிலும், இவ்வாறே பல தலங்களிலும் பல திருமடங்கள் உள்ளன. இம் மடங்கள் யாவும் தமிழர்களாகிய எல்லா வினத்தவர்க்கும் உபதேசம் செய்துவைக்கு மியல்புடையனவாம். இம் மடங்களில் உறுதியான திட்டங்களுடன்முதன்மை பெற்று விளங்குவது கோயிலூர் மடமாகும். இதனை நிறுவிய நகரத்தார் மரபினராகிய முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் ஞானாசாரியர் சிக்கல் பொருள் வைத்த சேரி உகந்தலிங்க சுவாமிகள் ஆதீனத்து முதல் மூர்த்தியாக விளங்கிய உகந்தலிங்க ஞான தேசிக சுவாமிகளாவார். இவர் பொருள் வைத்த சேரியிற் செங்குந்த மரபிற் றோன்றியவர். பல நூல்களையும் வேதாந்த சாத்திரங்களையும் எளிதிற் கற்று அநுபூதி நிலையடைந்து பல மாணாக்கர்களுக்கு வேதாந்த பாடஞ்சொல்லியும் பக்குவிகளுக்கு ஞானோபதேசஞ் செய்தும் திகழ்ந்தவர். சீவன் முத்தராகிய இச் சுவாமிகள் கடைசிவரை இல்லறத்திலேயேயிருந்து தமது குலத்தொழிலையே செய்து வாழ்க்கை நடத்தி

வந்தார்கள். இவர்களைப் பற்றிய வியப்புடைய நிகழ்ச்சிகள் பல பொருள்வைத்த சேரியில் இன்றும் வழங்குகின்றன. இச் சுவாமிகள் பரிபூரணமடைந்த போது தாம் வசித்து வந்த வீட்டிலேயே அடக்கஞ் செய்யப்பட்டார். இப்போது இவரது சமாதியைச் சூழ்ந்துள்ள கட்டிடங்கள் இவர்தம் மாணுக்கரும் கோயிலூர் மடத்து முதல் சுவாமிகளுமாகிய முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளாலும் அவர்தம் வழியினராலும் கட்டப்பட்டனவாகும். உகந்தலிங்க சுவாமிகளுக்குப் பின்னர் வந்த வீரபத்திர சுவாமிகள், சிங்கார வேலு சுவாமிகள், சட்டையப்ப சுவாமிகள், முத்தைய சுவாமிகள் ஆகிய நால்வரும் செங்குந்த மரபினரே.

## சிதம்பரம் மௌன சுவாமிகள் மடம்

ஏறக்குறைய மூந்நூறாண்டுகட்கு முன்னர் சிதம்பரத்திலிருந்த மௌன குரு சுவாமிகளே இத்திருமடத்தின் ஆதி குரு ஆவார். இவரது மரபு இன்னதென்று தெரியவில்லை. ஈசானியஞான தேசிகர் பாடிய நூல்களுள் பஞ்சரத்தினம், சிகாமணிப் பதிகம் ஆகிய இருநூல்களும் மடத்தினரால்வெளியிடப் பெற்றுள்ளன. சிதம்பரத்தையடுத்த குறிஞ்சிபாடி யென்னும் ஊரிலிருந்த செங்குந்தரொருவர் குடும்பத்துடன் மௌன குரு சுவாமிகளை வணங்கி மீண்டுந் திரும்பும்பொழுது அவர்தம் இளம் புதல்வரொருவர் இடைவிடாதழுதனரெனவும் அது கண்ட குருமூர்த்திகள் அப்பிள்ளை இங்கேயேயிருக்கவெனச் சைகையால் ஆணையிட்டமையால் பெற்றோர் அப்பிள்ளையைச் சுவாமிகளிடமே ஒப்புவித்துத் தம்மூர் திரும்பினரெனவும் சுவாமிகள் பரிபூரண நிலையடையுங்கால் அவ்விளைஞரையே தம் மாணவராக்கி யுபதேசித்துத்திருமடத்தின் முதல்வராக்கினரெனவும் அதுமுதற்கொண்டு அச் செங்குந்தக் குடும்பத்திற் பிறக்கும் புதல்வர்களிளொருவரே இம் மௌன சுவாமிகள் மடத்தின் தலைவராக இருந்து வருகிறார்களெனவும். வழங்கும் வரலாறு செங்குந்தர்க்கும் இம்மடத்திற்குமுள்ள தொடர்பினை நன்கு விளக்குவதாகும். இப்போது இம் மடத்தின் தலைவராக எழுந்தருளியுள்ள ஸ்ரீலஸ்ரீ சபாபதி சுவாமிகளுக்கு முன் பட்டத்திலிருந்த ஸ்ரீலஸ்ரீ செல்லப்பஞான தேசிக சுவாமிகளை யான் சிதம்பரஞ் சென்றபொழுது பார்த்திருக்கிறேன். இச் சுவாமிகள் சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகள்பால் கல்வி பயின்றனர். இவர்கள் காலத்தில் இம் மடம் பல திருப்பணிகளால் திருத்தம்பெற்றது.

## திருநாகேச்சரம்

சேக்கிழாரது விருப்பத் தலமாகிய சோழநாட்டுத் திருநாகேச்சரத்திற்கு யான் சென்றிருந்த போது அங்குள்ள செங்குந்தப் பெரியார் சிலரைக் கண்டு பேசியுள்ளேன். அவருள் வடக்கு

கள். இதுபோது சென்னையி லுள்ள இராசாக்கண்ணனார் B.O.L. அவர்கள் சுவாமிகளது கந்தர்சட்டிச் சொற்பொழிவினை நூலுருவாகத் திரட்டியுதவியுள்ளார். திருக்கோவலூர் ஆதீனத்தில் ஐம்பத்தோராண்டு எழுந்தருளியிருந்து சைவப் பணி புரிந்த இவர்களது பெருமை விரிக்கிற்பெருகும்.

நான் திருநாகேச்சரம் சென்றிருந்த காலை அவ்வூர் நாட்டாண்மையினை மேற்கொண்டிருந்தவர் நமசிவாய முதலியாராவர். இவர் அம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் திருமுகத்திற்கிணங்கித் தம் நாட்டாண்மைக்குட்பட்ட திருநாகேச்சர மக்களைக் கொண்டு திருவிடைமருதூர்த் தேரினை நிலைக்குக் கொண்டுவந்தது கண்ட மகா சந்நிதானமவர்கள் "நமக்கு ஆதியும் நமசிவாயம் அந்தமும் நமசிவாயம்; நமசிவாயத்தை விட்டால் வேறு கதியில்லை" யென இவரைப் பாராட்டினர்களென்பர். செங்குந்தரும் வேற்றினத்தவரும் நிறைந்த திருநாகேச்சரமென்னும் பேரூரினைக் கட்டுப்பாடாக அடக்கி யாண்ட நாட்டாண்மைக்காரர் இவரேயாவர்.

### பிறைசை அருணசல சுவாமிகள்

சென்னையில் பிரபல வேதாந்த ஆசிரியராக விளங்கியிருந்த சூளை குயப்பேட்டை ஈசூர் சச்சிதானந்த சுவாமிகளின் ஞானசிரியராகிய அருணசல சுவாமிகள் என்பார் தரங்கம்பாடியை யடுத்த பொறையாற்றில் வதிந்த அறுபூதிமானவர். தமிழ் வேதாந்த நூல்களை மாணவர்கட்குப் பாடஞ் சொல்லியும் உரையெழுதியும் பக்குவிகளுக்கு உபதேசித்தும் வந்த செங்குந்தப் பெரியாராவர். சென்னை சை. இரத்தினசெட்டியார், கோ. வடிவேலு செட்டியார் முதலிய வேதாந்தப் புலவர்கள் இச்சுவாமிகளின் மாணவ பரம்பரையினரேயாவர். ஞானவாசிட்டத்திற்கு உரை எழுதி உதவியவர் இச்சுவாமிகளேயாவர்.

### திருப்பத்தூர் ஆ. க. குமாரசாமி முதலியார்

இப் பெரியார் மேலே கூறிய செங்குந்தப் புலவர் சங்கத்தின் முதன்மையான உறுப்பினர்களிலொருவர். இவர் தந்தையாராகிய கந்தசாமி முதலியாரென்பார் இவரது இளமைப் பருவத்திலேயே இரண்டு கல் தொலைவிலுள்ள ஆதியூரிலிருந்து திருப்பத்தூரில் வந்து குடியேறினர். இவர் தமது சொத்தாகக் கருதிய சில அந்தாதிகளையும் புராணங்களையும் கொண்டுவந்து சில காலந் தாமே யவற்றைப் படித்துப் பின்னர்த் துர்க்கை செட்டியாரென்றதமிழ்ப்புலவரிடத்தில் இலக்கிய விலக்கணங்கள் பயின்றார். தாம் கற்றவற்றைத் தமது மைத்துனர் முனிசாமி முதலியார் என்பவர்க்குச் சொல்லிக் கொடுத்து அவரையும் புலவராக்கினர். இளமையிலேயே துறவுபூண்ட இம் முனிசாமி முதலியார் செய்த சில தோத்திரப் பாக்களுந் தனிப் பாடல்

களும் இன்றும் அவர் குடும்பத்தினரிடத்திலுள்ளன. கந்தசாமி முதலியாரின் மகனாகிய குமாரசாமி முதலியார் தமது தந்தையாரிடம் பாடங் கேட்டுப் பெரும் புலவரானார். இவர் தமது மரபாகிய செங்குந்த குலத்தில் மிகுந்த பற்றுடையவராதலால் சென்னையில் நிறுவப்பட்டிருந்த செங்குந்தப் புலவர் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து குலத் தொண்டு செய்து வந்தார். பாட்டும் உரையும் எழுதுவதில் மிக வல்லுநராயிருந்த அச் சங்கத் துறுப்பினர்களாகிய திருமழிசை வீர சைவ முத்துசாமி முதலியார், இரட்டைத் தலை வடிவேலு முதலியார், சிதம். இரத்தினசபாபதி முதலியார் முதலியவர்களிடத்து நெருங்கிய தொடர்புடையவராயிருந்தார். சில சதகங்கள், முசுகுந்த விலாசம், செங்குந்த புராணம், தசாரண்ய மான்மியம் என்னும் திருப்பத்தூர்ப் புராணம், குடியேற்றத் தல புராணம், பனைசைத் தல புராணம் முதலிய நூல்கள் இவராலியற்றப்பெற்றன. திருப்பத்தூர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியராக இருந்த இவர் சைவப் பற்றும் சைவாசாரமும் நிரம்பவுடையவர். நோயிலா யாக்கையொடு எழுபத்து நான்காண்டுவாழ்ந்து தமிழ்த் தொண்டாற்றியுள்ளார்.

## ஆ. கு. முருகைய முதலியார்

மேற்கூறிய குமாரசாமி முதலியாரின் புதல்வராக இப்போதுள்ள திருப்பத்தூர் முருகைய முதலியார் தமது தந்தையாரிடத்தில் இலக்கிய இலக்கணங்கள் பயின்று வாணியம்பாடி, தர்மபுரி திருப்பத்தூர் உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகத் தொண்டாற்றி இதுபோது ஓய்வு பெற்றுள்ளார். எல்லா நற்குணங்களும் அமையப்பெற்றவர். இவர் தம் மாணவராக ஆங்காங்குத் தமிழ்ப் புலமை நடாத்துபவர் பலராவர்.

## திருப்பத்தூர்

## கா. அ. சண்முக முதலியார்

இவர் திருப்பத்தூரில் செங்குந்தர் குடியிற்றோன்றி நூல் வியாபாரம் செய்துவந்த திரு. கா. அருணாசல முதலியாரின் மூத்த மகனாராவர். பள்ளியிற் பன்னாள் படிக்கும் வாய்ப்பினைப் பெற்றோர்கள் இவருக்கு அளிக்கவில்லை. பதினாறு வயது முதலாகவே இவர் தம் தந்தையாருடன் சந்தைகளுக்குப் போய் ஜவுளி விற்குந்தொழிலை மேற்கொள்வாராயினர். தமக்குக் கல்வியிலிருந்த ஆர்வத்தால் ஓய்வு கிடைத்த போதெல்லாம் தம் தந்தையாருக்குத் தெரியாமல் தமிழாசிரிய ரொருவரையடுத்து அவரிடம் தமிழ்பயின்று வந்தார்.

நிரம்பிய தமிழ்ப் புலமை வாய்ந்த பின்னர் 1929-ம் ஆண்டில் இவர் 'நளாயணி வெண்பா' என்னும் நூலை யியற்றிப் பல புலவர் பெருமக்கள் குழுமிய பேரவையில் அரங்கேற்றினர். திருமாலிடத்தும் திருமறை யருளிய ஆழ்வார்களிடத்தும் நிறைந்த பக்தியுடையவர். தம் வீட்டினருகில் "ஸ்ரீராம நிலையம்"

என்னும் வழிபாட்டு நிலையத்தை நிறுவி ஆண்டு தோறும் விழாக்கள் நடத்தி வருகின்றார். ஆண்டவனை மலரிட்டுத் தொழுகையில்இனியசெந்தமிழால் வாழ்த்த வேண்டு மென்னும் அன்பு கொண்டு "திருமால் போற்றி அகவல்" என்னும் அருச்சனை நூலை அகவற்பாவிலியற்றியுள்ளார். திருமாலை வணங்குந் தெய்வமாகத் தாம் கொண்டிருந்த போதிலும் ஏனைய தெய்வங்களையும் வேற்றுமையின்றி வணங்குமியல்புடையவர். தமது குலதெய்வமாகிய ஆறுமுகப் பெருமானை வழிபடுவதிற் பெரு விருப்புடையவர். திருப்பத்தூர்ச் செங்குந்தர் நலங் கருதி அவ்வப்போது ஆகும் உதவிகளைச் செய்து வருகின்றார். திருப்பத்தூர்த் தாலுகா போர்டின் தலைவராகவும் துணைத் தலைவராகவும், வட ஆர்க்காடு ஜில்லா போர்டின் உறுப்பினராகவும் தலைவராகவும், சென்னை மாகாண சட்ட சபையின் உறுப்பினராகவும் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்றுப் பணி புரிந்தவர். 1933ல் திருவாரூரில் கூடிய செங்குந்தர் மகா நாட்டில் வர்த்தக மகா நாட்டின் தலைவராகவும் 1938ல் மதுரையில் சமூக மகாநாட்டின் தலைவராகவும் இருந்து பணி செய்தவர். சென்னையில் செங்குந்தர் விடுதியைத் திறந்து வைத்தவரும் இவரே. வட வார்க்காடு ஜில்லாவில் முதன் முதலாகத் திருமகள் மில்ஸ் என்னும் நூலாலையினை அந்த ஜில்லாவிற்கூடிய செங்குந்தர் ஐந்தாவது மாநாட்டுத் தீர்மானத்திற்கேற்ப தொடங்கி, அதனை நிருவகித்து வருகின்றார். செங்குந்தர்கள் பெரும் பாலோராகப் பங்கு கொண்ட அவ்வாலை தென்னாட்டிற்சிறந்த நூல் ஆலையாகவிளங்குவது மகிழ்ச்சிக் குரியசெய்தியாகும்.

### பாக்கிய லிங்கத் தம்பிரான்

கோடம்பாக்கத்தில் எழுந்தருளியுள்ள வடபழநி யாண்டவர் திருக்கோயிலை ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகள் வரை நிருவகித்துப் பல திருப்பணிகள் செய்து இன்றைக்கு ஐந்தாறு ஆண்டுகட்கு முன் முருகனடியடைந்த சுவாமிகளான இவர்கள் எனது நெருங்கிய உறவினராவர். இவர் சைதாப் பேட்டையிற் பிறந்து சிறுவயதிலேயே குலை நோய் கண்டு அது தீரப் பெருமையால் கோடம்பாக்கத்திலுள்ள வட பழநி யாண்டவர் கோயிலுக்கு வந்து தம் வாழ்க்கை முழுதும் ஆண்டவனுக்கு அடிமைபுகுந்து தொண்டாற்றி வந்தார். ஒருநாள் அந் நோய் தாங்க முடியாத நிலைமைக்கு வந்த போது ஆண்டவர் சந்நிதியில் வந்து முறையிட்டுக் கத்தியால் தம் நாவினை யறுத்துக் கொண்டார். இதனையுணர்ந்த இவர்க்கு முன்னவராகிய இரண்டாவது சுவாமியாரவர்கள் அறுபட்ட நாவினை வாழையிலையிலேந்தி முருகன் முன்னிலையில் வைத்து அவனை நினைந்து மனமுருகினார். அவரது வாயில் அறுபட்ட நாக்கு வளர்ந்து கொண்டே வந்தது. அவர் தம் குலைநோயும் அடியோடு நீங்கிற்று. இதனை யறிந்து மகிழ்ந்த இரண்டாவது சுவாமி

யார் தமக்குப் பின்னர் கோயிலைக் கண்காணித்தற்கு இப் பாக்கிய லிங்க சுவாமிகளையே சேர்ந்து கொள்வாராயினர். இச்சுவாமிகள் தமக்கு இடையூறு நேரும் போதெல்லாம் குன்றாத உறுதியுடன் நீண்ட நாள் உபவாசமிருந்து அதனை வென்று முருகன் திருவருள் பணித்த வண்ணமே தம் திருப்பணியினை நிறைவேற்று மியல் புடையாராவர். இவர் தம் இயல்பினை யுணர்ந்த சென்னை மக்கள் பலரும் கோயில் திருப்பணிக்கு வேண்டும் பொருளுதவிகளைச் செய்து வந்தனர். இவரது திருப்பணியின் விளக்கம் பரவத் தொடங்கிய பின்னர் முன்னையினும் பலராகச் சென்னை மக்கள் வடபழநியாண்டவரை வந்து வணங்கிச் செல்கின்றார்கள். இத் திருக்கோயிற் பெருமான் மீது வட பழநி மயிலேறும் பெருமாள் மாலை, வட பழநி யிரட்டை மணி மாலை யென்னும் இரு பிரபந்தங்களையும் யான் இயற்றி யச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளேன்.

### திருத்தணிகை ஞானம் அம்மையார்

இவர்கள் காஞ்சியை யடுத்த இராஜாம் பேட்டையிற் பிறந்து ஐயம்பேட்டையில்வாழ்க்கைப்பட்டுச் சிறுபொழுதிலேயேகணவனை யிழந்து திருத்தணிகையிலிருந்த தமது தமையனாராகிய பிரமசுனை மடம் முருகானந்த சுவாமிகளை யடைந்து தணிகை முருகர்க்குத் தொண்டு செய்து வந்தார். இவர் காசி இராமேசுரம் கதிர்காமம் முதலிய பல தலங்களுக்கும் பல முறை யாத்திரையாகச் சென்று இறைவனை வணங்கியுள்ளார். திருத்தணிகையையடைந்த பிறகு முருகானந்த சுவாமிகளிடத்திலும் சடையம்மாளென்னும் அம்மையாரிடத்திலும் கல்வி பயின்றார். கந்தர் சட்டி விழாவாகிய ஆறு நாட்களிலும் நீரைத் தவிர வேறு உணவின்றிக்கந்தபுராண முழுவதும் பாராயணஞ் செய்து முடித்து முருகனை வணங்குவதனைத் தவிரா விரதமாகக் கொண்டிருந்தார்கள்.

கீழ்த்திருத்தணிகையி லுள்ள ஆறுமுக சுவாமி கோயிலையும் வீராட்டகாசர் திருக்கோயிலையும் பெரிதாய்ப் புதுப்பித்துத் திருப்பணி செய்தவர்கள் இவ்வம்மையாரவர்களே. சென்னை யிலுள்ள பெருங்குடும்பத்தவர் பலராலும் பாராட்டப் பெறும் சிறப்பு இவருக் குண்டு. இவரது சமாதி கீழ்த் திருத்தணிகையி லமைந்துள்ளது. இவ்வம்மையாரின் தமையனாராகிய முருகானந்த சுவாமிகள் திருவாசகத்திற்கும் திருக்குறளுக்கும் மிக அழகாக உரை கூறுவதில் வல்லவர். திருவல்லிக்கேணி செய்யக்காரத் தெருவிலுள்ள முருகப் பெருமான் திருக்கோயிலாகிய செவ்வேள் கோட்டத்தினைத் திருத்தணிகை அமைப்பினைப்போலவே புதுவதாக நிறுவியவர் இச் சுவாமிகளேயாவர். உடன் பிறந்தாராகிய இவ்விருவரும் எனக்கு நெருங்கிய உறவினராவார்கள்.

### திருக்குருகூர் ஞான சித்தர்

திருநெல்வேலி ஜில்லா திருக்குருகூர் வாசியாகிய ஞானசித்தர்

என்னுமிப் பெரியாரொடு யான் நெருங்கிப் பழகியுள்ளேன். இவர் பல நூல்களியற்றியுள்ளார். தேர்ந்த மருத்துவர். பூவிருந்த வல்லி, திருவானைக்கா முதலிய விடங்களிற் சித்த முறைப்படி பல யாகங்கள் செய்து முடித்த அநுபூதிமானுவர். இவரது வரலாறு 722 பாடல்களில் திருமயிலை வித்துவான் சண்முகம் பிள்ளையவர்களால் 'திருக்குருகூர்ச் சித்த மான்மியம்' என்ற பெயராலியற்றப் பெற்றுளது. இந்நூலில் "சென்னை நகர் வித்துவான்கள் சித்தர்க்குச் சாத்திய பாமாலை" யென்னுந்தலைப்பின்கீழ் வரும் பாடலில் பிள்ளையவர்கள் அடியேனைச் 'சொந்தமாம் நாகலிங்கம்' எனப் பாராட்டியுள்ளார்கள். அப்பாடல்:

"அந்தமகங் காணவந்த வடமொழி
வல்லுநர் பலரா மன்பரோடுஞ்
செந்தமிழ்தேர் திருச்சிற்றம் [சால்
பலஞானிசெங்கல்வ ராயன் சீர்
சந்தமிகு கிருஷ்ணையன் கலியாண
சுந்தரனற் றங்க வேலு
சொந்தமாநாகலிங்கஞ்சிங்காரவேலன்
முன்னோர் சூழ்ந்து நின்று"

என்பதாகும்.

திருக்குருகூர் ஞான சித்தர் ஆகிய இச்சுவாமிகள் இயற்றிய காஞ்சிபுரம் ஐயன் பேட்டை கந்த கோட்ட மாலைக்கு யான் சிறப்புப் பாயிரமாக ஒரு பாடல் பாடியுள்ளேன். அப்பாடல்,

'விந்தம் பிலம்புகுத
வீறழித்த மாதவனே
சொந்தகுரு ஞானசித்த
வேந்தனுலா—சந்தமிகு
கந்தகோட் டத்துக்
கவிநூறு மோதுபவர்
பந்தமொழித் தாள்வார் பதி'

என்பதாகும்.

## ஞானனந்தர்

புதுச்சேரியில் அம்பலத்தாடு மடம் அல்லது பாதபூஜாமடம் என வழங்கும் மடம் ஒன்றுண்டு. தில்லை யம்பலவாணர் தமது திருக்கரத்தா லெழுதியருளிய திருவாசகத்தின் படி அப்படியே ஒருவெள்ளிப்பேழையில் வைத்து இம்மடத்திற் பாதுகாக்கப்பட்டுவருவதாக ஒருசிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அம்மடத்தைச் சேர்ந்த ஞானனந்தர் என்னும் முனிவரைக் கண்டு மெய்கண்ட சாத்திரப் படி யொன்று கொடுத்தேன். அதைக் கண்ணுற்ற சுவாமிகள் சித்தாந்த தீபிகை யென்னும் பத்திரிகையில்என்னைப்பாராட்டி யெழுதியுள்ளார்கள்.

## பெருநகர் வைத்தியலிங்க முதலியாரும் அவர் சகோதரர்களும்

காஞ்சிபுரத்திற்குத் தெற்கே ஏறக்குறையப் பதின்மூன்று கல் தொலைவிற் பெருநகர் என்னுஞ் சிற்றூருளது. அவ்வூரில் ஒரு பெரிய சிவாலய மிருக்கிறது, பிரமன் பூசித்த காரணத்தால் அவ்வூரைப் பிரம நகரெனவும் இவ்வூரிலெழுந்தருளிய இறைவனைப் பிரமபுரீசர் எனவும் வழங்குவர். தணிகைப்புராண ஆசிரியராகிய கச்சியப்ப முனிவரவர்கள் இவ்வூர் சிவபிரான்மீது 'பிரமேசர் பதிற்றுப் பத்தந்தாதி' என்

னும் பிரபந்த மியற்றியுள்ளார். இவ்வூர்ச் சந்நிதி வீதியில் வைத்திய லிங்க முதலியார், அம்பல வாண முதலியார், சொக்கலிங்க முதலியார் என்னும் சகோதர ராகிய மூவரும் தமிழ்ப் பெரும் புலவர்களாக விளங்கி யிருந்தார்கள். இம் மூவ்ரைப் பற்றியும் யான் எண்ணுந் தோறும் சிவப்பிரகாசசுவாமிகள் வேலையர், கருணைப் பிரகாசர் ஆகிய மூன்று புலவர் பெருமக் களின் நினைவு வருவதுண்டு. உடன் பிறந்தாராகிய இம்மூவ ரும் ஒரே சகோதரியையுடைய வர்களாகவும் புலவர்களாகவும் வீரசைவக்கொள்கையினராகவும் விளங்கியதனுலும், இம்மூவருள் முன்னவரும்பின்னவரும் காலஞ் சென்ற பின்னர் இடைப்பட்டவ ராகியஅம்பலவாண முதலியா ரென்பவர்மட்டும் பின்னும்வாழ்ந் தமையாலும், சிவப்பிரகாசர்முத லிய மூவர் வரலாற்றுடன் இம் மூவர் வரலாறும் ஒத்து நிற்றல் காணலாம். இவர்களுள் மூத்தவ ராகிய வைத்தியலிங்கமுதலியார் மைசூர், பெங்களூர் முதலிய விடங்களுக்குச் சென்று வீர சைவ நூல்களையும் பிறசாத்திரங் களையும் பிரசங்கஞ்செய்தும் உப தேசித்தும் வந்தார். இவர் திருப் பாதிரிப்புலியூரை யடுத்த வண் டிப் பாளையத்தில் ஆறு திங்கள் வரையில் தங்கியிருந்து பல நூல்களைப் பிரசங்கஞ் செய்து வந்தபோது இவரது முயற்சி யாலேயே அவ்வூரில் சுப்பிரமணி யர் கோவிலுக்குக் கடைக்கா லெடுக்கப்பட்டது.

பின்னவராகிய சொக்கலிங்க முதலியாரின் மகள் வயிற்றுப் பெயர்த்தியே பி. செ. மாணிக்க வாசக முதலியாரின் மனைவியா வார். இச்சகோதரர் மூவர் பாலும் தமிழ் பயின்ற மாணவர் பலராவர். அவருள் இப்போது காஞ்சியில் வதியும் தில்லைமுதலி யாரவர்களும் ஒருவர்.

### மாளும்பதி
### கலிதீர்த்தான் முதலியார்

மேற்கூறிய பெருநகர்க்குத் தெற்கே ஒரு கல் தொலைவி லுள்ள மாளும்பதியென வழங் கும் வானவன்மாதேவி யென் னும் சிற்றூரில் அறுபதாண்டு களுக்கு முன் பல புலவர்க ளிருந்ததாகக் கேள்விப்பட்டிருக் கிறேன். அவர்களுள் யானறிந்த வர் கலிதீர்த்தான்முதலியாரென் பவராவர். இவர் தமிழ்தெலுங் காகிய இரு மொழிகளிலும் வல் லவர். வழிநடைப்பதம்,மாலை, சத கம், நாடகம் முதலிய பல திறப் பிரபந்தங்களையும் இயற்றியவர். பள்ளியிற் பயிலும் மணவர்கட்கு நாடக முதலியன தாமே யியற் றிப் பயிற்றுவித்து நடிக்கச்செய் பவர். சோதிடத்தில் வல்லவர். இவர்தம் வாழ்க்கையின் பிற் பகுதியில் தமது ஒரே புதல்வ ராகிய பாலசுப்பிரமணிய முதலி யாரை ஆங்கிலம் பயிலச்செய்யும் பொருட்டுச் சென்னையில் வாழ்ந்து வந்தார். இப்போது எலக்ட்ரிகல் இஞ்சினியராகவிருந் துவரும் M, B. கந்தசாமி முத லியார் B,A.,B.E. இக் கலிதீர்த் தான் முதலியாரின் மகன் வழிப் பேரராவார். இவர் தென்னிந்திய

செங்குந்த மகாஜன சங்கந் தொடங்கிய நாள் தொட்டு அதனுடன் நெருங்கிய தொடர்புடையவரா யிருந்து வருகிறார்கள்.

நமது தலைச்சங்கம் தொடங்கிய நாள் முதல் அதனோடுநெருங்கிய தொடர்புடையவராய்ப் பல்லாற்றானும் சமூகத்தொண்டு ஆற்றி வரும் மா. அ. கனகசபை பிறந்ததும் இம்மானும் பதியே யாகையால் அவ்வூரில் மா. அ. க ஆவணித்திங்கள் தோறும் ஒட்டக் கூத்தர் திருநட்சத்திரம் கொண்டாடிவருவது வழக்கம். அவர் வேண்டுகோட் கிணங்கி ஓராண்டு அவ் விழாவிற்குச் சென்றிருந்தேன். மாலையில் கூத்தர்பட ஊர்வலம் ஆனதும் சு. அருணசல முதலியார் என்னும் சைவப் புராணிகர் வீட்டில்கூடிய பெருங் கூட்டத்தில் யான் மா. அ. க. அவர்களால் அறிமுகஞ் செய்விக்கப்பட்ட பிறகு கூத்தர் வரலாற்றில் முதன்மையான சில பகுதிகளை எடுத்து விளக்கிக்கூறினேன். கூட்டமுடிவில் பெருநகர் தில்லை முதலியாரின் மாணவராகிய வித்வான் பிச்சை லிங்க முதலியார் பாராட்டிப் பேசி வந்தனேப சாரம் கூறினர்.

## என் துறவும் காசி யாத்திரையும்

என் ஆசிரியர் சித்தாந்த சரபம், அஷ்டாவதானம் பூவை கலியாண சுந்தர முதலியாரைப் பின்பற்றிக் காஞ்சிபுரம் ஞானப் பிரகாச சுவாமிகள் ஆதீனத்தில் துறவறம் பெற்றேன். அப்போது யான் அச் சுவாமிகளால் "நாகலிங்க • முனிவர்" 'கச்சியடிகள்' என்ற பட்டங்கள் வழங்கப் பெற்றேன். எனது துறவுக்குப்பின் 1926 ஆம் ஆண்டில் காசியாத்திரை செய்தேன். அப்போது அரக்கோணத்தில் ரயில்வே ஸ்டோர்ஸ் தலைவராக இருந்த புதுச்சேரி சரவண முதலியார் என்பார் சபை கூட்டி மரியாதையும் பொருளுதவியும் செய்து என்னை அனுப்பிவைத்தார். யான் காசியாத்திரை செல்வதை அறிந்த பொன்னேரிசண்முக முதலியார் என்னும் அன்பர் திருக்கூட்டத்தோடு பெல்லாரியில் என்னைக் கண்டு வரவேற்று சிறப்பித்து வழி அனுப்பி வைத்தார். காசி திருப்பனந்தாள் மடத்தில் சுப்பராயபிள்ளையவர்களாலும், கயாவில் திருவாவடுதுறை மடம் கலியாண சுந்தரம்பிள்ளை யவர்களாலும், கல்கத்தாவில் அக்கவுண்டெண்டு ஜனரல் ஆபீஸில் சூப்பரிண்டெண்டெண்டாக (Supdt. Accountant General office) இருந்த மைலாப்பூர் வேலு முதலியார், நீலகண்ட ஐயர், நெடும்பாக்கம் ஜமீன்குடும்பத்தைச் சேர்ந்த சுப்பராய முதலியார் ஆகிய அறிஞர்களால் வரவேற்று உபசரிக்கப் பெற்றேன். சுப்பராய முதலியார் என் பொருட்டு ஒரு பெரிய விருந்து நடத்தினர். சிங்கார வேலர் கோயிலில் விஸ்வநாதஞ் செட்டியார் முதலிய நகரத்துச் செட்டிமார்கள் எனக்கு வேண்டிய உபசாரங்களும் வசதிகளும் செய்து யான் சென்னைக்கு வந்து சேரும்

வரை இரண்டாம் வகுப்பு டிக்கட்டும் வாங்கிக் கொடுத்து உபசரித்து வழியனுப்பினர்கள். கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு வரும் வழியில் பொன்னேரியில் ரெவினியூ இன்ஸ் பெக்டராக இருந்த பி. செ. வீராசாமி முதலியார் வீட்டில் தங்கி இளைப்பாற்றிக் கொண்டு சென்னைவந்து சேர்ந்தேன். இவ் வீராசாமி முதலியார் செங்குந்தமித்திரன் பி. செ. மாணிக்கவாசக முதலியாரின் மூத்த சகோதரர். இவர் இளமையிலேயே ஆங்கிலத்தோடுதமிழும் கற்றுவல்ல ஒரு சைவசித்தாந்தப் புலவர். ஒருபா உண்மை உபதேசம் என்ற நூலின் முதற்பதிப்பு இவரது ஆதரவினலேயே என்னல் வெளியிடப் படுவதாயிற்று. விருத்தப்பாவினல் இவர் இயற்றிய காயாரோகண புராணம் என்ற ஒரு அரியநூல் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளால் பார்வையிடப் பட்டது. அந்நூல் இதுவரை அச்சிடப்பெறுமலே இருக்கிறது.

பல்லாவரம் மறைமலேயடிகள், சைவசித்தாந்தக் கொள்கைகளை ஆங்கிலம் உணர்ந்த உலகம் அறிந்துகொள்ளுமாறு ஆங்கிலத்தில் "சித்தாந்த தீபிகை" என்னும்ஒருதிங்களிதழைத்தமது சொந்தப் பொறுப்பிலேயே பல்லாண்டுகள் நடத்திவந்த J. N. நல்லசாமிப் பிள்ளை, திருவிதாங்கூர் பொன்னம்பலம் பிள்ளை போன்ற எண்ணிறந்த பேரறிஞர் களிடத்தில் நெருங்கிய தொடர்பு எனக்குண்டு. அவர்களைப்பற்றிய அரிய குறிப்புக்களையும் ஈண்டு தொகுப்பின் அது ஒரு பெருநூலாக விரியுமாதலால் காலம்இடம் முதலிய வசதிகளைக் கருதி இவ்வளவோடு நிறுத்திக் கொண்டேன்.

## செங்குந்தர் இயக்கம்

எனது இளமைக்காலந்தொட்டு என்னலியன்ற அளவு தமிழன்னைக்கும் சைவத்திற்கும் தொண்டாற்றிவந்ததோடு என் குலமுன்னேற்றத்திற்காகவும் பல்லாற்ருனும் முயன்று தொண்டாற்றி வந்தேன். ஆங்காங்குள்ள குலாபிமானிகளும் இவ்வழியில் சென்ற நாற்பது ஆண்டுகளாகச் சிறுசிறு முயற்சிகள் செய்து வந்தார்கள். செங்குந்தர்களிடையே அழகான திடமான நாட்டுக்கட்டுப்பாடுகள் பண்டைக் காலத்தில் இருந்து வந்தன. அப்பெருங் கட்டுப்பாடுகள் ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளாகச் சிதைய ஆரம்பித்தன. முதலில் மகா நாட்டார் ஊக்கந்தளர்ந்து கட்டுப்பாட்டைத் தளரவிட்டனர். திசைநாடுகளும் மகாநாட்டைப் பின் தொடரலாயின. நாளடைவில் கிளைநாடுகளுங்கூடச் சிதைய ஆரம்பித்தன என்ருலும் கிளை நாட்டுக் கட்டுப்பாடுகள் பெரும்பாலும் இன்றுவரை செயலிலிருந்து வருகின்றன. ஆனல் செங்குந்த சமூகத் தலைவர் யாவரும் ஓரே இனத்தவர் என்ற உணர்ச்சி உயிரற்றுப் போயிற்று. அவ்வுணர்ச்சியை உண்டாக்கவும் இக்கால முறைப்படிசீர்திருத்தம் செய்து சமூகத்தை முன்னேற்றவும் வேண்டும் என்ற எண்ணங் கொண்டே பல அறிஞர்களும்

முயன்று வந்தார்கள். பழைய கட்டுப்பாடுகள் சிதைவுற்றதன் காரணமாகச் சீர்திருத்தமுயன்ற அறிஞர்களுக்கு வசதிக் குறைவுகள் ஏற்பட்டன.

தாழ்ந்தநிலை அடைந்துள்ள செங்குந்த சமூகத்தை முன்னேற்ற வேண்டுமாயின் தமிழ் நாட்டில் பொதுச்சங்க மொன்றும் பத்திரிகை ஒன்றும் வேண்டும் என்றுணர்ந்த யானும் பிற நண்பர்களும் இயன்றவரை இடைவிடாது உழைத்து வந்தோம். ஏறக்குறைய முப்பதாண்டுகளுக்குமுன் மயிலாப்பூர் வேலு முதலியார் (Supdt. Postal Audit Office), குழந்தைவேல் முதலியார் (Manager, Finger Print Office) முதலிய பிரமுகர்கள் முயற்சியால் சென்னை மைலாப்பூர் வெள்ளீஸ்வரர் கோயில் மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் கூடிற்று. அக்கூட்டத்திற்கு சுவாமி உருத்திர கோடீசுவரர், மைலாப்பூர் வேலுமுதலியார், குழந்தைவேல் முதலியார், மா. அ. கனகசபை முதலியார், சிதம்பரம் சபாபதி முதலியார் முதலியநண்பர்களும் பிறரும் பெருந்திரளாக வந்திருந்தனர். யானும் சென்றிருந்தேன். மகாநாடு ஒன்று கூட்டவேண்டுமென்றும் அதற்காக ஒரு வரவேற்புக்கழகம் அமைக்கவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டு வரவேற்புக் கழகமும் அமைக்கப்பட்டது. அக்கழகம் அதற்கு மேல் முயன்று வேலை செய்யவில்லை. இவ்வாறு இரண்டொரு இடங்களிலும் முயற்சிகள் செய்யப்பட்டன. இதற்கிடையே காஞ்சிபுரம் தலைவர் ம. சாமிநாத முதலியார், பி. செ. முருகேச முதலியார், கா. வேலு முதலியார், S. P. சிங்காரவேலுமுதலியார் M.A., L.T., (Principal Pachayappan College) முதலியவர்கள் முயற்சியால் காஞ்சி கச்சபேசுரர் கோயிலில் கூட்டங் கூடிச் சமூக முன்னேற்றத்திற்கான முயற்சிகளைச் செய்து வந்தார்கள்.

இம்முயற்சியிற்பங்குகொண்ட பேராசிரியர் S. P. சிங்காரவேலு முதலியாரவர்களைப்பற்றி ஒரு சில கூறுதல் இன்றியமையாததாகும். இவர்கள் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் கணிதப் பேராசிரியராகத் தொண்டாற்றினார்கள். வெள்ளைக்காரர்களையே காலேஜ் பிரின்சிபாலாக அமைப்பது என்னுங் கருத்துக் கொண்ட அக்கால ஆட்சியிலே நம் முதலியாரவர்களை முதன் முதல் பச்சையப்பன் காலேஜ் பிரின்சிபாலாக ஏற்றுக்கொண்டனர் என்பதனை எண்ணுங்கால் இவர்களது கல்விப்புலமை நன்கு விளங்குகின்றதன்றோ. இவர்களிடத்திற் கணிதம் பயின்று பிற்காலத்தில் அரசியற் பதவிகளிலிருந்த சில முதியவர்கள் இவர்களை உளமாரப் பாராட்டியதைக் கேட்டிருக்கிறேன். இவர்களின் தம்பியாரும் ஓய்வுபெற்ற ஜில்லா போர்டு இஞ்சினியராக உள்ளவரும் ஆகிய திரு ஐயாசாமி முதலியாரவர்களின் மருகரே இப்போது தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் அமைச்ச

ராக விருந்துவரும் திரு. சி. நடராஜ முதலியார் B.A.,B.L., ஆவர்.

கல்வித்துறையில் மேம்பட்ட என் நண்பர் பேராசிரியர் சிங்காரவேலு முதலியாரவர்களைப் போலவே சென்னையில் தொண்டை மண்டலம் உயர்நிலைப்பள்ளி, பச்சையப்பன் கல்லூரி ஆகியவற்றில் தலைமையாசிரியராயிருந்து பின் கண்டிக் காலேஜ் பிரின்சிபாலாகச்சென்று கல்விப் பணிபுரிந்த பாலசுப்பிரமணிய முதலியார் M. A. அவர்களும் செங்குந்த அறிஞர்களுட் குறிப்பிடத்தக்கவராவர்.

மலையாளத்தைச் சேர்ந்த கொல்லங்கோட்டில் பெரிய வீட்டார் முயற்சியால் பழநி பாத்திரக்கடை குழந்தைவேல் முதலியார் தலைமையில் ஒரு மகாநாடு கூடிற்று. அச்சமயம் பலசீர்திருத்தத்தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. நாகப்பட்டினத்தையடுத்த பொருள் வைத்த சேரியில் நாகை நல்ல முத்து முதலியார் தலைமையில் ஒரு மகாநாடு கூட்டப்பட்டது. அம்மகாநாட்டுக்கு யானும் சென்றிருந்தேன். திருவாரூர் தி. நா. சபாபதி முதலியார், மஞ்சட்கொல்லை இராமசாமிமுதலியார் முதலிய பல பிரபலஸ்தர்கள் வந்திருந்தார்கள். மகாநாடு வெற்றிகரமாக நடந்தேறிற்று. ஆங்காங்கு பேரார்வங் கொண்டிருந்தார்கள். இந்நிலையில் சமூகம் பக்குவப்பட்டு வந்தது. பொருள்வைத்தசேரி மகாநாட்டுக்கு வந்திருந்த திரு. தி. நா. சபாபதிமுதலியார் சென்னையில் சமூக நன்மைக்காக உழைக்கக் கூடிய சங்கம் ஒன்றை உடனே நிறுவவேண்டுமென்றும் பத்திரிகை ஒன்றுநடத்தவேண்டுமென்றும் தீர்மானித்துக் கொண்டார். அவற்றிற்கானவற்றை உடனே செய்யத் துவக்கினர்.

சங்கம் ஆரம்பிக்குமுன் செங்குந்த குலவரலாற்றையும் வெற்றிகளையும் பற்றிக் கூறும் பல பிரபந்தங்கள் அடங்கிய நூல்திரட்டு செங்குந்தர் பிரபந்தத் திரட்டு என்னும் பெயரால் 1926 - ஆம் ஆண்டு தி. நா. சபாபதி முதலியார் அவர்கள் பொருள் உதவி கொண்டு என்னால் வெளியிடப் பட்டது.

"செங்குந்த மித்திரன்" என்னும் திங்களிதழ் வள்ளல் தி. நா. சபாபதி முதலியார் அவர்களால் (1927 ஆம் ஆண்டு ஜனவரி) அட்சய ஆண்டு தைத் திங்களில் துவக்கப் பட்டது. நாலா பக்கங்களிலுமுள்ள குலாபிமானிகள் மித்திரனை ஆதரித்தார்கள். யானே அவ்விதழிற்கு ஆசிரியனாக இருந்தேன். எனக்கு உதவியாக உயர்திருவாளர்கள் ம. சண்முக சுந்தர முதலியார், எம். ஏ., எல். டி, மயிலாப்பூர் குழந்தைவேல் முதலியார், மா. அ. கனகசபை முதலியார், தி. அ. சண்முக முதலியார் முதலியவர்களிருந்து வந்தார்கள். பிரபவ, சித்திரை, 17-ம் நாள் (29-4-1927) சென்னை சௌந்தரிய மஹாலில், சென்னைநகரிலும் தமிழ்நாட்டிலுமுள்ள செங்குந்தர்களின் பொதுக் கூட்டம் ஒன்று S. குழந்தைவேலு முதலியார் தலைமையில் கூடிற்று. அச்

சமயம் செங்குந்த சமூகத்தின் முன்னேற்றத்திற்காக உழைக்கும் பொருட்டு "தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்" என்ற ஒரு சங்கம் சென்னையில் நிறுவப் பெற்றது. சென்னை அரண்மனைக்காரன் தெருவு, 31 என்னுள்ள "மதராஸ் பளைய காட்" கம்பெனிக் கட்டிடத்திலிருந்து செயலாற்றி மித்திரனையும் பொறுப்பேற்று நடத்தி வந்தது. இக்கூட்டத்திற்கு உள்ளூர் வெளியூர் பிரதிநிதிகள் ஏராளமாக வந்திருந்து மிகுந்த ஊக்கம் காட்டினார்கள். இக் கூட்டத்தின் விபரம், சங்கத்தை நடத்த ஏற்படுத்தப் பட்ட கமிட்டி உறுப்பினர் முதலியவை அவ்வாண்டு செங்குந்த மித்திரனில் கண்டுகொள்க.

## மதராஸ் பளையகாட் கம்பெனி

தென்னிந்தியாவில் தமிழர்களால் நடத்தப் பட்டு வரும் பெரிய கூட்டுறவுக்கம்பெனிகளில் மதராஸ் பளையக் காட் கம்பெனியும் ஒன்று. இது காஞ்சிபுரம், கும்மிடிபூண்டி, மதுரை, கொளும்பு, கண்டி, காலி, முதலிய இடங்களில் கிளை ஆபீசுகளை உடைத்தாயிருக்கிறது. இதன் மானேஜிங் டைரெக்டராக பல ஆண்டுகளாக இருந்து வருபவர் தி. நா. சபாபதி முதலியாராவர். இவர்கள் பெருமுயற்சியாலேயே தலைச் சங்கமும், பத்திரிகையும் நடந்தேறி வருகின்றன. பெரிய புராண மெனப்படும் திருத்தொண்டர் புராணத்திற்குத் தொகை நூலாகிய திருத்தொண்டத் தொகை சுந்தரமூர்த்தி சுவாமிகளால் இயற்றப்பட்டதற்குக் காரணமாயிருந்த, திருவாரூர் கோயிலிலுள்ள "தேவாசிரியன்" என்னும் சரித்திரப் பிரசித்தி பெற்ற மண்டபம் சென்ற பல ஆண்டுகளாகப் பழுதடைந்து மக்களால் பயன் படுத்தப் படாமலிருந்து வந்ததைக் கண்ட சபாபதி முதலியார் பதினாயிரம் ரூபாய் செலவு செய்து அண்மையில் பழுது பார்த்துத் திருப்பணி செய்துள்ளார்கள். இம்மண்டபம் சமயச் சொற்பொழிவிற்கும் திருவிழாவிற்கும் பயன்பட்டு வருகிறது. திருவாரூர் மடத்தப்புறத்திலுள்ள விநாயகர் கோயில் (முதலியார் வீட்டுக்கருகிலுள்ளது) முழுதும் இவர்களாலேயே பரிபாலிக்கப் பட்டு வருகிறது. மடத்தப்புறத்துப் பெருமாள் கோயில், திருக்குற்றாலநாதர் கோயில், திருவாரூர்த் தியாகராயர் கோயில் முதலிய கோயில்களில் முதலியாரவர்களின் தர்மங்கள் நடந்து வருகின்றன. தி. நா. சபாபதி முதலியார் பல ஆண்டுகள் திருவாரூர் நகராண்மைக் கழகத்தில் உறுப்பினராகவும்; துணைத் தலைவராகவும் தாலுக்கா போர்டு உறுப்பினராகவும் இருந்து வருகிறார்கள். கம்பெனிப் பொதுச் செலவில் காஞ்சிபுரம் கச்சபேசுரர் கோயிலிலுள் அடங்கியுள்ள "இஷ்ட சித்தீஸ்வரர் கோயில் பழுது பார்க்கப் பட்டதன்றி அக்கோயில் கும்பாபிஷேகத்தையும் கம்பெனியாரே செய்து வைப்பதாகவும் ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

வள்ளல் தி. நா. ச. அவர்களின் தமையனாரும் கம்பெனிக் கூட்டா

ளிகளில் ஒருவருமாகிய காலஞ் சென்ற திரு. கல்யாண சுந்தர முதலியார் அவர்களாலும் இப்போது அவர்கள் புதல்வராலும் அவ்வாறே மடத்தப்புறப் பெருமாள் கோயில் முதலிய பல திருக்கோயில்களில் திருப்பணி, கட்டளை முதலிய செய்யப் பட்டு வருகின்றன. மஞ்சட் கொல்லையிலுள்ள கோயில்கள் பெரும்பாலும் அவ்வூரிலுள்ள கம்பெனிக் கூட்டாளிகளால் பரிபாலிக்கப் பட்டுவருகின்றன. இக்கம்பெனிக் கூட்டாளிகளனைவரும் குலாபிமானமேலீட்டால் செங்குந்த மித்திரன் முதல் ஆண்டு இதழ்களை ஒவ்வொரு மாதம் ஒவ்வொருவர் தம் சொந்த செலவில் வெளியிட்டு உதவுவதாகத் தாங்களே வலிந்து ஏற்றுக் கொண்டது பாராட்டுதற் குரியதாகும். இவ்வாறு பளையகாட் கம்பெனிக் கூட்டாளிகள் தமிழையும் சைவத்தையும் வளர்த்து வருகிறார்கள் என்பது யாவரும் அறிந்ததொன்றாம்.

## தென்னாட்டுப் பிரசாரம்

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கமும் அதன் உட்பிரிவுகளாகிய, செங்குந்த மித்திரன், செங்குந்தர் விடுதி, கல்விநிதி முதலியயாவும் மதராஸ் பளையகாட் கம்பெனியாரால் ஆரம்ப முதல் இன்றளவும் பெரிதும் ஆதரிக்கப் பட்டு வருகின்றன. தலைச் சங்கத்திற்கெனக் கம்பெனியில் மகமை ஒன்று ஏற்படுத்தி அதன் வருவாயைச் சங்கத்திற்குத் தவறாது இதுவரையில் கொடுத்து வருகிறார்கள்.

மகமை காரணமாக செங்குந்த மித்திரன் ஆசிரியர் பதவியிலிருந்து யான் விலகிக் கொண்டபிறகு தலைச்சங்கக் காரியதரிசியாகிய திரு. ம. சண்முக சுந்தர முதலியார் ஆசிரியராக அமர்ந்து தென்னாடு முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து ஆங்காங்கு பல கிளைச் சங்கங்களையும் ஏற்படுத்தினார். செங்குந்த மித்திரன் பிரசாரகர்களாக இருந்த தி. அ. சண்முக முதலியார், பி. செ. மாணிக்கவாசக முதலியார் ஆகியவர்களும் மா. அ. கனக சபை முதலியார் S. மீனாட்சி சுந்தர முதலியார், பன்னிருகைப் பெருமாள் முதலியார், A. S. முத்தைய முதலியார், V. S. சங்கர சுப்பிரமணிய முதலியார் முதலிய குலாபிமானிகளும் பல சுற்றுப் பிரயாணங்கள் செய்து சந்தா நேயர்களையும் கிளைச் சங்கங்களையும் பெருக்கியதோடு செங்குந்த மக்களிடையே கூட்டங்கள் கூட்டி சொற்பொழிவுகள் வாயிலாக விழிப்பையும் கிளர்ச்சியையும் உண்டாக்கியது என்றும் மறக்கற் பாலதன்று.

செங்குந்த மக்கள் தலைச் சங்கத்தின் தீர்மானங்களையும் பிறவற்றையும் பொன்னே போல் போற்றிப் பின்பற்றத் தொடங்கினர். செங்குந்தமித்திரன் தலைச் சங்கத்தின் ஆதாவில் வெளிவர ஆரம்பித்த பின்னர் மிகுந்த செல்வாக்குள்ள சமூகப் பத்திரிகைகளுள் ஒன்றாகத் திகழ ஆரம்பித்தது. செங்குந்தமக்கள் தமிழ் நாட்டில் எந்தெந்த ஊர்களில்

வசிக்கிறார்கள் என்பதும், கடல் கடந்த நாடுகளுள் இலங்கை, பர்மா, மலேயா, சிங்கப்பூர், பினாங்கு, பெடரேடெட் மலேயா ஸ்டேட்ஸ், கொட்டால், டிரான்ஸ்வால் முதலிய தென்னாப்பிரிக்கா நாடுகள், தென் அமெரிக்கா, ஆகிய நாடுகளில் சென்று குடியேறி இருக்கிறார்கள் என்பதும் செங்குந்த மித்திரனாலேயே வெளியாயிற்று. செங்குந்தர்கள் மித்திரனையும் தலைச் சங்கத்தையும், இதன் தொடர்பான கல்விநிதி, சென்னை அரண்மனைக்காரத் தெரு 33 எண்ணுள்ள செங்குந்தர் மாளிகை முதலியவற்றையும் தங்கள் சமூகத்தைப் பேண வந்த பெரும் பேறுகளாகக் கருதி வருகிறார்கள். இவ்வளவிற்கும் காரண பூதராக இருந்து வரும் திருவாரூர் தி. நா. சபாபதி முதலியார் அவர்களை வள்ளலார் என அழைக்க ஆரம்பித்தார்கள். முதலியார் அவர்களின் பெயர் செங்குந்த உலக முழுதும் பரவிற்று.

தலைச் சங்கத்தின் முதல் தலைவராகத் தண்டையார் பேட்டை P. V. நடராஜ முதலியார், B.A., B.L., தேர்ந்தெடுக்கப் பட்டார். இவர் சென்னை கார்பொரேஷன் கௌன்சிலராகவும், பின்னர் இந்து அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தின் கமிஷனராகவும் இருந்தவர். இவர் காலமான பிறகு ஈரோட்டில் கூடிய தென்னிந்திய செங்குந்தர் முதல் மகா நாட்டுத் தலைவராயிருந்து மிகத் திறமையாக அதை நடத்திக் கொடுத்த, புதுச்சேரி ஆ. வே. முத்தையமுதலியார் (B.A., B.L., SecretraiateGeneral) அவர்கள் நம் தலைச்சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

## ஆ. வே. முத்தைய முதலியார்

திரு. ஆ. வே. முத்தைய முதலியார் அவர்கள் புதுச்சேரியில் சரித்திரப் பிரசித்தி பெற்றதும், செல்வாக்குள்ளதுமாகிய ஒரு செங்குந்த குடும்பத்தில் பிறந்தவர். இவரது பாட்டனாராகிய ஆனந்த முதலியாரும் தகப்பனாராகிய வேலாயுத முதலியாரும் அச்சிறுபாக்கம் முதலிய பல பிரசித்தி பெற்ற கோயில்களுக்குத் தர்மகர்த்தாக்களாக இருந்தது மன்றி பல பொது தர்மங்களையும் செய்தவர்கள். முத்தைய முதலியார் ஆங்கிலம் பிரஞ்சு தமிழ் முதலிய பல மொழிகளில் வல்ல பேரறிஞர். பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய நாடுகட்குச் சென்று யாத்திரை செய்து நிறைந்த உலக அனுபவம் பெற்றவர். எக்காரணம் பற்றியும் தாம்கொண்ட கொள்கையினின்று மாறாத திட சித்தமுடையவர். சென்னை அடையாறு பிரம்மஞான சங்கத்தில் முக்கிய உறுப்பினருள் ஒருவராய் உயர் பதவி வகித்தவர். மூடக் கொள்கைகளில் நம்பிக்கை வைக்காத முதலியார் அவர்களைப்பலர் அவருடைய உண்மைக் கொள்கைகளைத் தெரிந்துகொள்ளும் சத்தியற்றவர்களாய் நாத்திகரென்றும், சுயமரியாதைக் கூட்டத்தைச் சார்ந்தவரென்றும் சொல்லிக் கொள்வதுண்டு. சைவசித்தாந்தம், தேவாரம் திருவாசகம், தாயுமானவர் முதலிய உயர் சைவ நூல்களில் ஆழ்ந்த

ஞானமும், பற்றும் உடைய செங்குந்த அறிஞர்கள் உண்டெனில் அவர்களுள் முதன்மை இடம் பெறக்கூடியவர் முதலியார் அவர்களே என்பது மிகையாகாது. இவர்களிடத்துள்ள மிக உயரிய ஒழுக்க நெறியையும், ஞான நிலையையும் கண்ட செங்குந்த மக்கள் இவரை 'மகாத்மா' என்று அழைக்கலாயினர். பிரஞ்சு அரசாங்கத்தில் (Secretariate General) உயரமைச்சர் உத்தியோகத்திலிருந்தவர். ஆங்கிலத்தில் சர் (Sir) பட்டத்திற்குச் சமமான ஷேவாலியே தெலாலெழியோங்தொனேர் என்னும் கௌரவபட்டம் பெற்றவர். இவர் அரசாங்க உத்தியோகத்திலிருந்து ஓய்வுபெற்ற சில நாட்களிலேயே அரவிந்தாஸ்ரமத்தில் சேர்ந்து தொண்டாற்றி வருகிறார்.

கிளைச்சங்கங்களும் பிறவும்.

தலைச்சங்கத்து நிர்வாகிகளின் முயற்சியாலும், பொதுமக்களின் பேருதவியாலும், பதினோராயிர ரூபாய் வரையில் செங்குந்தர் கல்வி நிதிக்கு மூலதனமாகவும், செங்குந்த மித்திரன் அச்சகம் ஒன்றும், ஏறக்குறைய பன்னீராயிரம் ரூபாய் மதிப்பிடத் தக்க 'செங்குந்தர் மாளிகை' என்னும் பெயரால் சென்னைக்கு வரும் செங்குந்தர்கள் தங்க ஒரு செங்குந்தர் விடுதியும் இப்போது ஏற்படுத்தப்பட்டுள்ளன.

தலைச்சங்கமும், செங்குந்தர் கல்விநிதியும் அரசாங்கத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. தமிழ் நாட்டிலுள்ள பலபேரூர்களிலும் சிற்றூர்களிலும் ஏறக்குறைய 250 சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. அவற்றுள் 150 சங்கங்கள் வரையில் தலைச் சங்கத்தோடு இணைக்கப்பட்டுள்ளன. ஆப்பிரிக்கா திரான்ஸ்வால்செங்குந்தர் சங்கம் முதன்மையான கிளைச் சங்கங்களுள் ஒன்றாகும். தலைச் சங்கத்திற்குத் தேவையான போதெல்லாம் நூற்றுக் கணக்கிலும், ஆயிரக்கணக்கிலும் பொருளுதவிசெய்து வருகிறது. செங்குந்த குலமணி சொக்கலிங்க முதலியார் அவர்களும் மற்ற குலாபிமானிகளும் திரான்ஸ்வாலில் பெருந் தொண்டாற்றி வருவது மிகவும்போற்றத்தக்கது. மதுரை தல்லாகுளம் கிளைச்சங்கமும் திரான்ஸ்வால் சங்கத்தோடு ஒப்பிட்டுச் சொல்லத்தகும் நிலைமையிலிருக்கிறது. செங்குந்தர் கிளர்ச்சியின் பயனாக விழுப்புரத்தை அடுத்த கல்லாலம் பூண்டி என்னும் ஒரு சிற்றூரில் சிவஞான சிவயோக முருகானந்த சுவாமிகள் என்னும் பெரியாரால் அண்மையில் ஒட்டக் கூத்தர் பெயரால் ஒரு திருமடம் கட்டப்பெற்று இருக்கிறது. இதில் ஒட்டக்கூத்தர் சிலை ஒன்று நிறுவப்பட்டு இவ்வாண்டு கும்பாபிஷேகம் செய்யப்படுமெனக் கேள்விப் படுகிறேன்.

தலைச்சங்கத் தொண்டின் பயனாக 1929 தொடங்கி ஈரோடு, காஞ்சிபுரம், மயிலாப்பூர், திருவாரூர், திருவத்திபுரம், அம்பாசமுத்திரம், மதுரை, திருவானைக்கா, பரமக்குடி ஆகிய இடங்களில் தென்னிந்திய செங்

குந்தர் மாகாண மகாநாடுகள் சிறப்புற நிகழ்ந்தன. ஒவ்வொரு மகாநாட்டிலும் நாடு முழுதும் பரவியுள்ள செங்குந்தர்கள் பல்லாயிரக்கணக்கினராகவந்து சிறப்பித்தார்கள். நம் சங்கந் தோன்று தற்குமுன் கல்வித் துறையிற் பின்னின்ற செங்குந்தர் சமூகம் பட்டதாரிகள் பலரைப் பெற்று நாளடைவில் விழிப்புற்று முன்னேறத் தொடங்கியது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். எனினும் இச் சமூகம் கல்வித்துறையிலும் தொழிற்றுறையிலும் பிறவற்றிலும் பிற்பட்டசமூகமாகவே இன்றுவரை யிருந்து வருவது மிகவும் வருந்தத் தக்கதாகும். சமூகச் செல்வர்களும் அரசினரும் ஆவன செய்ய முற்படின் நாம் எதிர்பார்த்த நலன்கள் உண்டாவதுறுதி.

என்போன்றோர் முயற்சியாலும், சிறப்பாகத் திருவாரூர் தி. நா. சபாபதி வள்ளலாரும் பொதுவாக மதராஸ் பாளையகாட் கம்பெனிக் கூட்டாளிகளும் வேண்டும்போதெல்லாம் செய்துவந்த பொருளுதவியாலும் சமூகமுன்னேற்றத்தில் ஆர்வங் கொண்டு ஆங்காங்கு வதியும் குந்தர்குலப் பெரியோர்களின் ஆதரவாலும் என் இளம்பருவத்தில் உள்ளத்தில் அரும்பியஎண்ணம் என் காலத்திலேயே நன்றாகப் பூத்து, காய்த்து, பழுத்து யான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே பலன் தந்து வருவதைக் கண்ணாரக் கண்டு கழிபேருவகை எய்துவதோடு இறுமாப்பும் கொள்ளுகின்றேன். யான் இப்பிறவியின் பயனை முழுதும் பெற்றதாகவே கருதுகிறேன். பின்வரும் சந்ததியார் காலத்திற் கேற்றவாறு மித்திரன் சங்கம், கல்விநிதி, விடுதி, அச்சகம் முதலியவற்றை மேன்மேலும் விருத்திசெய்து தக்க முறையில் பயன் படுத்திக்கொள்வார்களென்று நம்புகிறேன். எம் குலதெய்வமாகிய திருத்தணிகை வேலன் இளைஞர்களுக்கு உறு துணையாக இருந்து ஊக்குவித்து சமூகத்தார் மேன்மை யடையுமாறு அருள்புரிவானாக.

சிதம்பரம் காலை சந்திக்கட்டளை தென்னாட்டுச் செங்குந்தப் பொது மக்களால் செய்யப்பட்டு வருவதுபோலவே திருத்தணிகை காலை சந்திக்கட்டளையும் சத்திரவாடி நாட்டுச் செங்குந்தர்களால் நடத்தப்பட்டுவருகிறதென்பதை அன்பர்களுக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். யான் பல முறை செய்துள்ள தென்னாட்டு யாத்திரையின்போது ஒரு அரிய உண்மைகண்டேன். அஃதென்னையோ வெனின் தமிழ் நாட்டில் பாடல் பெற்றும் பெறாமலும் உள்ள பிரபல சைவக்கோயில்களில் நடக்கும் பிரமோற்சவங்களில் நிகழும் கொடியேற்றுத்திருநாளும் கடைசித் திருநாளும் பெரும்பாலும் தொன்றுதொட்டு செங்குந்தர்களாலேயே செய்யப்பட்டு வருகின்றன என்பதாகும்.

## நூல் வெளியீடு

திருத்தணிகை வண்ணமஞ்சரி (வெளியிட்டவர் இராசா சர் இராமசாமி முதலியார்) தென் கடம்பந்துறை பதிற்றுப்பத் தந்தாதி, வடபழநி மயிலேறும்

பெருமாள்மாலை, வடபழநி இரட்டைமணிமாலை, திருவாமாத்தூர் வண்ணங்கள், திருவெறும்பியூர் புராணம் முதலிய பல நூல்கள் யானியற்றியவை.

தாயுமானவர் (குறிப்புரையுடன்), பன்னிருதிருமுறை(பண்முறை), காஞ்சிபுராணம், காஞ்சி கட்டளைக்கலித்துறை புராணம், திருமுறைத்திரட்டு, (திருப்புகழ்) பன்னிரு முறைத்திரட்டு, மெய்கண்ட சாத்திரங்கள் (தனித்தனியாகவும்,ஒன்ருகவும்),திருவாவடுதுறை ஆதீனத்து வரலாறு (காஞ்சி புராணத்திலும், சிவஞானமுனிவர் பிரபந்தத் திரட்டிலும்), கச்சியப்பமுனிவர் இயற்றிய தணிகைப் பதிற்றுப்பத் தந்தாதி, கச்சியானந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்து, காஞ்சி சரவண தேசிகர் சாத்திரத்திரட்டு, திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் (உரையுடன்), திருவாவடுதுறை சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகளின் உத்தரவுப்படி சுந்தரர் தேவாரம் (பெரிய புராணத்தில் சொல்லப்பட்ட முறைப்படி தலங்கள் உள்ள இடம், அவற்றிற்குப் போகும் வழி முதலியவற்றைக் காட்டும் குறிப்புகளுடன்) செங்குந்தர்பிரபந்தத்திரட்டு, காரனேஷன் தமிழ் அகராதி, முதலிய பலவும் என்னுல் அச்சிட்டு வெளியிடப்பட்ட நூல்களாகும். பல அறிஞர்களுக்காக எனது அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்ட நூல்கள் மிகப்பலவாம்.

சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினன்கையும் முதல் முதலில் ஒன்ருக அச்சிட்டு அதற்கு மெய்கண்ட சாத்திரம் எனப்பெயர் கொடுத்தமைக்காகப் பிறரால் பெரிதும் பாராட்டப்பெறும் பேறுஎனக்குக்கிடைத்தது பற்றி மகிழ்ச்சியடைகின்றேன். இதைக் கண்டு மகிழ்ந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் எனக்கு "மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்" என்ற பட்டத்தை வழங்கியருளினுர்கள். யான் அச்சிட்ட மெய்கண்ட சாத்திரத்தை முயன்று பரவச்செய்தவர்கள் மாரியப்ப முதலியார் (Spl Asst. to the I. G. Regn.) டாக்டர் போப், பெங்களூர் மெய்கண்ட முதலியார், சூளைம்பேட்டை ஜமீன்தார் முத்துக்குமாரசாமி முதலியார் B.A., வெள்ளைநாடார் குமாரர் இரத்தினசாமி நாடார் முதலியோராவர். காஞ்சி சச்சபேசுரத்தில் கூடிய பேரவையில் "காஞ்சி மகாநாட்டு வித்யாப் பிரசாரகர்" என்னும் பட்டம்எனக்கு அறிஞர்களால் வழங்கப்பட்டது.

மறைத்திரு, மறைமலையடிகள், நல்லசாமிப்பிள்ளை (B. A., B. L., (Dist. Munsiff) சிதம்பரம் தாசில் பொன்னுசாமி முதலியார் B. A., பாண்டித் துரைத்தேவர் முதலிய பல சைவப் பேறிஞர்களின் முயற்சியால் நிறுவப் பெற்று முதல் முதலாக சிதம்பரத்தில் கூடிய சைவசித்தாந்த சமாஜம் தென்னுட்டில் நாளடைவில் வேரூன்றிப் பெருந் தொண்டாற்றி வருவதைக்கண்டு யான் பெரு மகிழ்ச்சி அடைகின்றேன். இச் சமாஜத்தைத் தோற்றுவிக்கும் பொருட்டு மேற்கூறிய பெரியோர்கள் செய்த முயற்சியில் யானும்பங்குகொண்டு உழைத்து

வக்கீலன் என்பதை கண்டு தெரி வித்துக்கொள்ளுகிறேன்.

என் வயதின் காரணமாக நினைவுக் குறைவு மிகுதியால் பல முதன்மையான நிகழ்ச்சிகள் என் நினைவுக்கு வரவில்லை. பல நாட்கள் எண்ணிப் பார்த்து என் வாழ்க்கை வரலாற்றை எழுது வதற்கும் காலமில்லை. என் வரலாற்றைப் படித்து அதனால் உலகம் பயனடையும் என்ற கருத்தால் இதை யான் எழுதினேன் அல்லேன். பின்னை யாதோ வெனின் என் வாழ்நாளில் யான் கண்டு அளவளாவும் பேறுபெற்ற பல பெரியோர்களின் வரலாறுகள் பின்சந்ததியாருக்குப் பயன் தரக்கூடும் என்றகருத்தினாலேயே எனது நண்பர்களின் வேண்டு கோளுக் கிணங்கி ஒருவாறு எழு தத்துணிந்தேன். 80 - ஆண்டுகள் நிறைந்த இம்முதுமைப் பருவத்தில் உடற் சோர்வும் ஞாபகக் குறைவும்பிறவும் உண்டாயிருப்பினும் இயற்கையன்னையின் அருளால் இப்பருவத்துப்பெரியோர்களின் சராசரி யாற்றலுக்கு மேம்பட்ட ஆற்ற லுடனேயே யான் இன்றளவும் இருந்துவருகிறேன். இதற்குக் காரணம் 'எம்மையாளுடைய தணிகை வேலனே எனக்குத் தோன்றாத் துணையாவன், அவன் காட்டிய வழியே யான் நடத்தற்குரியன்' என்ற திடமான எண்ணம் ஒன்றே என்பதை எனது இளைய நண்பர்களுக்கு எடுத்துரைக்கக் கடமைப் பட்டுள்ளேன்,

எனக்கு மயிலேறும்பெருமாள், தணிகைராயன், சரவணப் பெருமாள் என்ற மூன்று புதல்வர்களும், கஜவல்லி என்ற ஒருகுமாரத்தியும், பேரன் பெயர்த்திகளும் உண்டு.

மலாக்கா சாமிநாத முதலியார் (பெரிய பஞ்சு வியாபாரி) காவேரிப்பாக்கம் வரதராஜ முதலியார் (Retd. Supt) மூங்கில் வியாபாரி தட்சிணாமூர்த்தி முதலியார் (ஷெ கா. வ. அவர்கள் மருகர் பெரிய வியாபாரி), சைதாப் பேட்டை விநாயக முதலியார், ஆதிசேஷ முதலியார் மனைவி பத்மாவதியம்மாள் முதலியோர் எனது மாணாக்கராவர்.

வாழி தமிழ்நாடு வாழிதமிழ் மக்கள்,
வாழி தமிழ்ச்சமயம், வாழியமெய் கண்டான்சீர்,
வாழ்க திருத்தோண்டை மாநாடு, வான்புகழால்
வாழியவண் காஞ்சி நகர்.

திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை.



வண்ணக்களஞ்சியம்

காஞ்சி நாகலிங்க முனிவர்

# திருப்புகழ்

வ. சு. செங்கல்வராயப் பிள்ளை பி. ஏ.

சிவபிரானுக்குத் தேவார திருவாசகங்கள் எவ்வளவு உகந்த தோத்திரங்களோ அவ்வளவு உகந்த தோத்திரம் செவ்வேளுக்குத் திருப்புகழ். இதனை, ஒரு பெரியார்—

> "அருணகிரி நாதன் அகிலதலத் தன்னைக்
> கருணையினாற் பாடுங் கவிபோற்—பிரியமுற
> வேறுமோர் புன்கவிகள் வேலோனே நின்செவியில்
> ஏறுமோ என்னே இனி"

என விளக்கினர். இனி, இத் திருப்புகழின், பெயர்க்காரணம், இலக்கணம், சொல்லழகு, பொருட் சிறப்பு என்பவற்றைச் சுருக்கமாக விளக்குவாம்:

(i) பேயர்க் காரணம்: இந்நூல் இறைவனுடைய புகழ்நூலாதலின் "திருப்புகழ்" எனப்பட்டது. மனிதன் புகழ் - புகழ்; கடவுளின் புகழ்—"திருப்புகழ்." திருமுல்லை வாயில் தேவாரத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்— "திருப்புகழ் விருப்பாற் பன்னலந் தமிழாற் பாடுவேற் கருள்வாய் பாசுபதா பரஞ்சுடரே," "திருப்புகழ் விருப்பால் பாடிய அடியேன் படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே"—என இறைவன் புகழைத் "திருப்புகழ்" எனச் சுட்டிக் காட்டினர். அருணகிரியார் பாடிய சந்தப்பாக்களுக்குத் "திருப்புகழ்" என்னும் அருமைப்பெயரை அமைத்தவர் செய்ப்பதியில [செய்ப்பதி - செய் - வயல்; பதி - ஊர்] வயலூரில் வீற்றிருக்கும் முருகவேளோ அல்லது வயலூர் விநாயக மூர்த்தியோ இருவரில் ஒருவரா யிருத்தல் வேண்டும். இது சுவாமிகள்—திருப்புகழில் ஓரிடத்தில்—"தனி வேலா - குருநாதா - பெருமாளே, திருப்புகழ் நித்தம் பாடுமன்பது செப்பதியிற் றந்தவனீயே" (105) என்று முருகரையும், "வித்தக மருப்புடைய பெருமாளே! செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே"—"அருளிற் சீர் பொயாத கணபதி"—என்று வயலூர்ப் பொய்யாப் பிள்ளையாரையும் பாராட்டி யுள்ளமையாற் புலப்படுகின்றது.

(ii) இலக்கணம்: பலவகைய சந்தக் குறிப்புக்கள் அமைந்த இத் திருப்புகழ் சந்தநூல் வகைக்கே பிதாஸ்தானத்தில் நிற்கின்றது. சுவாமிகள் பாடிய பதினாயிரம் பாடல்களிற் கிடைத்த 1300 பாக்களே 1008 விதமான சந்தங்களால் விளங்குகின்றன. இவரது சந்தப் பாக்களைப் பின்பற்றிப் பாடப்பெற்றன "ராமாநுஜதாசன் நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ்," "திறப்புகழ்" ஆதிய நூல்கள்,

சந்தப்பாக்களுக்கு அருணகிரியாரது திருப்புகழ் ஆதிநூலாதலின் இப்போது திருப்புகழ் என்னும் சொல்லுக்குப் பொருள் சந்தவகையில் பாடப்பட்ட நூல் என்னும் அளவிலே குறுகிவிட்டது. "காமாக்ஷி திருப்புகழ்" என்றால் காமாக்ஷி அம்மைமீது சந்தப்பா—என்பதே பொருள்.

(iii) சொல்லழகு : சந்த நூலாதலின் இயல்பாகவே சொல்லழகு திருப்புகழ்ப் பாக்களுக்கு அமைந்து கிடக்கின்றது. மெல்லோசையில் ஓர் பாடலை எடுத்தால் பாடல் முழுமையும் மெல்லோசையே வரவேண்டும். இங்ஙனம் எந்த ஓசையில் முதலடி அமைகின்றதோ அந்த ஓசையே பாடல் முழுமையும் வரவேண்டும். இதற்கு ஒவ்வோர் உதாரணம் காட்டுவாம் :—

1. **மெல்லோசை :**— அன்பர்நெஞ் சின்புறுஞ் செஞ்சொலன் கந்தனென்
றண்டரண் டந்தொழும் பெருமாளே. (1104)

2. **இடையின ஓசை :**—மெய்யர் மெய்ய பொய்யர் பொய்ய
வெள்ளை வெள்ளி நகர்வாழ்வே. (665)

3. **வல்லோசை :**—சுத்தச் சித் தத்துப் பத்திப்பத் தர்க்கொத்
துச்சற்றர்ச் சிக்கப் பெறுவேனோ (477)

பொருட்சிறப்பு :—திருப்புகழின் பொருட் சிறப்பை நன்குணர்ந்தவர் தாயுமானவரே. "அருணகிரி யப்பா உனைப்போல மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார் ?"—என்றும் "அறிவை அறிவதுவே யாடும் பொருளென் றுறுதி சொன்ன உண்மையினை யோருநா ளெந் நாளோ ?"—என்றும் வியந்துள்ளார். பின்னும், ஒரு பெரியார்—

'வேதம் வேண்டாம் சகல வித்தைவேண் டாங்கீத
நாதம் வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம்.'

என உறுதிபட உரைத்துள்ளார். சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் நான்கு வழிகளையும் நன்கெடுத்து உணர்த்துவது திருப்புகழ் நூல். இத்துணைச் சிறப்புள்ள காரணத்தால்—திருப்புகழும் தேவாரம்போலப் பெருமை அடைந்து சுவாமி சந்நிதானத்திலும், பஜனைகளிலும், இசையரங்குகளிலும், பள்ளிக்கூடங்களிலும் பாடப்பட்டு வருகின்றது. கூட்டமாய்ப் பலர்பாடினும் கேட்க மிக இனிமையாயிருக்கும் அரிய நூல் திருப்புகழ்.

"தொண்டத் தொகையினுடன் கூடித் தொனிக்க இனிக்குந் திருப்புகழை" எனத் திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் ஆசிரியர் பாராட்டியுள்ளார். இசைக்கும், தாளத்துக்கும் வேண்டிய இலக்கணங்கள் எல்லாம் நிரம்ப அமைந்துள்ள காரணத்தால் இசை நூலா

ரும் திருப்புகழைப் பெரிதும் பாராட்டுகின்றனர். வேதாகம சாரங்கள் எல்லாம் திருப்புகழிற் செறிந்துள்ள காரணத்தால் திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் ஆசிரியர்—"சிவாகம வகையும் சதுமறையும்...வடித்த திருப்புகழ்" என்றார். திருப்புகழ் ஒரு உத்தம சமரச நூல். அது முருகபிராற்கே உரிய துதி நூலாயிருந்தும், அதில் கணபதி, சிவபிரான், உமாதேவி, திருமால் ஆகிய நால்வர் மீதும் மிக இனிமையான தோத்திரங்கள் அமைந்துள்ளன. இதற்கும் ஒருதாரணம் காட்டுவாம்.

1. கணபதி :—

குஞ்சர மாமுக விக்கி னப்ரபு, அங்குச பாச கரப்ர சித்தனுர்
கொம்பன் மகோதரன் முக்கண் விக்ரம—கணராஜன்
கும்பிடு வார்வினை பற்றறுப்பவன், எங்கள் விநாயக னக்கர்பெற்றருள்
குன்றைய ரூபக கற்ப கப்பிளை (495

2. சிவபிரான் :—

பரதத்தை யடக்கி நடிப்பவர், த்ரிபுரத்தை யெரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர் தேர் கப்—
பரையுற்ற கரத்தர் மிகப்பகி, ரதியுற்ற சிரத்தர் நிறத்துயர்
பரவத்தர் பொருப்பி லிருப்பவர் உமையாளர் ;
சுரர் சுத்தர் மனத்துறை வித்தகர், பணிபத்தர் பவத்தை யறுப்பவர்
சுடலைப்பொ டியைப்பரி சிப்பவர் (1177)

3. உமாதேவி :—

நாரணி அறத்தினுரி ஆறுசமயத்து பூத, நாயக ரிடத்து காமி மகமாயி
நாடக நடத்திகோல நீலவருணத்தி வேத, நாயகி உமைச்சி நீலி
[திரிசூலி
வாரணி முலைச்சி ஞான பூரணி கலைச்சி. (898)

4. திருமால் :—

மகர சலநிதி முறையிட நிசிசரன், மகுட மொருபது மிருபது திரள்புய
வரையு மறவொரு கணைதெரி புயல் ; குரு ந்ருபதனு தன்—
மடுவில் மதகரி முதலென உதவிய, வரத னிருதிறல் மருதொடு பொருத
மதலை குதலையின் மறைமொழி யிகழிர ணியனுகம் ; [வன்
உகிரி னுதிகொடு வகிருமொ ரடலரி, திகிரி தரமர கதகிரி யெரியுமிழ்
உரக சுடிகையில் நடநவில் அரி. (1009)

இங்ஙனம் இருப்பதால் சைவர், வைணவர், தேவி வழிபாட்டினர் யாவரும் திருப்புகழைப் பேதமனமின்றிப் பாராட்டுவர். பின்னும் திருப்புகழில் அனேக பாடல்களில் வேசையர் உறவு பொல்லாதது எனக் கூற வந்த சுவாமிகள் காம சாத்திர இலக்கணங்களைப் பசுமரத்தாணிபோற் பதிவுபட எடுத்தோதி யுள்ளாராதலின் திருப்புகழைக் காமிகளும் காமிப்பர் என்க. எனவே, திருக்கோவையாரைப்பற்றி ஆன்றோர் கூறிய தனிப்பாடலைப் பின் வருமாறு திருப்புகழுக்கு மாற்றிப் பொருந்த உரைக்கலாம் ;—

ஆரணங் காமென்பர் அந்தணர், யோகியர் ஆகமத்தின்
காரணங் காமென்பர், காமுகர் காமநன் னூலதென்பர்,
ஏரணங் காமென்பர் எண்ணர், எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காய திருப்புகழ்ப் பாக்களைச் செப்பிடினே.

நாலாய அருமறையின் நவரசத்தை வடித்தெடுத்துப்
பாலாய திருப்புகழ்ப்பா பதினாறு யிரம்பாடி
மேலாய பரம்பொருளை மேவியவம் அருணகிரி
காலாய தாமரையென் கன்னெஞ்சில் மலர்ந்திடுமோ.

இக் கட்டுரை திருப்புகழ்க்குப் பொருளாயுள்ள திருத்தணிகை யாண்டவரிடத்து இணையிலாப் பத்தி பூண்டவரும், தணிகையை மறவாது அடிக்கடிச் சென்று தொழுது வழிபடும் நோன்பு வாய்ந்த தவச் செல்வரும், மெய்கண்ட சாத்திர மாதிய கணக்கிலாத் தமிழ் நூல்களைச் சேகரித்து வெளியிடுந் தொண்டில் அறுபது ஆண்டு களுக்குமேல் உழைத்துவருபவரும், தணிகை சம்பந்தமான ஆற்றுப் படை ஆதிய நூல்களை வெளியிட்டவரும், சந்த நூலாகத் 'தணிகை வண்ண மஞ்சரி' என்னும் அரிய நூலைப் பாடியவருமான தமிழ்ப் பெரியார் வண்ணக் களஞ்சியம் - நாகலிங்க முனிவரது (சதாபிஷேகம்) முத்து விழாவின் ஞாபகார்த்தமாகத் திருத்தணிகேசரது திரு வடிச் சிந்தனையுடன் எழுதியதாகும். திருத்தணிகேசர் வாழ்க— திருப்புகழ் வாழ்க—வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர் வாழ்க. வாழ்க பல்லாண்டு.

---

## நிலை மண்டில ஆசிரியம்

நற்றமி ழாய்ந்த நந்தலில் புலவ !
நாக லிங்கமெனும் நற்பெயர் பெற்றோய் !
நின்மல அறிவுகால் நிகரில் புலவோய் !
நீணிலம் இதனில் நூற்பல வியற்றினை
நுண்பொரு ளனைத்தும் நுட்பமா யுணர்ந்த
நூதன அறிவுசேர் நூலாசிரியனே !
நெடுமைசேர் முத்துவிழா நிகழ்த்தப் பெற்றோய் !
நேர்மையாய் வாழும் நெறியில் நிற்போய் !
நைபுணம் படைத்த நற்றமிழ்ப் பாவல !
நொதுமலர்ப் பங்க நுகர்ச்சி யுற்றிடு
நோக்கல் குணமுடை நோன்புறு வள்ளால் !
நௌவி பாகனுல் நாளும்வா ழியவே.

தமிழ்ப்புலவர் சா. அமிர்தலிங்கனார்,
தொண்டமண்டல உயர்நிலைப்பள்ளி

# கம்பி இல்லாத் தந்தி

ச. த. சற்குணர், பி. ஏ.

ஆகாயம் என்பது அளவிட முடியாத ஏகாண்டப் பெருவெளி. அவ்வெளியிலேதான் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியனவும், நமது உலகமும் அந்தரத்தில் நின்று இயங்குகின்றன.

அவ்வாறு இயங்கும் இவ்வுலகத்தைக் காற்று ஒரு போர்வை போலச் சூழ்ந்திருக்கின்றது. நம் உலகத்தில் சுரங்கங்கள் எவ்வளவு ஆழமாயிருப்பினும், அங்கும் காற்று உண்டு; மலைச் சிகரங்கள் எவ்வளவு உயரமாயிருப்பினும், அவற்றின்மேலும் காற்று உண்டு. ஆனால் ஆகாயத்தில் ஏற ஏற அக்காற்றுத் தன் கனம் குறைந்து, ஏறக்குறைய நூறு மைல்களுக்கு மேல் முற்றும் இல்லாமற் போகின்றது. மேல்வானத்திற் காற்று இயங்குவதில்லை என்று நம் முன்னோரும் அறிந்திருந்தனர். அதனால்,

"வளி இடை வழங்கா வானம்,"

அஃதாவது, காற்று இடையில் இயங்காத ஆகாயம் என்று மேல் வானத்தை அவர் கூறியுள்ளார். எனவே, ஆகாயத்தில் ஒரு சிறு பகுதியில் மாத்திரம் காற்று உண்டு என்பது விளங்கும். இப் பகுதியையே "வாயுப்பதம்" அல்லது "வாயுமண்டலம்" என்பர்.

ஆனால், ஆகாயமெங்கும் நிரம்பியிருக்கும் மற்றொரு பொருள் உளது. அஃது இல்லாத இடமே இல்லை. காற்று உள்ள இடத்திலும், காற்று இல்லாத இடத்திலும் எங்குமே அஃது இருக்கின்றது. ஆயினும், அது மிக மெல்லிய காற்றிலும் அதிநுட்பமுடையது. ஆகையால் அது கண்களுக்குப் புலப்படுவதில்லை. இந்த அதி சூட்சுமப் பொருளை ஆங்கில விஞ்ஞானிகள் "ஈதெர்" என்பர்.

ஈதெர் மூலமாகத்தான் சூரிய வெப்பம் எங்கும் செல்கின்றது. ஈதெர் மூலமாகத்தான் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், நெருப்பு முதலியவற்றின் ஒளி எங்கும் பரவுகின்றது. ஈதெர் மூலமாகத்தான் பொருள்களின் உருவங்களும் செயல்களும் கண்களுக்குத் தெரிகின்றன. ஈதெர் மூலமாகத்தான் காந்தம், மின்சாரம் முதலிய சக்திகள் நடைபெறுகின்றன. அன்றியும், அவசரமான செய்திகளை நாம் தந்தியடிக்கும்போது, அச் செய்திகள் செல்லுவதும் ஈதெர் மூலமாகத்தான்.

ஆனால், தந்திச் செய்திகள் கம்பியின் மூலமாகவே செல்லுகின்றன என்று பலர் இன்னும் தவறாக நினைக்கின்றபடியே, எல்லாரும் சில ஆண்டுகளுக்குமுன் நினைத்தனர். இப்போதோ, அச் செய்தி

களைக் கொண்டுபோவது கம்பி அல்ல, அக்கம்பியைச் சூழ்ந்துள்ள ஈதரே என்பதும், நீராவியால் ஓடும் ரேல்வண்டிகளுக்கு ரேலாகிய தண்டவாளம் வழிகாட்டியாயிருப்பது போல, ஈதராற் செல்லுகின்ற தந்திச் செய்திகளுக்குக் கம்பி வழிகாட்டியேயன்றி வேறல்ல என்பதும் தெரியவந்தன.

ஆகையால், வழிகாட்டியாகிய கம்பி இல்லாமல் செய்திகளை உலகத்தில் எவ்விடத்திற்கும் ஈதர் மூலமாக அனுப்பும் முறை பின்னர் எளிதிற் கண்டுபிடிக்கப்பட்டு, இப்போது வழங்கிவருகின்றது. இவ்வாறு கம்பி இல்லாமல் செய்திகளை அனுப்புவதைத்தான் "கம்பி இல்லாத் தந்தி" என்கின்றோம்.

இனி, கம்பியின் உதவியில்லாமல், ஈதர் மூலமாகச் செய்திகள் எவ்வாறு செல்லுகின்றன என்று சிறிது நோக்குவோம்.

நாம் ஒன்றைப் பேசத் தொடங்குமுன், இன்னது பேச வேண்டும் என்னும் கருத்து நம் மனத்தில் முதலாவது எழுகின்றது. அதற்குப் பின், நமது நுரையீரல்களாகிய சுவாசப் பைகள் இரண்டிலிருந்தும் மேல் நோக்கி எழும் காற்று குரல்வளையில் உள்ள குரல் நரம்புகள் இரண்டிற்கும் இடையே புகுந்துவரும்போது, அந் நரம்புகள் அக் கருத்திற்கு ஏற்றபடி அசைக்கும். அந்த அசைவு அங்கிருந்து வெளிவரும் காற்றில் அலைகளை உண்டாக்கும். அவ்வலைகளை உடைய காற்று, அண்ணம், நா, உதடு, பல், மூக்கு, இவற்றின் செயலாற் பலவிதமாக மாறுபட்டு, நம்மைச் சுற்றி ஆகாயத்திலுள்ள காற்றிலும் அலைகள் எழச் செய்யும். கடைசியாக, இவ்வலைகள் அருகில் உள்ளவரின் செவிப் புலன்களிற் பட்டவுடனே, இன்னதுதான் பேசப்பட்டது என்று அவர் மனம் அறிந்துகொள்ளும். காற்றின் அலைகள் பேசுதற்கு இவ்வாறு பயன்படுவது போல, ஈதரின் அலைகள் ஒளி, கம்பியில்லாச் செய்திகள் முதலியன செல்லுதற்குப் பயன்படுகின்றன.

ஆனால், ஈதர் மூலமாக இயற்கையாகச் செல்லும் ஒளியலைகள் கண்களிற் பட்டுப் புலனாவது போல, அதன் மூலமாக நாம் அனுப்பும் ஒலியலைகள் காதுகளிற் பட்டுப் புலனாவதில்லை. ஆகையால், அவ்வீதரின் ஒலியலைகளை ஆகாயத்திலிருந்து பெற்றுக் காதுகளுக்குப் புலனாகச் செய்தற்குத் தகுந்த கருவிகளை அமைத்திருக்கின்றனர். இக்கருவிகள்மாத்திரம் இருப்பின், உலகத்தில் எவ்விடத்திலிருந்தும் கம்பியில்லாத் தந்திச் செய்திகளை எவரும் தம் காதுகளாற் கேட்கலாம்.

இனி, கம்பித் தந்தியினும் கம்பியில்லாத் தந்தியில் அநுகூலங்கள் இல்லாதிருப்பின், கம்பியில்லாத் தந்தியைக் கண்டுபிடித்திரார். ஆகையால், அவ்வநுகூலங்களிற் சிறந்தவற்றைச் சிறிது ஆராய்வோம்.

முதலாவது: தரையில் தந்தித் தூண்கள் நடுதற்கும், கம்பிகள் போடுதற்கும் அதிகச் செலவு செல்லுகின்றது. பெருங்காற்று, பெருவெள்ளம், மரங்கள் முறிந்து வீழ்தல் முதலியவற்றாலும், பொல்லாதவராலும் கம்பிகள் அறுபட்டு நஷ்டமும், மிக அவசரமான செய்திகள் செல்லுதற்குத் தடையும், அத்தடையால் பல துன்பங்களும் பலமுறை உண்டாகின்றன. கடல் நீருக்குள்ளும் தந்திக் கம்பிகள் உண்டு. அக்கம்பிகள் நீரிற் கெட்டுப்போகாதபடி அவற்றைச் சிலவகை மரப்பிசின் கொண்டு பொதிந்து, அதற்குமேல் இருப்புக் கம்பிகள் சுற்ற வேண்டும். கம்பிகளை இவ்வாறு சுற்றிக் கடல் ஆழத்தில் இடுதற்குச் செல்லும் செலவும் கொஞ்சமல்ல. இவ்வகையான செலவுகளும் துன்பங்களும் கம்பியில்லாத் தந்தியில் ஏற்படுதற்கில்லை.

இரண்டாவது: பல்லாயிர மைல் தந்திக் கம்பிகள் தரையிலும் கடலிலும் போடப்பட்டிருப்பினும், உலகத்தில் அவை இல்லாத இடங்கள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன. கம்பியில்லாத் தந்தி செல்லாத இடமோ உலகத்தில் எங்குமே இல்லை.

"யாதும் ஊரே, யாவரும் கேளிர்" அல்லது சுற்றத்தார் என்னும் நம் முன்னோரின் முதுமொழியை மெய்ப்பித்து, உலகிலுள்ள எல்லா ஊர்களையும் எல்லா மக்களையும் அஃது இணைக்கின்றது.

மூன்றாவது: கம்பித் தந்தி இருந்தும் சில சமயங்களில் அது பயன்படாமற்போவது உண்டு. உதாரணமாக, நடுக்கடலிற் பெரிய ஆபத்திற்குட்பட்ட கப்பலொன்றிற்குக் கம்பித் தந்தியின் மூலமாக அல்ல, கம்பியில்லாத் தந்தியின் மூலமாகவே விரைவில் உதவி கிடைக்கின்றது. பெரிய நீராவிக் கப்பல்கள் ஒவ்வொன்றிலும் கம்பியில்லாத் தந்திச் செய்திகள் கேட்கும் கருவிகள் உண்டு. ஆபத்தில் அகப்பட்ட கப்பலில் உள்ளார் அனுப்பிய செய்தியை அக் கருவிகளின் உதவியால் அறிந்து, அருகிலுள்ள கப்பல்கள் தம் முழு விசையும் முடுக்கப்பட்டு மிக விரைந்து சென்று அதற்கு உதவிபுரியும். இதுவரைக்கும் எத்தனையோ மக்களின் உயிரைக் கடலில் இவ்வாறு கம்பியில்லாத் தந்தி காத்திருக்கின்றது.

நான்காவது: கம்பியின் மூலமாகத் தந்தி அடிப்பதற்கும் பெறுதற்கும் உரிய கல்வியினைக் கற்றவர் மாத்திரம் அச்செய்திகளை அனுப்பவும் அறியவும் கூடும். அவர் அவற்றை அறிந்து எழுதி அல்லது அச்சிட்டுக் கொடுத்தாலன்றி, தந்திக்கல்வி பயிலாத கற்றோரும் அவற்றை அறியார். ஆனால், கம்பியில்லாத் தந்தியின் மூலமாக எல்லாரும் தம் வாயாற் செய்திகளையும் பாடல்களையும் உபந்நியாசங்களையும் அனுப்பவும் கூடும், எல்லாரும் அவற்றைத் தம் காதாற் கேட்கவும் கூடும்.

ஐந்தாவது : உலகச் செய்திகள், பாடல்கள், பிரசங்கங்கள் முதலியவற்றை அப்போதப்போது கேட்டு அறியவும் இன்புறவும் நகரங்களிலுள்ள வசதிகளை நோக்கி, அவ்விடங்களிற் கூட்டமாகக் குடிபுகுந்து, தம் உடல் நலத்தையும், நல்ல பழக்கவழக்கங்களையும் கெடுத்துக்கொள்வது மல்லாமல், நகரங்களுக்கு ஆதாரமாகிய நாடு களும் பாழாகச் செய்வாருடைய தொகை கம்பியில்லாத் தந்தி முறை வளரவளரக் குறையும்.

ஆறுவது : இவை எல்லாவற்றிலும் சிறந்ததொரு நன்மையும் கம்பியில்லாத் தந்தியால் ஏற்படுதற்கு இடமுண்டு. அஃதாவது அறிவின் வளர்ச்சி. இவ்வுலகில் வாசிக்கக் கற்றவர் மிகச் சிலர். அவருள்ளும் சிலரே வாசிக்க விருப்பமுள்ளவர். அச்சிலருள்ளும் சிலர்தாம் நூல்கள் முதலியன வாங்கக் கூடியவர். அவற்றைத் தாம் வாங்கக் கூடியவரா யிருப்பினும், வாங்க மனமும் துணிவும் உடையார் அவரிற் சிலரே. அங்ஙனம் மனம் துணிந்து வாங்கினும், சிலர் தாம் அவற்றைத் தாமே வாசிப்போர். ஆகையால், கல்லாருள் எல்லாருமேயன்றி, கற்றாருட் பலருமே எளிதிலும் விரைவிலும் அறிவு பெறுதற்கு ஒப்பற்ற ஒரு வழியாயிருப்பது கேள்வியே. இக்கேள்வி கம்பியில்லாத் தந்தியாற் கிடைக்கத் தக்கது.

ஆகையால், வாழ்க! கம்பியில்லாத் தந்தி! ஒருமையும் நலமும் பெற்று உலகமும் வாழ்க!

---

வண்ணக்கலஞ்சியம் காஞ்சி நாகலிங்கமுனிவரின் முத்துவிழா வில் கலந்து கொள்வதற்கு எனக்கு ஒரு தகுதி உண்டு. காலஞ் சென்ற என் மாதுலர் செந்தமிழ் இரத்தினகரம் மருத்துவமணி வல்லை சண்முக முதலியாரும் வண்ணக்களஞ்சியத்தாரும் சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் சிவஸ்ரீ பூவை கலியாணசுந்தர யதீந்திரரிடம் ஒரு சாலை மாணவர்களாயிருந்து தமிழும் சைவமும் கற்றவர்களாவார்கள். எங்கள் குடும்பப் பேச்சுகளிடையே, வல்லையார் அவ்வப்போது முனிவரின் தமிழறிவையும் சைவப்பற்றையும் வியந்து கூறுவர். அச் செய்திகள் என் கருத்தைக் கவரும். "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என்னும் மணிவாசகத்துக் கேற்பவும், சேந்தனார் இறைவனுக்குப் பல்லாண்டு கூறிய முறையிலும், நானும் முனிவரை வாழ்த்தி, அவருக்குப் பல்லாண்டு கூறுகிறேன்.

வா. பா. தாமரைக்கண்ணி

---

# ஆயர்மகளிரும் ஆண்டாளும்

பண்டிதை ச. கிருஷ்ணவேணி அம்மாள்
லேடி வில்லிங்டன் கல்லூரித் தலைமைத் தமிழ் ஆசிரியை

பண்டு தமிழ் நாட்டில் நிலம் நான்காகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் ஒன்று முல்லை. இம் முல்லை நிலத்திற்கு உரியவர் ஆயர். இது முல்லைக் கொடிகளுக்கும் இருப்பிடம்; பசுக் கூட்டங்களை வளர்த்து வந்த தாய்; ஆனந்தத்தை ஊட்டும் அகம்; எங்கும் பச்சைப் பசேரென்ற புற்றரை; எங்கும் நீர் நிலைகள். இவற்றை உண்டு வளரும் ஆனிரையின் ஆற்றல் என்னே! வாங்கக் குடங்களைப் பாலால் நிரப்பும் வளப்பம் என்னே! எங்கும் பால்! எங்கும் தயிர்! எங்கும் வெண்ணெய்! எங்கும் நெய். இங்கு எச் செல்வத்திற்கேனும் குறைவுண்டோ? இதற்குத் தெய்வம் மாயோன்; 'மாயோன் மேய காடுறை உலகமும்'' என்பது தொல்காப்பியம்.

இத்துணைச் செல்வம் செறிந்த ஆயர்பாடியில் கண்ணன் தோன்றுகிறான். ஒரு புறம் ஆடல்; ஒருசார் பாடல்; ஓரிடம் ஆடவர் ஆண்மை விளையாட்டு; ஒரு பக்கம் கன்னியர் களியாட்டம். ஆயர்பாடி குதூகுலத்தில் மூழ்கி உள்ளது.

> "பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
> ஆடுவார்களும் ஆயிற்றாய்ப் பாடியே"

பாலும் வெண்ணெயும் படிந்து படிந்து முற்றம்முழுதும் சேறாயிருக்கின்றது. இக் குதூகுலத்தின் இடையில் நீலநிறக் குழந்தை ஒன்று ஒளிர்கிறது; அதன் அழகு கொழுந்து விட்டு வளர்கிறது. இக்குழவியை யாவரும் கண்ணன் என வழங்குகின்றனர். எளிமையுடையவனென்னும் பொருள் தரும் இப்பெயருக்கேற்ப இவன் யாவரிடமும் எளிமை தோன்றப் பழகி வருகிறான். ஆயினும், கன்னியரிடமே இவன் கருணை பெரிதும் கானூன்றுகிறது. கன்னியர் கலங்கா நிலையினரும் களங்கமற்றவரு மல்லரோ? மங்கையர் தொட்டு உண்ட வெண்ணெய் அன்றோ இவன் உணவு. அவரோடு கைகோத் தாடும் குரவைக் கூத்தன்றோ அவனுக்குப் பொழுது போக்கு! குழலோசையில் அவர்களைக் கூட்டிக் கூட்டிக் கண்டு மகிழ்தலன்றோ இவன் தொழில்! அவர்களோடு வாதிடுதலன்றோ இவன் வழக்கு! ஆயர் மங்கையர் வாழ்க்கை யாங்ஙனம் நடைபெறுகிறது? இவனது கருநிறம் அவர்கள் கண்ணைக் கவருகிறது! இவன் புன் முறுவல் அவர்கள் நெஞ்சை அள்ளிக் கொள்ளுகிறது; இவன் மழலைச் சொற்களும், விளையாட்டுகளும் அவர்கள் உயிரை ஊசலாடச் செய்கின்றன. இவன் கூட்டுறவு அவர்கள் ஆன்மாவை அலக்கழிக்கிறது.

ஒருவரை ஒருவர் ஓரிமைப் பொழுதும் அகல ஒருப்படார் அவர்கள் கூட்டுறவால் இவன் அடைவது ஆனந்தம். இவன் சேர்க் கையால் அவர்கள் அடைவது ஈறிலின்பம். இங்ஙனம் ஒருதலைக்காம மன்றி, இருதலையும் ஒரே இன்பவெள்ளம்பெருகுகிறது. இவ்வின்ப வெள்ளத்தால் நாடும் வளமுற்றது. இவ்வளத்தால் ஆயரும் மாண் புற்று வாழ்ந்தனர். இதனாலன்றோ அவ்வாயர் மகளிர் நம் ஆண்டா ளின் மனப்பீடத்தில் சிரிய இடத்தைப் பெற்றனர்.

அச்சேரியிலுள்ள கன்னியர் இங்ஙனம் கண்ணனோடுகளித்திருத் தலை முதியோர் ஆற்றிலர். "இச் செயல் நம் குலத்திற்கு இழிவைத் தரும்!" என அவர் கருதினர். உய்த்துணரும் நுட்ப மதியற்ற சில ஆயர், கண்ணன் இறைமையையும் கன்னியர் தெய்வக் காதலை யும், ஆன்ம பரமான்மாக்களின் பாகுபாடுகளையும் எங்ஙனம் உணர்வர்? ஆதலின், அம்முதியோர் அன்புக்கயிற்றால் கட்டுண்டுழ லும் இருதிறத்தினரையும் தனித்தனிப்பிரித்து வைத்தனர். கன்னி யர் நிலவறைகளில் அடைபட்டனர். கண்ணன் யசோதையின் கட் டுப்பாட்டில் சிக்கினன். இப்பெண்மணிகள் இன்பப் பெருக்கிற்கு இஃதொரு போக்கு வீடாய் இருந்தது. இன்றேல் மங்கையர் முடியி னும் முடிவர். இதைத்தடுக்கவே இறைவன் இச்சம்பவத்தை நிகழ்த்தி னன்போலும்! பெருகிவரும் வெள்ளத்திற்குப் போக்கிடமின்றேல் கரை உடைந்தழியாதோ? கன்னியர் மனம் கலங்கிற்று. கணமும் கண்ணனைக் காணாதிருக்கத் தரியாதார் எங்ஙனம் பல நாட்கள் அவ னைப் பாராமலிருப்பர்? கண்ணும்கண்ணீருமாய்க் காலம் கழித்தனர். இவர்கள் நெஞ்சம் அழிந்தது; மனம் மங்கியது; உடல் உரங்குன்றி யது; உயிர் ஒடுங்கியது. வனிதையர் ஆற்றொணா ஆற்றாமையால் அலறிக்கொண்டிருந்தனர்.

களங்கமற்ற கன்னியர் இறையன்புவாய்ந்த இளமங்கையர், பண் பார்ந்த பாவையர், அத்தகையோரின் மனப்புண் நாட்டின் நலத்தைக் கெடுக்காமல் விடுமோ? குலப்பெண் வயிறெரிந்தால் கொடிச்சிலையும் பற்றி எரியாதோ? ஆயர்பாடியில் மாரி நின்றது; பைங்கூழ் வாடியது; பசுக்கள் இளைத்தன; பால் வறண்டது; உணவு குறைந்தது; மானி டர் உரங்குன்றினர்; பஞ்சம் எங்கும் பறந்தது; வறுமை வளங் கொண்டது. என் செய்வார்? பாவம்! ஆயர்நிலை ஆபத்தில் அடி வைத்தது. நாட்டின் வறுமைக்குக் காரணம் கன்னியரின் கலக்கமே என்பதைச் சில முதியோர் உணர்ந்தனர்; அக்கால வழக்கின்படி மழையின் பொருட்டு மங்கையர் நோன்பிழைக்க அவர்களை வெளி யிட்டனர்; அவர்களுக்கு வேண்டியவற்றை உதவக் கண்ணனையே அமைத்தனர். உலகமுதல்வன் கன்னியர் கையாளாய் அமைந்தது வியப்பினும் வியப்பன்றோ?

அவ்வமயம் இருதிறத்தினர் களிப்பின் நிலையை யாரால் அளவிட இயலும்! பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? தம்மைத் தெரியாமலே இன்பப் பெருக்கில் இறங்கினர் மங்கையர். இவனைப் பிரிந்திருந்த துயர் நீங்கக் "கண்ணா, கண்ணா" எனப்பன்முறையும் அழைக்கின்றனர்; ஏதோ வேலை இடுபவர் போன்று நடிக்கின்றனர்; கண்ணன் அருகடைந்ததும் நகைத்து நிற்கின்றனர்; கையை நீட்டு மாறு பணிக்கின்றனர்; சிறிது புல்லைப் பிடுங்கி அவன் கையினில் இட்டுத் தொலைவில் எறியச் சொல்லுகின்றனர்; இந்நிலையில் அவன் கையழகு, முக அழகு, நடை அழகுகளைக் கண்டு களிக்கின்றனர். அவனும் இவர்கள் ஏவுதலுக்குப் பணியாளன் போன்று உடன்பட்டு நிற்கிறான்; அன்பரின் நகையும்பேச்சும் ஏவுதலும் அவன் உள்ளத்தில் உவகையை விளைவியா நிற்கின்றன. புன்சிரிப்போடு தொழில் புரியும் கண்ணனுக்கு ஓட்டமும் நடையும் அல்லாது ஒய்வேது? மங்கையர் பலரல்லரோ? இவன் ஒருவன் என் செய்வான்! இவை யாவும் கண்ணனுக்கு ஆனந்த லீலையாகக் காணப்பட்டன.

அம்மங்கையர் இங்ஙனம் கண்ணனைக் கையாளாக்கிக் கொண்டதனோடு நின்றனரா? இவன் ஒருபோது தம்மை ஏமாற்றிச்செல்லுவன்என்பதை அவ்வனிதையர் நன்கு அறிவர். இவன்மாயனல்லனோ? ஆதலின், அம்மகளிர் புருஷகாரபூதையான பெரியபிராட்டியாரையும் அருள் நிறைந்த ஆசாரியனையும் முன்னிட்டுக் கைங்கரியத் தன்மை வாய்ந்த இன்னோன்பைத் தொடங்கினர். ஆசாரியனின் அருட்பணி அவர்கள் தலை மேல் பெய்தது. பகவத் பாகவத குணப் பெருக்குகள் அம்மங்கையர்முன் ஆறுகளாய்ப் பெருகின. மழைக் கால வெள்ளமெனப்பாயும் அதில் அத்தூயோர் மூழ்கிமூழ்கிக் குளித்தனர். அகங்கார மமகாரங்கள் அவர்களை விட்டு ஓடி ஒளித்தன. என்றும் இறைக்கு அடிமைசெய்யும் கைங்கரிய நிதியைப் பெற்று மகிழ்ந்தனர். இம்முறையில் நோன்பு முடிவுற்றது. மழை பெய்து ஆயர் பாடியும் செழித்தது. மற்ற ஆயரும் வறுமை நீங்கப்பெற்று மனமகிழ்ந்தனர்.

இங்கு ஒரு பொருளைக் குறியாமற் செல்ல மனமெழவில்லை "திருமாலின் அவதாரமெனப் பகரப்படும் கண்ணன், கள்ளத்தனம் செய்தல், பெண்களிடம் முறையற்ற வழியில் நடந்து கொள்ளல் முதலியன தகுதிபுடையனவோ? இத்துணைப் பெருந்தகைமையற்ற செயல்களைச் செய்யா நிற்கும் ஒருவரை உயர்ந்தோர் எனக் கூறுதல் யாங்ஙனம்? எனச் சிலர்வாதிடுவர். இவர் நுட்ப ஆராய்ச்சி அற்றவரே ஆவர். இறைவரின் இலக்கணம் யாது? அன்புடையாருடன் கலந்து கலந்து அவர்கள் அன்பைப் பெருக்குவித்து அவர்கள் உள்ளத்தையும் உயிரையும் தம் வசப் படுத்துவதன்றோ? அதையன்றோ, உலகில் தோன்றிய கண்ணன் செயலில் காட்டுகின்றான். "உள்ளங்கவர் கள்வன்" என்றல்லவா இறை

வனைப் பெரியோர் போற்றுகின்றனர்? ஆயர் மகளிரின் வெண்ணெயையா அவன் கவர்ந்தான்! பல்வகையிலும் பண்பட்டுத் திரண்டெழுந்த அவர்தம் அன்பின் திரட்சியை அன்றோ அவன் களவாடினன்! அப் பெண்டிர் ஒவ்வொருவரிடமும் தனித்தனியே கலந்து, ஒவ்வொரு கண்ணனாய் இருந்து இன்பந் துய்த்தனனே! இஃது எதைக் காட்டுகிறது? இறை ஒவ்வொருவரிடமும் உயிர்க்குயிராய்த் திகழும் உயிர் தத்துவத்தை யன்றோ? இன்னும் அவன் பெண்களிடம் மட்டும் இப் பண்பில் பழகியதற்கும் காரணம் இல்லாமற் போகவில்லை. உண்மையை நோக்கின் ஆன்மதத்துவம் பெண்தானே? அப் பெண் தத்துவம் பெண்ணுடலையும் தாங்கி, பெண்மைக் குணங்களையும் பெற்றிருக்குமேல், இறைமைக் குணம் வாய்ந்த கண்ணன் நெஞ்சம் அவண் விட்டு வேறிடம் செல்லுமோ? அவர்கள் பெண்மைக் குணத்தோடு அல்லவா, கண்ணன் புணர்ந்து புணர்ந்து மகிழ்கின்றான். இன்னும் இவற்றைப் பொருத்தமான தத்துவங்களால் தெள்ளிதின் விளக்கிக் கேட்போர் ஒப்புக் கொள்ளுமாறும் செய்யலாம். இதற்கு இஃது இடமன்று. சுருங்கச் சொல்லின் இவ் விஷயங்களில் வாதமிடுவோர் கண்ணன் இயற்றிய தெய்வச் செயல்கள் பலவற்றையும் அவன் உண்மை இயல்புகளையும் ஆராய்ந்தறிந்து அமைவாராக!

இங்ஙனம் கண்ணன் சிறிது தம்மை விட்டுப் பிரியும்போதெல்லாம் ஆயர்மங்கையர் செயலிலாற்றிய மண்மதனை இறைஞ்சல், சிற்றில் இழைத்தல், ஆற்றில் குளித்து ஆடைகளுக்காகக் கண்ணனை வேண்டி நிற்றல், கூட லிழைத்துப் பார்த்தல் முதலியவற்றை நம் ஆண்டாள் பாவனையில் இயற்றினர். இஃது அனுகாரமாகும்.

ஆயினும், ஆய்ச்சியரைக்காட்டிலும் நம் திருப்பாவைச்செல்வியார் உயர்ந்தோராவார். யாங்ஙனம்? ஒருசெயலை உடலால்செய்வதைக் காட்டிலும் மனோபாவனையினால் இயற்றல் கடினம் என்பதற்கு ஆராய்ச்சி வேண்டுமோ? உடலைப் பயன் படுத்திப் பல அரிய காரியங்களையும் செய்து முடிக்கலாம், மனத்தைப் பண்படுத்திப் ஓர் எளிய காரியத்தையும் முற்றுப் பெறச் செய்தல் எத்துணை அருமை அன்பதை அறியாதார் யார்? மனத்தை ஒரிமைப் பொழுது நிறுத்தலும் கடினமன்றோ? அதினும் நம் சூடிக் கொடுத்தார் இப்பாவனைச் செயலிற் செல்வம், குணம், செயல் முதலியவற்றுள் பல வகைப்பட்ட ஆயர் மகளிரைத் தம்மோடு சேர்த்துக் கொள்ளுகிறார். ஆயர் இடை வகுப்பைச் சேர்ந்தவர். கோதையார் பார்ப்பன வகுப்பைச் சார்ந்தவர். இவ்விரு வகுப்பினருக்கும் கூட்டுறவு உண்டானது யாங்ஙனம்? இங்கு இவர்களுக்கு உண்டான கூட்டுறவு உடலைப் பற்றிய தன்றே! மனத்தைப் பற்றுக்கோடாகப் பற்றியதன்றோ? இவ்விரு திறத்தினருக்கும் காலம், குலம், ஒழுக்கம் யாவற்றினும் வேறுபாடு உண்டு. இவ் வேறுபாடுகள் எதனால் தோன்றாதொழிகின்றன! எது யாவற்றை

யும், மறைக்கா நின்றது? இறையன்பே யாகும். கண்ணனது பக்தி ஒன்றே எல்லா மாறுபாடுகளையும் ஒழித்து ஒன்றுபடச் செய்தது. அன்னையார் நெஞ்சும், ஆயர் நெஞ்சும் ஒன்றோடு ஒன்று கலந்து ஒரு காரியத்தையே செய்யத்தொடங்கின. ஒரு பலனையே விரும்பி நின்றன. மனத்தோடு மனம் கலத்தலின் மாண்பு என்னே! கோதையார் ஆயர் மகளிரிடம் 'மாமன் மகளே!' என உறவு பாராட்டுகிறார். திருப்பாவைச் செல்வியார் நா; "குற்றம் ஒன்றில்லாத கோவலர் தம் பொற்கொடியே, நற்செல்வன் தங்காய்" என்று அவரைப் புகழ்ந்து பேசுகிறது. ஆயர் மகளிர் மழலைச் சொற்களையே தாம் திருப்பிச் சொல்லுவதாக உறுதிப்படுத்துகிறார். "ஆச்சியர் சிந்தையுள் குழகனார் வரில் கூடிடுங்கொலே." 'என்னும் சொற்றொடரால் ஆய்ச்சியரிடம் இவர் எத்துணை மதிப்புக் கொண்டுள்ளார் என்பது விளங்கவில்லையா? நம் பெட்புடைய மங்கையார் ஆயர் மகளிர் பதின்மரையும் எழுப்புதல் ஆழ்வார்கள் பதின்மரையும் இறைபக்தியில் தாண்டிவிடுவதை நுட்பமாகத் தெரிவிக்கிறது என்பது அறிஞர் கருத்து. இவர் இயற்றிய செயல் எளிமையுடையதும், இவ்வுலகத்தைப் பற்றியது மல்லவே? பரம பக்தர்களாலும் இயற்ற இயலாததன்றோ? இவர் தொடங்கிய காரியம் இடையில் இற்றதா? இல்லையே! இவர் மனோபாவனை காரியத்தை முற்றுவித்துக் கருதிய பலனையும் அளித்ததே! இம்மனப்பான்மை, இறையைக் கனவிலும் நனவிலும் காணச் செய்தது. இறையோடு இரண்டறக் கலந்து இன்பந் துய்க்கச் செய்தது. என்ன பாவனை! என்ன பாவனை! இப்பாவனையை இடமாகக் கொண்ட உள்ளமன்றோ உயர் உள்ளம்? இவ்வுள்ளத்தின் உறுதி என்னே! திண்மை என்னே! இங்ஙனம் மனத்தைக் கட்டுப்படுத்தி ஒன்றிலேயே பதிய வைக்க யாவருக்கும் கூடுமோ? புறத்தை ஒடுக்கி அகத்தில் ஆழ்ந்திருப்பவர்க்கன்றோ இது முடிவது? சான்றோரும் அஞ்சுவது மனத்திற்கன்றோ? மனத்திற்குக் குரங்கும் தீயுமன்றோ ஒப்பிட்டுக் கூறப்படுகின்றன. மனிதன் உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்; எண்ணுவன கோடி என்பதற்கு ஒவ்வொருவரும் சான்று பகர்வாரிற்பர் என்பதில் ஐயம் யாது? அத்துணை மனத்தைக் கண்ணிற் காணும் பொருளிடத்தும், சிறுபோது நிறுத்தலே அருமை. அங்ஙனமாயின் புலனுக்கும் புலப்படாத இறையினிடத்தில் இருத்துதல் யாங்ஙனம்? இத்தகைய மனத்தை நிறுத்தியன்றோ நம் பெட்புடையார் புண்ணியச் சொரூபனைப் போற்றினார்.

இம்முறையில் உடலினால் செயல் புரிந்த ஆயர் மகளிரைக் காட்டிலும் இவர் நிலை எத்துணை உயர்ந்தது! இவர் மனத்தின் மாண்பின் முன்னே அவர் எங்கு நிற்பர்! தம் பாவனையை வரிவடிவில் பொறிக்க வழி கோலிய இவர் செயலோடு, அவர்கள் செயலை எம்முறையில் ஒப்பிடுவது!

> "தொங்கிய வண்டினங்காள் தொடு பூஞ்சுனைகாள் சுனையில்
> தங்கு செந்தாமரைகாள் எனக்கோர் சரண் சாற்றுமினே."

"அவன் செவியில் மந்திரங்கொள் வாயே போலும் வலம்புரியே
இந்திரனும் உன்னோடு செல்வத்தாக் கேலானே."

இறையை அடைய அஃறிணைப் பொருள்களைச் சரணடைந்து நிற்கும் நிலை ஆயர் மகளிர்க்கு ஏது? சங்கத்தைக் கண்டு பொருமல் அவரிடம் காண இயலுமோ? அம்மங்கையர் யாவருடைய பக்தியையும், இவர் ஒருங்கே கொண்டவரல்லரோ? இத்தன்மையில் அவர்களுக்கு இவர் தலைமை வாய்ந்தவர் என்பதற்குத் தடை யாது? ஆயர் மகளிர் தம்மைக் காட்டிலும், ஞானத்திலும் பக்தியிலும் குறைந்தவரேயாயினும், அவர்களோடு கூட்டுறவு கொள்ளலும் இறையை அடைதற்கு அவர்களையே வழிகாட்டிகளாக வகுத்தலும் எத்துணைப் பெருந்தகைமை! ஆயர் மகளிர் நாளும் பாகவதர் நெஞ்சில் உறைதல், அன்னையாராலல்லவா? இன்றேல், அவர் செயல் என்றோ மறைந்திராதோ?

வலியோரைச் சார்ந்த மெலியோரும் வளம்பெறுவர் என்பது உலகறிந்த பொருளன்றோ? ஒளி பொருந்திய விளக்கு எங்ஙனம் தன்னையும் விளக்கி மற்றப் பொருள்களையும் விளக்குகிறதோ, அங்ஙனமே நம் ஞான ஒளிவாய்ந்த கோதையாரும் தம்மையும் விளக்கி ஆயர் மகளிரையும் விளக்கி நின்றார். இதனால், இவர் ஆயர் குலத்திற்கே ஒரு விளக்கென அமைந்தார். யசோதையின் குடலை விளங்கச்செய்தவன் கண்ணன். ஆயர்மகளிர் உயிரை விளக்கஞ்செய்த உத்தமர் இவர். ஆயர் மகளிரை மட்டுமா? உலக உயிர்கள் யாவற்றையும் விளங்கச்செய்த விளக்கு இவர் என்னில் வருங்குற்றம் யாது? இவ்வுலகு உள்ளளவும் இவ்விளக்கு ஒளிராதிருக்கு மன்றோ? ஆகவே, ஆயர்மகளிரையும், உலகத்தையும் ஒளிரச் செய்த வேயர் நயந்த விளக்கு வாழ்க!

---

உயர்திரு. நாகலிங்க மாமுனிவரின் முத்துவிழா நடைபெறுவதறிந்து மகிழ்கின்றேன்.

முனிவர் எல்லா நற்குணங்களும் ஒருங்கே அமைந்த உருவினர். அவர் தமிழுக்கும் சைவத்திற்கும் செய்த தொண்டு அளப்பரிது. சைவ சித்தாந்தமா சமாசம் தோன்றிய காலமுதல் உடனிருந்து உழைத்து அதன் உயர்வுக்குப்பெரிதும் பாடுபட்டவர். இவர் உழைப்பால் செங்குந்தர் மரபே உயர்வு பெற்றது என்னலாம்.

இத்தகைய தூயருக்கு இன்று எண்பது ஆண்டு நிறைகின்றது. அவர் இன்னும் சிறக்க வாழ்ந்து நூறுண்டு விழாத் தலைவராக மிளிர வேண்டுமென வள்ளிமணாளனை வந்தித்து வணங்குகின்றேன். நாகலிங்கம் நலமுடன் வாழ்க!

சாமி சண்முகானந்தர்,
சிவநெறிக் கழகத் தலைவர்.

---

# நாகலிங்க முனிவர் நற்றொண்டுகள்

சுவாமி உருத்திரகோடீசுவரர்

எண்பது ஆண்டுகளுள் ஏறக்குறைய அறுபது ஆண்டுகள் வரையில் நற்றொண்டுகள் செய்து விளங்காநின்ற நாகலிங்க முனிவர் அவர்கள் இன்னும் நெடுங்காலம் விளங்கும் பொருட்டு இப் பாராட் டுரையை எழுதும் யாம் அறுபத்து நான்கு ஆண்டினேம். எமது பதினைந்தாவது ஆண்டிலிருந்து இம் முனிவரை யாம் அறிவேம். அக் காலத்தில் அஃதாவது 1895 ஆம் ஆண்டில் சிதம்பரம் இரத்தின சபாபதிமுதலியார், திருமழிசை முத்துசாமி முதலியார் என்றவர்கள் செங்குந்த மரபினருடைய பழைய போர்த்தொழில், வீரம், முருக வேள் பக்தி, சிவபூசை, சிவாலயத்தொண்டு, சிவதருமம், சைவசீலம், கைவண்மை என்ற இம்மாட்சிகளைச் சுட்டி முன்னோர் சிலர் நன்கு விளக்கி இயற்றிய 'ஈட்டி எழுபது', 'செங்குந்தர் பிள்ளைத் தமிழ்' முத லான நூல்களைப் பிழையற ஆராய்ந்து அச்சிட்டு வெளிப்படுத்திச் செங்குந்தகுலத்தினர்க்கு நலஞ் செய்வாராயினர். அன்னவர் நற் செயலை செங்குந்த குல திலகரான முனிவரும் பின்பற்றித் தமிழ் நாட்டிலே ஆங்காங்குச் செங்குந்தர் முன்னடையும் பொருட்டுச் செங் குந்தர் தம் பண்டைச் சிறப்பைப்பற்றிச் சொற்பொழிவுகள் ஆற் றினமையும், 'செங்குந்த மித்திரன்' 'தொழிற் கல்வி' என்றபத்திரிகை கள் நடத்தினமையுமே யல்லாமல், சாதிப்பற்று இருத்தலாகாததெ ன்று சொல்லப்படுந் தமது துறவு நிலையிலும் 'செங்குந்தர் வேண்டு கோளுக்கு இசைந்து, அவர் முன்னோர் மாட்சிகளை இக்காலத்தினர் பலரும் அறிந்து மகிழ்ந்து மேம்பாடு அடைதற்கு உதவியாக 'ஈட்டி எழுபது' முதலியன அடங்கிய 'செங்குந்தர் பிரபந்தத்திரட்டு' என் னும் செய்யுள் திரட்டை அழகுற அச்சிட்டு வெளியிடுவித்தமையும் இவர்தம் புகழிற்குரியன. செங்குந்தராயினோர் தமக்கு இவர் இக்குலத் தொண்டுகள் புரிந்தமைபற்றி இவர்பால் என்றும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையவரேயாவர்.

வட இந்தியாவில் பழைய ஆரியப் பிராமணருடைய சந்நியாச ஆசிரமம் (துறவு நிலை) சாதிவகையைப் போலக் குடீசகம், பகூதகம், ஹம்ஸம், பரம ஹம்சம் என நால் வகைப் படும். மேலும் இரண்டு வகைகளைக் கூட்டி அறுவகைகளென்றுஞ் சில நூல்களில் சொல்லப் படும். பிற்காலத்துப் பௌத்தர் ஜைனர்களுடைய துறவுமார்க்கங் களும் பலவகையின. ஸ்ரீசங்கராச்சாரியார் காலத்திலே துறவிகளுள் கிரி, புரி எனப் பல வேதங்கள் உண்டாயின. பழைய தமிழ் நாட்டில் துறவு என்பது யான் எனது என்னும் இருவகைப் பற்றும் மனத்தி னின்று அற்றுப்போகுமாறு சாதனங்கள் செய்தும், ஐம்பொறி

களைத் தம்தம் புலன்களின் மீது தீய வழிகளில் செல்லாமல் காத்தும் நின்று, தவஞ்செய்து தத்துவஞானம் அடைந்து, எல்லா மக்களிடத்தும் செந்தண்மையாகிய அருள் பூண்டு, அவர்க்குச் செய்யத்தக்க தொண்டுகள் செய்து, அந்தணராய் வாழ்தல்வேண்டுமென்னும் இலக்கணத்தையுடையதாகும். தொல்காப்பியத்தில் அறிவர் என்று குறிப்பிடப்பெற்றவர் தமிழ்த் துறவோரே யென்றறிக.

இனி, சைவசந்நியாசம் என்பது மேற்கூறப்பட்ட பழைய தமிழர்தம் துறவு இலக்கணத்தோடு, சித்தாந்த சைவசமயத்திற்குரிய தீட்சைகள் பலவற்றைப் பெற்றுக்கொண்டு, சைவசமய நெறியில் ஒழுகுதலாகும். எனவே, திரு. நாகலிங்க முனிவர்தம் துறவு சைவத் துறவாகும். இத்துறவறத்தில் நிற்கும் இவர் செங்குந்தர்பொருட்டுத் தொண்டுகள் செய்தமை செந்தண்மையும் அந்தணத்தன்மையுமாகும். அஃதாவது, துறவறத்தில் அருளறமாகும்.

புலமையாளரும் வண்ணக்களஞ்சியமும் ஆயினமையின் 'தமிழ் மொழி அகராதி' என்பதொன்றை மிகத் திறமாகப் பதிப்பித்து வெளிப்படுத்தினது தமிழகத்தில் கல்வியறிவு வாய்ந்த தமிழ் மக்கள் எல்லாராலும் என்றும் பாராட்டற்பாலதாகும். இனி இவர்தம் சமயத் தொண்டுபற்றிச் சிறிது விரித்துரைப்பேம்.

இவர் சித்தாந்த சைவசமய நெறியினராய், சைவாசார சீலராய் திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் மடங்களின்கண் உள்ள மகா சந்நிதானங்கள் என்னும் தலைவர்களோடு கலந்து பழகுபவராய் இருத்தலோடு, சித்தாந்த சைவத்திற்கு ஒரு பெருந் தொண்டு செய்திடுவாராயினர். அஃது எவ்வாறெனில், ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னே, சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞானசித்தியார் உரைகள், சிவப்பிரகாச உரை, திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் உரைகள் முதலானவைகளும், சமஸ்கிருத சிவாகமங்கள் சிலவும் சிலரால் அச்சிடப்பட்டிருந்தனவாயினும், சென்னை முதலான இடங்களில் சைவசித்தாந்த சண்டமாருதம் சோமசுந்தர நாயகர், சைவசித்தாந்த சரபம் கலியாணசுந்தர முதலியார் (பின்பு யதீந்திரர்) முதலான சைவசித்தாந்த அறிஞர் சிலர்—கேவலாத்துவிதிகள், வைணவத்துவைதிகள், வைணவ விசிட்டாத்துவிதிகள் என்பவர்களோடு பெரிதும் மாறுபட்டு, கொடுமையான வாதப்போர் விளைத்து, சுத்தாத்துவித சித்தாந்த சைவசமயக் கொள்கையைக் குறித்து விரிவுரைகள் நிகழ்த்தியும், துண்டுத் தாள்களில் பிறசமயக் கண்டனங்கள் எழுதியும் வந்தனராயினும், சிவஞானபோதம் முதலான அச் சைவசித்தாந்த தத்துவநூல்களின் தோற்றம், மாண்பு முதலியன ஒரோவோரிடத்தில் தமிழ்க் கல்வியறிவும் தமிழ்ப் புலமையும் வாய்ந்திருந்த சிலபேரைத் தவிர்த்து மற்றைய எல்லாராலும் நன்கு அறியப்பட்டுக் கற்கப்பட்டில. தத்துவஞானம் விழைந்தார் சிற்சில,

ரால் ஆங்காங்கு ஞானசிவவாதக்கட்டளை, கைவல்லிய நவநீதம், ஞான வாசிட்டம், வேதாந்த சூடாமணி, சசிவன்னபோதம், பிரபோத சந்திரோதயம், மகாராஜா துறவு, அவிரோத வுந்தியார், பஞ்சதசப் பிரகரணம், விசாரசாகரம், விருத்திப் பிரபாகரம் என்னும் ஸ்ரீ சங்கராசாரியருடைய கேவலாத்துவித வேதாந்தக் கொள்கையுடைய நூல்களே வாசிக்கப்பட்டு வந்தன. யாமும், அந்நாளில் வேதாந்தியர் சார்பால் அந்நூல்களிலேதான் பயின்றேம். அத்தகைய காலத்திலே தான், அதாவது 1897-இல், பிற்றை ஞான்று முனிவராய் விளக்க முற்ற நந்தம் நண்பர் காஞ்சி. திரு. நாகலிங்கனார், முன்னமேயே தனித்தனியே அச்சிடப்பட்டிருந்த திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் முதலான பதினான்கு நூல்களின் மூலத்தையும் உரையையும் ஒருங்கே தொகுத்து, சிவஞான போதத்திற்குச் சிவஞான முனிவர் எழுதிய சிற்றுரைக்குச் சுப்பிரமணிய தேசிகர் எழுதிய பதவுரைக் குறிப்புக் களையும், அந்நூலுக்கு அம்முனிவரே எழுதியருளிய பாஷியக் குறிப் புக்களையுஞ் சேர்த்தனர். அவையேயன்றி, சிவஞானபோதப் பன்னிர ண்டு தமிழ்ச் சூத்திரங்களின் மேற்புறத்திலே இரௌரவ ஆகமத் துள் இருப்பனவாகச் சைவ சித்தாந்திகளுள் ஒரு சாராரால் கூறப் பட்டு வரும் சம்ஸ்கிருத அநுஷ்டுப் சந்தமுடைய கிரந்தலிபி சூத்தி சூத்திரங்களையும் அக்காலத்திலேயே சேர்த்தனர்.

அங்ஙனம் தொகுத்துச் சேர்த்தும், சிவஞானபோதம் என்பது மெய்கண்ட தேவரால் அருளிச் செய்யப்பட்டமையினாலும், ஏனைய சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் முதலான பதினொரு நூல்களும் மெய்கண்ட தேவருடைய தத்துவஞான போதனைகளையே பின் தொடர்ந்த நூல்களாயினமையினாலும், 'திருவுந்தியாரும்' 'திருக் களிற்றுப்படியாரும்' மெய்கண்டார்க்கு முன்னேயிருந்த இருபெரி யோர்களின் அருளிச் செயல்களாயினும், அவையும் சைவசித்தாந் தத்தின் மெய்ம்மையையே செவ்விதின் எடுத்துரைக்கின்றமையினா லும் அப்பதினான்கு நூல்களையும் மெய்கண்ட சாத்திரம் என்னுந் திருப்பெயரால் அணிபெறச் செய்து உருவத்தில் பெரியதொரு நூலாக அச்சிடுவித்து வெளிப்படுத்திச் சைவ சமயத்தினர்க்குப் பெருந்தொண்டு செய்வாராயினர்.

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ". —தாயுமானசுவாமிகள்.

எல்லா நூல்களும் ஒருங்கே சேர்ந்து படிப்பதற்கும் ஆராய்வ தற்கும் இசைவான அப்பதிப்பால் சிவஞானபோதம் முதலான சுத்தாத்துவித மெய்கண்ட நூல்களின் பயிற்சியும் ஆராய்ச்சியும் தென் இந்தியத் தமிழ்நாட்டிலே ஆங்காங்கும், யாழ்ப்பாண நாட்டி லும் சைவர்களால் சிறிது சிறிதாகத் தொடங்கப்பட்டன. முன்னை

காலில் வேதாந்தம் என்பது கேவலாத்துவிதவாதம் எனவும் ஏகான்ம வாதம் எனவுஞ் சொல்லப்படும் சங்கர சமய நூல்களையே குறிப்ப தாயிற்று. பின்னைநாளிலே மெய்கண்ட நூல்களாலும் அவற்றின் உரைகளாலும், திருவாவடுதுறை மடத்தினின்று எழுந்த 'பண்டார சாத்திரங்கள்' என்னும் சிவஞான நூல்களாலும், குமரகுருபர சுவாமிகள் செய்தருளிய 'பண்டார மும்மணிக்கோவை' யாலும், சம்ஸ்கிருத உபநிஷதங்களாலும், சிவாகமங்களாலும் வேதாந்தம் என்பது தத்துவஞானப்பொருள் நிறைந்த உபநிஷதம் என்றும், அது எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவானது என்றும், சங்கரர், நீலகண்டர், இராமாநுஜர், மத்துவர் முதலானோர் அவ் வுபநிஷ தங்கள் சிலவற்றிற்குத் தத்தம் மனத்தின்பான்மைக்கும், அறிவுக்கும், அநுபவத்திற்கும் ஏற்பச்செய்த பாஷியங்கள் என்னும் உரைகள் வேதாந்தம் என்றே சங்கரசமயத்தினராலும், நீலகண்ட சமயத்தின ராலும், இராமாநுஜ சமயத்தினராலும், மத்துவ சமயத்தினராலும், பிறராலும் தனித்தனியேவழங்கப்படினும், சங்கரசமயமே வேதாந்தம் எனச்சிறப்பாக வழங்குகின்றது என்றும், சைவசித்தாந்தம் என்பது அவ்வேதாந்தத்தின் சாரம் என்றும் சைவராயினோர் நன்கு தெளிந் தனர். சைவர்களது அந்நிலையை யொட்டி, உயர்சைவத்திரு சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை அடிகளால் தமிழ்நாட்டில் ஆங்காங்கே சைவசித்தாந்த நுண்பொருள்கள் சைவர்பலரும் செவ்விதின் அறியு மாறு தெள்ளத்தெளித்து உரைக்கப்பட்டமையின்மீது, 1907-ஆம் ஆண்டிலே சைவ சித்தாந்த மகாசமாஜம் தோற்றமுற்று இற்றைக்கு முப்பத்தெட்டு ஆண்டுகளாகச் சிறப்புடன் நடைபெற்று வாராநிற் கின்றது. இவ்வாறு சித்தாந்தசைவம் வளர்ச்சியுற்று ஓங்குமாறு திரு. நாகலிங்க முனிவர் முதன் முதல் ஒரு பெருந்தொண்டு செய்தமை தென் இந்தியத்தமிழ் நாட்டிலும் இலங்கையைச்சார்ந்த யாழ்ப்பாண நாட்டிலும் உள்ள சைவர் யாவராலும் நன்றியறிவோடு பாராட்டற் பான்மையதென்பதாம்.

பின்னர், முனிவர்தம் மெய்கண்டசாத்திரப்பதிப்புக் கிடைப் பது அரிதாகி விட்டமையின், மெய்கண்ட சாத்திரம் பதினான்கின் மூலம் என்பதும் 'மெய்கண்ட சாத்திரம் பதினான்கின் உரை' என்பதும் முறையே சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாராலும், தருமபுர ஆதீனத்தாராலும், சைவ சித்தாந்த மகா சமாஜத் தாராலும் வெளியிடப்படுவனவாயின.

சில ஆண்டுகளுக்கு முன்பு திருநெல்வேலியில் 'மெய்கண்ட சாத்திரமாநாடு என்றும் ஒன்று திரு. நாகலிங்கர் இட்ட அப்பழைய பெயராலேயே நடைபெற்றமை அறிக.

அம்மெய்கண்ட சாததிரப் பதிப்பல்லாமலும், வேறு சில சிறு சிறு ஞானசாத்திரங்களையும் தொகுத்து முனிவர் பதிப்பாராயினர்

இருநூறு ஆண்டுகளுக்கு முன்னம் திருவாவடுதுறைச் சிவஞான முனிவர் காஞ்சிபுரத்தில் பிள்ளையார் பாளையத்திலே செங்குந்த மரபி னரால் கட்டுவிக்கப்பட்ட ஆனந்தருத்திரேசர் கோயிலிலும் திருவா வடுதுறைக்கிளை மடத்திலும் தங்கிச் செங்குந்த மரபினராலேயே ஆதரிக்கப்பெற்றுச் சிவஞானபோத மகா பாஷியம் (பேர் உரை) இயற்றி வந்தபொழுது. அவரிடத்தில் மாணவராய்த் தமிழ் இலக்கிய இலக்கணநூல்கள், சைவசித்தாந்தநூல்கள் பாடங்கேட்டவருள்ளே ஒரு வர் சரவணதேசிகர் என்ற செங்குந்தஅறிஞர். அன்னவர் திருவாவடு துறை மடத்திற்கும் திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் மடத்திற்கும் போந்து சுத்தாத்துவித ஞானோபதேசமும்கேவலாத்துவித ஞானோப தேசமும்பெற்று, கண்ணுடைய வள்ளலார் 'ஒழிவிலொடுக்க' நூற் கருத்தினையும் குமாரதேவர் 'பிரம்மாநுபூதி' நூற்கருத்தினையும் தமது உள்ளத்தின் கண்ணே அமைத்துக்கொண்டு, 'ஒருபாஉண்மை உபதேசம்', 'முத்திமுடிவு'முதலான வேதாந்த சித்தாந்தசமரசஞான நூல்கள்சிலவற்றை இயற்றினர். அவற்றுள் 'முத்திமுடிவு' என்பது எழுபது ஆண்டுகளுக்கு முன்னரேயே பிள்ளையார்பாளையத்தின்கண் செங்குந்த மரபினருள் சமரசஞானியராய் விளங்கிய அருணகிரி சுவாமிகளால் அச்சிடுவிக்கப்படுவதாயிற்று. அது பின்னரும் ஒரு வரால் அச்சில் வந்தது, அச்சிறந்த நூல்களையும் முனிவர் ஒருங்கு தொகுத்து, 'சரவணதேசிகர் சாத்திரத்திரட்டு' என அச்சிடுவித்து வெளியிட்டு, ஞானகாண்டத்தினர்க்குந் தொண்டாற்றினர். அந் நூல்களை எமது இளமைப்பருவத்தில் படித்தேம். அம் 'முத்தி முடிவு' நூலின்கண் பலவேறு சமய ஞானநுபவங்களைச் சுட்டிச் சுட்டி அறிந்து விகாரம் அடையும் மனம் அற்று ஒடுங்கும் மேலான நிலையும், அத்தற்போத ஒடுக்கத்தில் எல்லாஞான அநுபவங்களை யும் சுட்டற ஓரே அநுபவமாகக் கொண்டு சுகிக்கும் சுகாதீத சமரச ஞான நிலையும் நால்வகைச் சத்திநிபாதருள் அதி தீவிரபக்குவர்க்காக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அந்நூல் அக்காலத்திலே 'தேவிகா லோத்தரம்', 'நிஷ்டாநுபூதி' முதலான ஞான நூல்களில் பழகிய பக்குவர்களால் சிறந்தெடுத்துப் படிக்கப்பட்டது. அந்நூலில் எடுத் துக் கூறப்பட்ட அவ்வுயர்ந்த நிலைகள் நாற்பது ஆண்டுகளுக்குமுன் அப்பிள்ளையார் பாளையத்திலேயே இருந்த படப்பை வேதாசலமுதலி யார் என்ற செங்குந்த இல்லற ஞானியார் ஒருவரால் சென்னையில் ஞானநிலையினராயும் முத்தி நெறியினராயும் இருந்த கல்வியாளர் செல்வர் என்ற அன்னோர் சிலர்க்கு நடு இரவில் உபதேசிக்கப்பட்டு வந்தன அவ்வுபதேசத்தை யாமும் எமது சின்னஞ் சிறு பருவத் திலேயே கேட்கும்பேறும் பெற்றேம். மறைஞான சம்பந்தர் இயற்றிய, 'சைவசமயநெறி' என்னும் நூலில் 'தீரக்கற்றவன் தேசிகன் ஆவான்' எனக் கூறப்பட்டுளது. சரவண தேசிகர் வேதாந்த சித்தாந்த அநு பவ நூல்களைக் கலங்காமனநிலையுடன் கற்று 'முத்தி முடிவு' கூறின மையின், அவர் ஞானதீர தேசிகர் என்ற பெயர்க்கு உரியாரே

ஆயினரென்க. இப்பொழுது காஞ்சிபுரத்தில் பிள்ளையார்பாளையத்திலே செங்குந்த மரபினர்தம் தலைவராயும், சிவ தொண்டராயுஞ் சிறப்புற்றுள்ள திரு. சுவாமிநாத முதலியார் அத்தேசிகர் வழியோரே யென்றறிக. சிவஞான முனிவர் ஆராய்ந்த அக்காலத்திய அரிய எட்டு நூல்களெல்லாம் அத்தேசிகரது பாதுகாப்பையடைந்து சுவாமிநாத முதலியார் தந்தையர்காலம் வரையில் சிதைந்திருந்து, பின்பு, டாக்டர் உ. வே. சாமிநாதையரால் எடுத்துக் கொள்ளப் பட்டன வென்று ஒரு சமயத்தில் சுவாமிநாத முதலியார் அண்ணர் எமக்குச் சொல்லக் கேட்டேம். ஐயர் அவர்களும் வேறு ஒரு சமயத்தில் அதை எமக்குத் தெரிவித்தார்கள்.

உலகாயத மதக் கொள்கையும், சுயநலவிழைவும், அரசியல் போராட்டமும், உலகப் போரும், துன்பமும், இடையிடையே இன்பமும் மிகுந்துள்ள இக்காலத்திலும் அம் 'முத்திமுடிவு' நூற் கருத்தை அறியும் விருப்பம் உள்ளார் தமிழ்நாட்டில் எவரேனும் எங்கேனும் ஒருமூலையில் இருப்பின் அன்னவருக்குப் பயன்படுமாறு இத்துணையும் எழுதலாயினேம், அம்'முத்தி முடிவு' நூற்காலத்திற் குப் பின்னே, காலப்போக்கிற்கேற்ப, ஸ்ரீ இராமகிருஷ்ண பரமாம்ஸர் உபதேசங்கள் என்றும், பிரம்மஞான சங்க உபதேசங்கள் என்றும், ஸ்ரீ அரபிந்த கோஷ் உபதேசங்கள் என்றும் ஸ்ரீரமணருஷி உபதேசங் கள் என்றும் பல பரவத் தொடங்கின. அவைகளும் மக்கள் சிற்சிலருடைய கல்வியறிவுக்கும், உலகவாழ்க்கை நிலைமைகளுக்கும், மனப்பக்குவத்திற்கும் பொருந்தி மனோசாந்தியும் சுகமும் அளிக் கின்றன.

'ஒருபா உண்மை உபதேசம்', 'முத்தி முடிவு' என்பன இது பொழுது கிடைத்தல் அரிதாயின. ஆயினும், அப்பழய சமரச ஞான நூல்களைக் குறித்தே 'முனிவர் மல'ரில் எழுத நினைத்து, அத் திரட்டு நூலை எங்கேனுந் தேடிக்கொணர்ந்து எமக்கு அன்போடே கொடுக்கும்படி முனிவர் அவர்களை ஒருகாலன்றிப் பலகால் வற்புறுத் துக் கேட்டேமாயினும், அஃது அவருக்கே கிடைக்காமையால் அதனை விடுத்து, 'நாகலிங்க முனிவர் நற்றொண்டுகள்' என்னும் இப் பாராட்டுரையை எழுதலாயினேம். இதனால் முனிவருடைய குலத் தொண்டு, தமிழ்த்தொண்டு, சமயத்தொண்டு என்பன ஒருவாறு கூறப்பட்டன.

சாதி சமயங்களுக்கும் புராணேதிகாசங்களுக்கும் கிரியாமார்க் கத்துக்கும் மாறான ஒரு கொள்கை இந்தியாவில் பகுத்தறிவாளர் ஒரு சாரார்பால் பண்டைநாள் தொட்டு இதுநாள் அளவும் இருந்து வராநிற்கின்றதாயினும், அக்கொள்கை இப்பொழுது தென் இந்தி யாவில் ஒரு பால் முதிர்ந்து, பழைய சாதி சமயங்களுக்கும், சாதி சமயப்பட்டங்களுக்கும், புராணேதிகாசங்களுக்கும், வைதிக தாந்

திரிகக் கிரியைகளுக்கும் முற்றிலும் மாறாய், நாளும் பரவும் பேர் இயக்கமாய், தனக்கு அங்கங்களாக சங்கங்களும் தாள்களும் நூல் களும் நாடகங்களுங்கொண்டு வீரிட்டு வருகின்ற தென்பது தமிழ் மக்கள் யாவருக்கும் நன்றாகத் தெரியும். சிலர் இவ்வியக்கத்தைப் பின்பற்றி நடப்பினும், பழய சாதி சமயங்களும், பிறவும் மற்றொரு பால் இருந்தபடியே தான் இருக்கின்றன. சாதி சமயப்பற்றுக்களும் பேதங்களும் எம்மிடத்தில் இல்லை. ஆயினும், நந்தம் முனிவர்தம் முன்னைய நற்றொண்டுகளைப் பாராட்டி உரைக்கப் புகுந்தவிடத்து, மக்கள் தொகுதி (Human Society) யாருள் இன்றைய நாள் செங் குந்த மக்கட் பகுதியினரும், பிறபகுதியினர்களும் அவைகளை அறியும் பொருட்டுச் சாதிசமயச் சார்பாகச் சரித்திர முறைமைக் கேற்ப. உரைத்திட்டேம்.

## நற்றமிழ்ப் பணிபுரி நாவலர்

வாழ்த்துவம் வம்மின் வாழ்த்துவம் வம்மின்
வண்தமிழ் மொழியால் வாழ்த்துவம் வம்மின்
குணகடல் குமரி குளிர்திரைக் கரத்தால்
மணங்கமழ் தென்றல் மலிவுற வீசத்
தன்னே ரில்லாத் தனிமா வள நகர்
சென்னை யென்னுந் திகழுறு நாம
நன்னக ரதனில் நண்ணிடும் நண்பரீர்!
முற்றா மதியணி முதல்வன் இணையடி
பற்றெனக் கொண்டிப் பாரினில் என்றும்
நற்றமிழ்ப் பணிபுரி நாவலர் கோமான்
முத்தமிழ் வல்லோன் மூதறி வுள்ளோன்
எத்துறை மாக்களும் ஏத்தரும் புகழோன்
கல்வியிற் சிறந்த காஞ்சி மாநகரில்
தொல்பெருங் குடியிற் றோன்றிய நல்லோன்
கலைபயில் தெளிவுங் கட்டுரை வன்மையும்
மலர்நிகர் மாட்சியும் மாதவக் கோலமும்
உலகிய லறிவும் உயர்குணம் பலவும்
ஒருங்குட னமைந்த உத்தமப் பெரியோன்
நாகலிங்கனெனும் நற்பெய ருள்ளோன்
பாலி மணலினும் வாழ்க பல்லாண்டெனக்
குன்றுதோ றாடுங் குமரன் இணையடி
என்றும் ஏத்தி வாழ்த்துவம் யாமே.

**வித்துவான், நா. சீனிவாசன்.**

# இயற்கை வணக்கம்

இளவழகனார்

க

பெரும்பான்மை இந்தக்காலம் பேச்சுக்காலம்! பேச்சே எழுத்தாகவும் வருகின்ற காலம்! மொழி நடையிலும் பேச்சின் போக்கு ஊறிப் படிந்து படர்ந்து வருகின்றது. மேடைகளும் இதழ்களும் கதைகளும் இந்தக் காலத்தின் கலைநிலையங்கள்!

குருவி, வரம்பற்ற விரிந்த வானத்திற் பறக்கின்றது. மான், ஓரளவு பரந்த கானத்தில் ஓடுகின்றது. மனிதன், வரம்புற்ற சிறிய தெருவழியே நடக்கின்றான். வரவர அறிவு உயர்வதன் அடையாளம் இது! மனிதன் வானத்திற் பறந்தாலும், கடலினுள் ஓடினாலும், கட்டுற்ற வரம்புகள் அவனை ஆட்கொள்ளுகின்றன. செயற்கைச் சிக்கல் அறிவின் சிறப்புப் போலும்!

செடி கொடிகளுக்குப் பேசத் தெரியாது; முழுமோனம்; செய்கையால் தனது கடமையைச் சந்தடியின்றிச் செய்கின்றது.

சிற்றுயிர்களுக்கும் பேசத் தெரியாது. ஆனால், அத்தனை மோனமில்லை. அவற்றிற்கு ஒலிக்கவும் கூவவும் விளிக்கவுந் தெரியும். எண்ணங்களை அவை இயல்பாக வெளிப்படுத்தி இன்புறுகின்றன. அவை கலை நிலையம். உள்ளத்தால் பணி செய்கின்றன. அவற்றின் பணியில், மலர வேண்டுமளவும் உள்ளம் மலர்ந்திருக்கின்றது. கன்று ஈன்ற புனிற்றாவின் குரலில் அதன் உள்ளம் எவ்வளவு கனிந்து ஒழுகுகின்றது!

மனிதன் பேசத் தெரிந்தவன்; மொழி அறிந்தவன்; நாகரிகன்; செடிகொடிகளின் - சிற்றுயிர்களின் - செய்கை எண்ணங்களை வாய் ஓயாது கூறிப் பிழைக்கின்றான்; பிறவும் விரித்துப் பேசிப்பேசித் தனது கடமையைக் காற்றோடு போக்குகின்றான்.

இது, வாக்குரையும் அன்று; பேச்சுரை; வாக்குரை, மனம் வாக்கு காயம் என்னும் ஒற்றுமைப்பட்ட இனத்தைச் சேர்ந்தது. வாக்கு, சுருக்கம் உடையது; பேச்சு பெருக்கம் மிக்கது. இது, விரிவுரைக் காலம்; அன்று, அதுவும் சென்ற நூற்றாண்டோடு சென்றுவிட்டது; இந்நூற்றாண்டு, சொற்பொழிவுக் காலமாக உள்ளது; சொற்போர்க் காலமென்றும் சொல்லலாம். அப்படி, பேச்சு பெருகிக்கொண்டே போகின்றது. வாயுள்ள மனிதன்!

முன்னேற்றக் காலம்; மேடையின் பரப்பு விரிவடைகின்றது. இதழ்களை இரண்டு கைகளும் விரித்துப் பற்றிப் படிக்கவேண்டியிருக்கின்றது. எங்கும் பொழுதுபோக்குக் கதைகள்!

பேச்சுக்கும் வாக்குக்குந்தான் எவ்வளவு தூரம்! பேச்சு செயற்கை நாகரிகத்தின் எல்லை; உளுந்தழுவிச் செய்கையுருவான வாக்கு இயற்கைச் செவ்வியின் கோடி. வாக்கு மோனத்தின் முகிழ்ப்பு. காரிருட் பிழம்பைப் பிளந்தொளிரும் இடியும் மழையு மாகிய காரியமின்னல்! பேச்சு, பனையோலைச் சலசலப்பு! இச் சல சலப்பெங்கே, காரியவுருவாகிய அவ்வாஞெலி மின்னல் எங்கே! ஆற்றலில் எவ்வளவு வேறுபாடு! ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய சான்ருேர் வாக்குகளின் பேராற்றலுக்கும் பெருமைக்கும் ஓர் எல்லை யுண்டோ!

கார்வானம், மோனமாய்க் கறுகறுத்துத் தழைக்கின்றது. பின்பு, தகுதியாக இடித்து மின்னுஞ் சுருங்கிய வாஞெலியாகிய வாக்கு; மீண்டும் மோனம்! ஆனுல், பெருமழைப் பொழிவு சளசள வென்று பெய்துகொண்டே யிருக்கின்றது. திருவள்ளுவர் திருக் குறள், வான்வாக்கு! ஒரு காலத்தில் சுருங்கிய குறளாக ஒலித் தெழுந்து மின்னியது. அதன்பொருள் மழை, நாளும் பொழிந்து உலகு முழுவதையும் வளஞ்செய்து வருகின்றது. பெரியோர் வாக்குகளின் பயன் இது!

உ

திருக்குறட் பொருளே, மழை என்பது ஈண்டு முகமனன்று. உண்மையில், திருவள்ளுவர் நூலின் உள்ளுறை முற்றும் வான்சிறப் பேயாம். உலகத்தின் வாழ்வெல்லாம் மழையில் உள்ளது; மழை யின் பொழிவெல்லாம் சான்ருேர் பெருமையில் உள்ளது. ஆதலால், மழைக்குக் காரணமான சான்ருேர் அறநெறிகளைத் திருவள்ளுவர் தமது நூலில் உரைத்து, மழை வணக்கஞ் செய்திருக்கின்ருர்.

மழை என்பது, இயற்கையின் ஆற்றல் வெளிப்பாடு. அல்லது இறைவன் கருணை வெள்ளம் என்றுங் கூறலாம். மழை, உலகத்தை ஆக்கியும் அளித்தும் ஆளவல்லது. இயற்கையின் அடிப்படை ஆற்றலே அது. கார்காலம், உலகத்தில், ஆற்றலொழுகும் பருவம். இயற்கையின் உதவியொழுகலாறு; அம்மை வடிவு; கடலைச் சுருக்கி யெழுந்து கார்வானமாகி, மின்னிப் பொலிந்து இடித்துச் சிலம்பி, அருளொழுக்கமாகப் பொழியும் அம்மையின் விளையாடலே இது. கடலில் எழுந்து மலையிற் பொழிந்து கீழ்நிலங்களில் ஆருகி மீண்டுங் கடலையடைதலாகிய ஒரு குரவை விளையாடல் இது. வான் சிறப் பாகிய இம்மழை விளையாடலால் உலகம் எல்லா வளங்களும் நிலை களும் மலர்ந்து உய்ந்துவருகின்றது.

உலகத்தின் எவ்வகை மலர்ச்சிக்கும் அடிப்படைக் காரணமாகிய இவ்வான் விளையாடலை வெளிப்படுத்தும் வல்லமை செயற்கை முயற்சி கள் எவற்றிற்கும் இல்லை; எனின், செயற்கைகளின் நிலை, அடைய வேண்டிய மெய்த்தகுதியின்முன் எவ்வளவுதான் ஏழைமையாயிருக்

கின்றது. இயற்கையின் நடைமுறைகளிலும் வல்லமைகளிலும் மதிப்பும் ஒருமைப்பாடும் கொண்டொழுகுவார்க்கன்றோ, அடைய வேண்டிய இயற்கைத் தகுதி மலர்ந்து மணங்கமழ்ந்து பரந்து ஆற்ற லுற்றுப் பயன்விளைக்கும்! இந்த இயற்கை வணக்கத்தின் ஆற்ற லுக்கு முன் எதிர்நிற்பதும் ஒன்றுண்டோ! ஓங்கி இறைவனது அருள் மழைப்பொழிவைக் குளிரப் பெறுவது எங்கும் ஈதொன்றே யன்றோ!

திருவள்ளுவர் வாக்கு இவ்வுண்மையையே வலியுறுத்துகின்றது. நீத்தார், தமது பெருமையால் அறன் வலியுறுத்தலெல்லாம், இறைவன்றன் வெளிப்பாட்டு வல்லமையாகிய வான்சிறப்பென்னுந் திருவருட்பொழிவில் திளைப்பித்தலே. அடிப்படையாகிய இத் திளைப்பு யார்யார்க்கும் ஏனை அனைத்தும் ஒருங்கு நல்கும். ஆதலின், வான்சிறப்பே திருவள்ளுவர் வாக்காயிற்றென்பது தெளியப்படும்.

௩

பாயிரம் என்பது நூலின் முன்னுரை; அதன்கண், நூலின் உள்ளுறையும் நிழலாடும். பாயிரம் என்பதை வரலாறு, பொரு ளடக்கம் என்று கூறுதலும், நூலின் இயல்பு, நுதலிய பொருள் என்பன அப்பாயிரத்தின் பொது சிறப்புக் கூறுகளாக வருதலும் இவ்வுண்மையை வெளிப்படுத்தும். நூலைவிடப் பாயிரத்திலேதான் நூலின் உள்ளுறையாகிய ஆசிரியனது உட்கருத்து, சுருக்க விளக்க மாகவும் தெளிவாகவும், எடுத்துத் தெரியும். ஆதலால், திரு வள்ளுவர், ஆயிரத்து முந்நூற்றுமுப்பது அருங்குறளும் பாயிரத் தோடு ஓதினர்.

திருவள்ளுவர் வாக்கும் அதன் நோக்கும் எந்நிலையிலும் ஒரு தனிச் சிறப்பியல்புடையன. பாயிரப் பகுதிகளும் நூற்பகுதிகளைப் போன்ற அதிகாரங்களும் அமைப்புகளும் உடையன. திருக்குறளில், நூலோடு பாயிரத்திற்கு இவ்வொற்றுமையுண்டு. இனி, ஒரு வேற்றுமையும் உண்டு. நூலின் தலைப்புக்கள், வாளா இல்வாழ்க்கை, ஈகை, கல்வி, கேள்வி, பிரிவாற்றுமை, புலவி என எடுத்துக்கொண்ட பொருள் இன்னது என்பதைமட்டுங் காட்டும். ஆனால், பாயிரத்தின் தலைப்புக்கள் அத்தகையன அல்ல. கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் நான்கு பாயிரத் தலைப்புக்கள் அவை, எடுத்துக்கொண்ட பொருள் இன்னது என் பதோடு அவற்றின் மேம்பாட்டையும் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளன. இன்றேல், அவை, கடவுள், வான், நீத்தார், அறன் என்றே அமைந்திருக்கலாம்.

நூலுள், வாழ்க்கைத்துணை நலம், இறைமாட்சி, வினைத் தூய்மை, தனிப்படர் மிகுதி எனவரும் அதிகாரத் தலைப்புகளும் எடுத்துக்கொண்ட பொருள் இன்னவை என்பதுமட்டுங் காட்டுவன.

இல்லாளது நன்மை, அரசன்றன் நற்குண நற்செய்கைகள், வினைகள் நல்லவாதல், தனியாகிய படர்மிகுதி என வருகின்ற இவற்றின் உரை விளக்கங்களே இவ்வுண்மையைப் புலப்படுத்தும். 'வாழ்க்கைத் துணைநலம்' என்பதற்கு வாழ்க்கைத் துணையின் நன்மையியல்பு என்பது கருத்து. வாழ்க்கைத்துணையின் மேன்மை எனப் பொருளாகாது. 'நீத்தார் பெருமை' என்பதற்கு அங்ஙனமன்று; நீத்தாரது மேன்மை என்பதே பொருள். 'தனிப்படர் மிகுதி' என்பதில் மிகுதி அளவின் மிகுதியைக் காட்டுமேயல்லது, 'வான் சிறப்பு' என்பதிற்போல, உள்ளது சிறந்தவாகிய உயர்வைப் புலப்படுத்தாது. இவ்வாறே இவற்றின் வேறுபாடு கண்டுகொள்ளப்படும்.

பெரும்பாலும் சான்றோர்கள், பொருள்களின் இயல்பை எடுத்துக் காட்டுதலன்றி, அவற்றைத் தங் கருத்தாற் சிறப்பித்தோ வலியுறுத்தோ தம் ஈடுபாடு தோன்றப் புலப்படுத்தார்! திருக்குறளில், நூலில் வருங் கருத்துக்கள் அவ்வியல்பினவே. முதன்மை பற்றி ஆசிரியர்கள் அரிதாக ஓரோவோரிடத்தில் ஈடுபாடு தோன்றக் கருத்துக்களை வலியுறுத்துவராயின், அவை எத்துணை உண்மையும் ஆற்றலும் பொருந்தியிருத்தல் வேண்டும் ! திருக்குறளின் பாயிரக் கருத்துக்கள் அத்தகைய கழிபெருஞ் சிறப்பின. பாயிரத்தின் விரிவும் விளக்கமுமே நூல் என்பது. தீம்பாலமிழ்தம் நூலெனின் அதன் நறுஞ்சுவைக் கட்டியே பாயிரம் என்பது. வித்து பாயிரமெனின், விரிந்து பயன்றரும் அதன் விளைவே நூலாகும்.

௬

பயன்படும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் நான்கு நிலைகளைப் புலப்படுத்துகின்றன. பொருள்களானாலும் கருத்துக்களானாலும் நூல்களானாலும் கவிகளானாலும் வேறு எவையானாலும் எல்லாம் இம்முறைமையில் இயக்கமுறுகின்றன. இயல்பான நிலை ஒன்று; அதன் ஆற்றல் வெளிப்பாடு ஒன்று; அவ்வெளிப்பாட்டால் விளங்கும் பெருமை மற்றொன்று; அதுகொண்டு அறிந்தொழுகுதற்குரிய உண்மை இன்னொன்று.

மண் என்பது இயல்பான நிலை; குடம் அதன் வெளிப்பாட்டு நிலை; குயவனது வன்மை அவ்வெளிப்பாட்டால் விளங்கும் பெருமை. அவன் கலைத்திறம் அதனால் அறிந்துகொள்ளுதற்குரிய உண்மை. இவற்றிற் பயன் எதுவென்றால், குடத்தின் வெளிப்பாடென்பது அனைவரும் நன்கறிந்ததேயாம்.

வித்து, இயல்பான நிலை. பயன்றரும் வண்ணம் அதிலிருந்து வெளிப்பட்டு இலையும் மலரும் கனியுமாய்க் குலுங்கிநிற்கும் மரம் வெளிப்பாட்டுநிலை. தோட்டக்காரனது திறம் இதனால் விளங்கிய பெருமை. அப் பெருமையின்வழி அறிந்து கடைப்பிடித்தற்குரியது, அத்தோட்டக்காரனது தொழிற்றிறமாகிய உழவுமுறை.

திருக்குறட் பாயிரத்தின் நான்கு அதிகாரங்களும் இம்முறைமையில் அமைந்துள்ளன. இயல்பான நிலையில் உள்ளது கடவுள்: அதன் ஆற்றல் வெளிப்பாடு மழை; அதனை வெளிப்படுத்தும் பெருமை நீத்தாருடையது. அதனால் அறியப்படுகின்ற அவரது நெறிமுறையுண்மை அறன். இவை, 'கடவுள் வாழ்த்து' 'வான் சிறப்பு' 'நீத்தார் பெருமை' 'அறன்வலியுறுத்தல்' என்னும் பாயிரத் தலைப்புகள் நான்கின் சொற்சிறப்புகளாலும் இனிது விளங்குகின்றன. 'வாழ்த்து' என்பதற்கு இயல்புரைத்தல் என்பது பொருள். 'சிறப்பு' என்பது உள்ளது சிறத்தலாகிய வெளிப்பாடு. அதனை விளைவித்தலாகிய பெருமையே ஐந்தவித்த பெருமை; "ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலுங் கரி" என்றது இவ்வுண்மையைத் தெளிவுபடுத்தும். இந்திரன் என்பான் மழைக்கடவுள்; ஐந்தவித்தான் ஆற்றலுக்கு உலகத்தில் மழையே சான்று என்பது இதன் பொருள். நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை. மழையை வெளிப்படுத்தும் பெருமை இங்ஙனம் நீத்தாருடையதாயிற்று. அதனை வெளிப்படுத்திய வன்மை அந் நீத்தாரது நெறிமுறையாகிய அறவொழுக்கங்கட்கு உரியது. அறன்வலி, மக்கள் அறிந்தொழுகுதற்குரிய உண்மையாயிற்று.

அறவொழுக்கங்களால் இயல்பாகப் பெறுகின்ற சான்றாண்மையானது இங்ஙனம் கடவுளின் இயல்பினின்று அருண்முக வெளிப்பாடாகிய வான்சிறப்பை இயல்பாக உளதாக்கி உலகை உய்வித்து வருகின்றது. சான்றோர் பெய் என்று சொல்லி மழையைப் பெய்விக்க வேண்டிய கட்டாயமில்லை; அது செயற்கை முயற்சியாகும். மேலும், பெய் எனப் பெய்விப்பது கற்புடைய நன்மாதரார் செயல்; கொழுநன் தொழுதெழுவாள் பெய் எனப் பெய்யும் மழை. சான்றோர் நெறிமுறைமை இயல்பானது; அறத்தோடு ஒழுகும் அவர்தம் ஒழுகலாறுகள் செவ்வையாக நடக்கும்பொருட்டு இறைவன், இயல்பாகவே அருள்மிகுந்து மழை பொழிகின்றனன். அது, புல் முதலிய ஏனையுயிர்கட்கும் பயனாகின்றது.

இங்ஙனம் சான்றோரால் உண்டாகும் இயல்பான ஆக்கம் வான் சிறப்பு! இது, திருக்குறள் வாக்கு! ஆழ்ந்த அடிப்படையுடையது! இயற்கை வணக்கமுடையது! முனிவரர் வாழ, நாடு வாழும் இயல் நெறி தெரிப்பது!

பெரியார் காஞ்சி நாகலிங்க முனிவரரவர்களின் எண்பதாம் ஆண்டு நிறைவுவிழா, நாட்டில் இந்நல்லுணர்ச்சியை உணர்த்துகின்றது. முனிவரர் வாழி!

# வைதீக சமயத்தின் அடிப்படைக் கொள்கைகள்

கா. இராமநாதன் செட்டியார், B.A., B.L.

சிவஞான பாஷ்யத்தில் இருபத்தி நான்கு சமயங்கள் சொல்லப் பெற்றிருக்கின்றன. அவைகள் நான்கு பகுதியாக இருக்கின்றன. ஒவ்வொரு பகுதியிலும் ஆறு சமயம். அப்பகுதிகள் புறப் புறம் என்றும் புறம் என்றும் அகப் புறம் என்றும் அகம் என்றும் கூறப் பெறும். புறப் புறப் பகுதிகள், உலகாயதமும், பௌத்தத்தில் நான்கு பிரிவும் ஆருகதமும் சேரும். இவை வேதத்தை ஒப்புக் கொள்ளாத சமயங்கள். ஏனைய பதினெட்டும் வேதத்தை ஒத்துக் கொள்ளுவன. அவைகளை வைதீக சமயமென்று கூறுவர்; தற்காலத்தில் ஹிந்து சமய மென்றுங் கூறுவர்.

இந்த வைதீக சமயங்கள் சில அடிப்படையான உண்மைகளைக் கொள்ளுகின்றன. அவ்வுண்மைகளை அஸ்திவாரமாகக் கொண்டு ஒவ்வொரு சமயத்திற்கும் வெவ்வேறு கட்டடங்களை எழுப்புகின்றனர். இக் கொள்கைகளில் பலவற்றையோ சிலவற்றையோ புறப்புறச் சமயத்தாரும் கிறிஸ்துவம் முதலிய வேறு நாட்டுச் சமயத்தாரும் ஒத்துக் கொள்ளுவதில்லை. அந்த அடிப்படையான கொள்கைகளை ஆராய்வோம்.

1. சூன்யத்திலிருந்து ஒரு பொருளும் தோன்ருது. தோன்றுவதற்கு முன் ஒரு பொருள் இருக்க வேண்டும். இன்மையில் தோற்றமில்லை (from nothing, on thing Comes) இன்மையிலிருந்து வருவது ஒரு பொருளுமில்லை. எப்பொருள் தோன்றவேண்டுமானுலும் உள்ள பொருளில் இருந்தே தோன்ற வேண்டும்! உள்ளலதிலே தோற்றம் உண்டு (Something may come out of something) சில பொருளில் இருந்தே சில பொருள் தோன்றக்கூடும்.

வானத்திலிருந்து யானை தோன்றுமா? முயலுக்குக் கொம்பு முளைக்கும் இடம் இல்லை. அதற்குக் கொம்பு முளைக்குமா? ஆனுல் சிறியதோர் விதையில் பெரிய மரம் தோன்றலாம். பஞ்சினுல் நூல் உண்டாகலாம்.

கிறிஸ்து மதம் இக் கொள்கையை ஒப்புக் கொள்வதாகத் தெரியவில்லை. அவர்கள் விவிலிய நூலில் என்ன கூறுகிருர்கள். "ஆரம்பத்தில் கடவுள் விண்ணுலகத்தையும் படைத்தார். மேலும் கடவுள் சொன்னுர்: 'வெளிச்சம் உண்டாகட்டும்!' அவ்வாறே வெளிச்சம் உண்டாயது. இவ்வாறே சூன்யத்திலிருந்து கடவுள் பூமியைப்

படைத்தார். செடிகொடிகளைப் படைத்தார். காய்க்குள் விதை இருக்கும்படி செய்தார்."

இம்மாதிரி செய்கைகளை ஹிந்துக்கள் ஒத்துக் கொள்வதில்லை.

2. இல்லது தோன்றாது, உள்ளதே தோன்றும். குதிரைக் கொம்பு முன் இருந்ததில்லை. இப்பொழுதும் இல்லை. முன் பார்த்திருந்தால் இப்பொழுதும் பார்க்கக் கூடும். செடி இருந்தது; அதனை இப்பொழுது மரமாகக் காண்கிறோம். வித்து இருந்தது; அதனை இப்பொழுது செடியாகப் பார்க்கிறோம். முட்டை இருந்தது நேற்று; இன்று கோழியைக் . காண்கிறோம். அப்படியிருக்க, ஆகாயத்தில் மேகத்தைத் திடீரென்று காண்கிறோம். அது எவ்வாறு வந்தது? தண்ணீர் ஆவியாக மாறி மேக மாயிற்றென்று இக்கால விஞ்ஞானிகளும், பழய காலத்துப் புலவர்களும் கூறியிருக்கிறார்கள். முன்னர் மண்ணாக விருந்ததை இப்பொழுது குடமாகக் காண்கிறோம்.

தோற்றம் இருவகைப் படும். மண்ணிலிருந்து குடம் தோன்றுவது ஒரு வகை. பூமியிலிருந்து புனல் தோன்றுவது மற்றொருவகை. குடமாகுமுன்னர் அது மண்ணாக விருந்தது. தண்ணீர் பூமியிலிருந்து வருமுன் தண்ணீராகவே யிருந்தது. குடம் வெளிப்படுவதற்குத் தடையாயிருந்தது அதுவே; அதன் சூட்சும நிலையே. தண்ணீர் வெளி வருவதற்குத் தடையாயிருந்தது பூமி. ஆகையால் குடம் தோற்றுவதற்குத்தானே தடை யென்றும் புனல் தோற்றுவதற்கு வேற்றுப் பொருள் தடை யென்றும் வேறுபாடு செய்யப்படும். புனல் தோற்றுவதற்கு வெளிப் படல் என்றும், குடம் தோற்றுவதை உண்டாதல் என்றும் கூறுவர்.

3. ஒரு பொருள் இன்று உளதாயின், அது என்றும் அழிவதில்லை. உள்ளது அழிவதில்லை; அவைகள் மாறலாம். அப் பொருள்கள் விரிந்து பெருகலாம்; பின்னர் குறுக ஒடுங்கும். அதிகாலையில் புல்லின் மேல் கண்ட சிறு துளிகள் என்ன ஆயின? அடுப்பில் தண்ணீர் காய்ச்சுகிறோம். தண்ணீர் அழிந்துவிடவில்லை. தண்ணீர் சூரிய வெப்பத்தாலோ, நெருப்பாலோ, ஆவியாக மாறுகிறது. பனிக்கட்டி தண்ணீராக மாறலாம், தண்ணீர் ஆவியாக மாறலாம். கெட்டி உடல் போய், நீராக மாறிப் பின்னர், சூட்சும உடல் பெற்று ஆவி நிலையை அடைகிறது. நிலை மாறினும் அழிவதில்லை. இதனை வலியுறுத்த ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. "When candle burns nothing is lost" மெழுகுவத்தி எரிந்து போவதால் அழிவதொன்றில்லை. ஏன்! மெழுகு வத்தியைக் காணோமே! எங்கு மறைந்தது? மெழுகு வத்தி தன் தூல உடலை விட்டது. அவ்வுடல் சூட்சும மாக மாறியது. வத்தி எரிந்ததால், அது கரியமல வாயுவாக மாறுகிறது. ஆகையால் பொருள் அழிவதில்லை, மாறலாம்.

மனிதன் இறக்கும் போதும் உடல் அழிவதில்லை. உடல் மாறு பாடு அடைகிறது. முதலில் உயிர் வெளியே போய்விடுகிறது. பஞ்ச பூதங்களும் தன் தன் இனத்தை நாட முயலுகின்றன. எரித்த பின் பூமியைச் சேர்ந்து கிடப்பது ஒரு பிடிசாம்பல், உடம்பாக விருந்த அணுக் கூட்டங்கள் இப்பொழுது பிரிந்து வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு நிலையில் உள்ளன. ஆகையால் உயிரும் அழியவில்லை. உடலும் அழிய வில்லை.

மாறுதல் இருவகை; சூட்சுமமான பொருள் விரிந்து வளர்ந்து, பெருகிப் பருப் பொருளாதலை (Evolution) விரிதல் என்றும், கெட்டிப் பொருள் தேய்ந்து தேய்ந்து, சுருங்கிக் குறுகி சூட்சுமமாதலை (involution) ஒடுங்குதல் என்றும் கூறுவார்கள்.

4. ஒருபொருள் ஒடுங்கும்போதும் விரியும்போதும் தன்னியல்பை அறவேஇழந்துவிடுவது வழக்கமில்லை. தன்னியல்பிற்கு முரணான இயல்பு நிச்சயமாகப் பெறுவதில்லை. தோற்றிய பொருளும், தோன்றிய பொருளும் ஒன்றிற் கொன்று முரண்பட்ட இயல்புடையவையாயின், எவ்வாறு ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியதெனக் கூற முடியும்? ஆகையால் முரண்பட்ட இயல்புகளைக் காரணப் பொருளிலும் காரியப் பொருளிலும் காணமுடியாது. காரியத்தின் இயல்பு காரணத்தில், காரணத்தின் இயல்பு காரியத்தில் எல்லாக் குணமும் காரணத்திலிருந்து காரியத்திற்கு மாறுவதில்லை. பனிக்கட்டியின் குணமெல்லாம் தண்ணீருக்கு இல்லை.

வைதீக சமயம் இக் கொள்கைகளை அனுசரிக்கின்றன. இக் கொள்கைகள் ஒன்றுக் கொன்று சம்பந்த முடையன. ஒன்றிலிருந்து மற்றொன்று ஏற்படுகிறது. முன்னிருந்ததே இப்பொழுது இருப்பது. இப்பொழுது இருப்பது இனியும் இருப்பது, முன்னிருந்ததும், இன்றிருப்பதும், நாளைத் தோன்றுவதும் ஒன்றுக் கொன்று தொடர்புடையன.

அழியா உண்மைகளை ஆராயும் போது சமயங்கள் உண்மைப் பொருள் ஒன்றென்று கூறும்; சில இரண்டென்று கூறும்; சில மூன்றென்று கூறும். உண்மைப் பொருள்கள் என்றும் உள்ளவை என்றும், அவைகளுக்கு அழிவில்லை என்றும் இச்சமயங்கள் யாவும் கூறுகின்றன. வேதாந்தம் உண்மைப் பொருள் ஒன்றே எனக் கூறுகிறது. ஆகையால் வேறு பொருள் காணின் அது அப்பொருளிலிருந்தே தோன்றியது என்று கூற வேண்டும் மேற் காட்டின கொள்கைப்படி கடவுள் என்ற உண்மைப் பொருளை நெருப்புக்கு ஒப்பிடுவார்கள். நெருப்பின் பொறிகள், ஆன்மா, உலகம் எங்கிருந்து பிறந்ததென்ற கேள்வி ஏற்படும். கடவுளிடமிருந்து பிறந்ததென்றால் நான்காவதாகக் காட்டிய கொள்கைக்கு முரண்படும். சித் இயல்புடைய கடவுளிடமிருந்து அசித்தாகிய உலகம் பிறவாது. ஆகையால் உலகம்

பொய் என்று சொல்ல நேருகிறது. இவ்வாறே ஆராய்ந்தால் வைதீக சமயங்கள் இக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டிருப்பதைக் காண லாம்.

சைவ சமயத்திற்கும் இக் கொள்கைகள் உடன்பாடென்று சொல்ல வேண்டா இக் கொள்கைகளைச் சைவசமயம் சற்காரிய வாதம் என்ற தலைப்பின் கீழ் விரித்துக் கூறும். சற்காரியவாதம் என் றால் என்ன? சத் என்றால் உள்ளது என்று பொருள். சத் உண்மைப் பொருள். உண்மைப் பொருளே காரியப்படும் என்ற கொள்கையை உடையவர்கள் சற்காரிய வாதிகள். கடவுள், ஆன்மா மாறுவதில்லை. அவைகள் அழியாதன. உண்மைப்பொருள் மாறுபட வேண்டுமென் பது கட்டாய மில்லை. மாயை அழிவதில்லை; ஆனால் விரியும். கடவுளை யும் ஆன்மாவையும் பொருத்த வரையில் சைவர்களுக்கு முதலிரு கொள்கைகளும் மூன்றாவதில் அழியாது என்ற பகுதியுமே தேவை. மாயையைப் பொருத்த வரையில் நான்கும் பொருந்தும். காரியப் படுவது மாயை.

இதன் விளைவுகளை நம் சாஸ்திரங்களில் காணலாம்.

தமிழ் நாட்டில் "செந்தமிழ்க்கு வரம்பெனச் செப்பிய முந்து காஞ்சி" எனச் சிறப்பிக்கப் பெற்ற காஞ்சிபுரத்தில் தோன்றிய தமிழ்ப் பெரும் புலவரான நாகலிங்க முனிவரைப் பதினேந்தாண்டுகளாக அறி தலுடையேன். இவர், பெரும் புலவராயினும் மிக எளியராய்க் காட்சி தருவர். இவர் தமிழில் மிக வன்மையுடையராதலின், மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை நிலை நாட்டிய தமிழ்ப்புரவலர் பொன். பாண்டித்துரை தேவரவர்களால் நான்காஞ் சங்கப் புலவர் குழுவினுளொருவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

காஞ்சி புராண முதலிய பல தமிழ் நூல்களை வெளிப் படுத்தித் தமிழ் வளர்ச்சிக் குறு துணையாயினர்.

இவர் காஞ்சிபுரத்தை விட்டுச் சென்னைக்கு வந்திப்போதுள்ள எண்பதாமாண்டிலுங் கூடத் தமிழ்த் தொண்டை கைவிட்டிலர்.

தொண்டு தொண்டு என வாய்ப்பேச்சால் வெறுந் தமிழ்த் தொண்டு செய்பவர் போலாது, தம்முதிர்பருவத்திலுந் தமிழ்த் தொண் டினைச் செயலளவிற் கைவிடாக்காழேறுழவராய இவரையும் இவர் போன்றாரையும் போற்றுதல் தமிழ் நாட்டிற்குப் பேருறுதியாகு மென் பதிலையமில்லை

இம் முனிவர், இப்போதடைந்துள்ள எண்பதா மாண்டின் மேலும் பன்மடங்காண்டளவு நிலவுலகில் நிலவித் தமிழ்ப்பணி செய்து நலம் பெற எல்லாம் வல்ல இறைவனை வணங்குவன் எப்பொழுதும்.

இங்ஙனம்

சிதம். சங்கர்த்து நாராயண சாமி

சோறியாசிரமம், சிதம்பரம்.

# வண்ணக் களஞ்சியம் நல்ல எண்ணக் களஞ்சியம்

ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்

தமிழாராய்ச்சியாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்.

வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முதலியார் எனச் சைவ வுலகு பாராட்டி மகிழ்ந்த முதுபெரும்புலவர் தூய துறவுபூண்டு நாகலிங்க முனிவராய்த் திகழ்ந்து அரும் பணிபுரிந்து வருவதைத் தமிழர் பலரும் நன்கறிவர். அவர்கட்கு இன்று முத்து விழா நடைபெறுகிறதென்று நினைக்குந்தோறும் நம்மனோர்க்குப் பேரின்பம் பிறக்கின்றது. அவர்களை நினைக்கும்போது நம்மனக் கண்ணில் அவரது தூய சிவவேடத்துடன் சிறக்கும் திருவுருவம் தோன்றுகிறது; அவரது இனிய முகத்தே சிவஞானத்தின் செம்மையொளிதோன்றி இன்பம் செய்கிறது. சைவமெய்த்தவத்தின் முதுமைப் படிவத்தின் முழுவுருவம் காணும் பேறு மனக்காட்சி பெற்று மகிழ்வெய்துகிறது. உடனே இம் முனிவர்க்கு முத்து விழாவேயன்றி நூற்றாண்டுவிழாவும் நிகழ்தல் வேண்டுமென்று வாழ்த்தும் வாழ்த்துரை நினைவிடைத் தோன்றி நம் தாய்மொழியாக வெளிவருகின்றது. வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர் வாழ்க! வாழ்க!! பல்லாண்டு வாழ்க.

வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்கமுனிவர் இன்றைக்கு எண்பது யாண்டுகட்கு முன்னர்க் காஞ்சியம் பதியில் செங்குந்தர்மரபிலே தோன்றியசெந்தமிழ்த்தோன்றலாவார். அவரைச் செந்தமிழ் நாட்டு மக்கள் அனைவரும் இப்போது பாராட்டிப் பரவுகின்றனர். அவருள்ளும் இளமையும் தமிழ்ப்புலமையும் பெற்ற இளைஞர் அனைவரும் பேரார்வத்துடன் அவர்தம்புகழ்பரவிப் பாராட்டக் காண்கின்றோம். "செய்தற்கரிய செயல் பலவும் செய்து பலர் எய்தற்கரியதனை யெய்தினர்கள்" எனத்திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் உரைத்ததை நோக்கின், செயற்கருஞ் செயல் செய்த பெரியோர்பலர் நம் நாட்டில் இருந்திருக்கின்றன ரென்பதைத் தெளிகின்றோம். அப்பெரியோர் பலராகவும் இற்றை நாளை இளம்புலவர்களின் உள்ளம் இந்தமுனிவர் பால் பேரார்வமும் பெருமதிப்பும் கொண்டு போற்றுவது நம் எண்ணத்தே பல நினைவுகளை யெழுப்புகின்றது. இளைஞர் உள்ளத்தை ஈர்த்துப் பிணித்தற்குரிய சிறப்பொன்று நம் முனிவர்பால் உண்டென்று இதனால் நாம் துணிய முடிகின்றது. அச்சிறப்புயாதாகலாம்?

அழகிய தோற்றத்தையுடைய பொருள்களை இளையோர் பெரிதும் விரும்புவர்; புற அழகு இளமையுள்ளத்தை எளிதிற் கவர்ந்து கொள்ளுகின்றது. இளமை சிறந்து முதுமை யெய்திய

வழியே அகநோக்கத்தில் அதன் உள்ளம் பதிகின்றது. இஃது இற்றைநாளில் பார்க்கு மிடமெங்கும் நீக்கமறக் காணப்படும் காட்சியாகும். ஆகவே நம் முனிவர்தோற்றம் முதுமை மிகுதியால் இளமையுள்ளத்தை ஈர்க்கும் இயல்பு குறைந்ததென்பது விளக்கமாகும். ஆயினும் நம் முனிவரரின் முதுமைப்படிவம் இளம்புலவர் உள்ளத்தைக் கவர்ந்துகொண்டு நிற்கும் காட்சி பெருவியப்பினைப் பயக்கின்றது. இளம்புலவர் பலரும் முனிவரின் முதுமையை விரும்புகின்றனர்; புலமைச்செயல்கொண்டு பாக்கள் பாடிப் பரவுகின்றனர். அவருள்ளத்தைக் கவர்தற்குரிய காரணம் அவர்தம் பராவலில் காணப்படும் அன்றே? அதனைக் காண்போமாயின் முனிவரரின் முதுமை நலம் இனிது புலனாகும்; அவரைத் தமிழகம் காணும் காட்சி அதுவே வாயிலாக நமக்குத் தெற்றென விளங்கும்.

இனி, அப்பராவற்கண் முனிவரர் நம் அருமைத் தமிழ்மொழிக்கும், தாம்பிறந்த குலத்துக்கும், நம் நல்வாழ்வுக்குரிய தொழிலுக்கும் நம் உயிர்க்கினிய சிவநெறிக்கும் செய்துள்ள தொண்டுகள் மிகப்பல காணப்படுகின்றன. இந்நாளில் தமிழ் கற்பார் கற்றார் கற்பிப்பார் பலரிடத்தும் முதற்பொருளாகவைத்துப் பேணப்படும் காரனேஷன் தமிழகராதி நம் பாராட்டுக்குரிய முனிபுங்கவரின் மெய்ம்முயற்சியின் அரும்பயனாகும். அளப்பரும் தமிழ்ச் சொற்களை அளந்தாய்ந்து தொகுத்த பெருஞ்செயல் முனிவரதாகும்.

பல்கலைக் கழகத்தில் பலபுலவர் கூடிப் பன்னாளும் பல்லாயிரம் வெண்பொற்காசும் செலவழித்துச் செய்யும் பான்மைத்தாகிய அகராதிப் பணியை நம் முனிவர் ஒருவரே தொடங்கி வெற்றிபெற முடித்த செயல் அவரது வினைத்திட்பத்தின் வீறுபாட்டினை விளக்குகின்றது.

தாம்பிறந்த செங்குந்த மரபின் செம்மை நிலை குறித்துச் 'செங்குந்த மித்திரன்' எனும் தமிழ்த் திங்கள் வெளியீட்டினை முதற்கண் தொடங்கியவர். காஞ்சி நாகலிங்க முனிவரரவர். அகராதி தொகுக்கும் ஆற்றல் படைத்த இத்தமிழ்ப்பெரும் புலவர்க்குத் திங்கள் வெளியீடு ஒன்று தொடங்கி நடாத்துதல் பெரிதன்றெனினும் மரபினர் பலருடைய எண்ணமுஞ் செயலும் வேறுவேறு சென்றொழுகிய காலத்தில் அவற்றை ஒருமுகப் படுத்திச் சமூகத்தொண்டில் ஈடுபடுத்தியது அருமையாகும். "தன்னலமாம் இருள் மூடித் தடுமாறும் இந் நிலத்தில் மன்னுகுலத் தொண்டாற்றும் மாண்பினரும் உளர் கொல்லோ" என இந்நாளைப் புலவர் சமூகத்தொண்டு குறித்துச் சொன்ன தொன்று திங்கள் வெளியீடு முதலியவற்றால் குலத் தொண்டு புரிதற் கண்ணுள்ள அருமைப்பாட்டினை இனிதுவிளக்கும். பலதலையும் பரந்து செல்லும் நினைவு செயல்களை ஒருமைப்படுத்தி

அந்நெறிநின்ற நம் மரபினர் அனைவரையும் செம்மை உறுவித்தது முனிவரது செம்மலுள்ளத்தின் சிறப்பினை வலியுறுத்துகின்றது.

நம் நாட்டில் நிலவும் கல்வித்துறையின் இயல்பையும், கல்வி கற்றலின் மனப்பான்மையையும் கண்ட அறிஞர் கல்விநெறிக்கண் குறையுளதென்றும் தொழிற் கல்விக்கண் இளைஞர்க்கு ஊக்கமும் பயிற்சியும் உண்டாதல் வேண்டுமென்றும் அதுவே அக்குறையை நீக்கி நிறைக்கும் நீர்மைத்தென்றும் கூறலுற்றனர். அவர் கூற்று நாடு முற்றும் நன்கு பரவிற்று. அதனைச் செயலில் மேற்கொள்ளும் திண்ணியோர் மிகச் சிலரே உளராயபோது நம் முனிவர் தொழிற் கல்வி என்றொரு திங்கள் வெளியீட்டையும் தொடங்கினர். தொழிற்கல்வி பற்றிய அறிவும் பரவுவதாயிற்று. நம் முனிவர் பெருந்தகையின் இம்முயற்சிக்கு உள்ளீடாக நிலவுங் கருத்து மக்கள் உடலோடு கூடி வாழும் வாழ்க்கை, கல்வியும் வறுமையின்மையும் குல ஒருமையும் குறைவறக் கலந்த நிறைவுடையதாதல் வேண்டு மென்பது தெரிகின்றது. வையத்து வாழ்வாங்கு வாழ்வார்க்கன்றி வானுறையும் தெய்வ இன்ப வாழ்க்கையும் அதனைப் பெறுதற்குரிய துறவுநெறியும் வாயாவென அறிஞர் கூறுவர். நம் முனிவர்பால் துறவுநெறி சிறப்ப வாய்ந்திருப்பது மக்கள் வாழ்வாங்கு வாழ்தற்கு வேண்டும் கல்வி, தொழில் முதலியவற்றில் நலந்தேர்ந்து செய்வன செய்த செயற் பயனென்பதைச் சிறிதும் மறுக்கமுடியா நிலையில் தெளியக் காண்கின்றோம்.

சொற்களின் பொருளை சொற்பொருளியைபு காணுமல் நெறி பிறழ வழங்கும் மடமை நம் தமிழகத்தில் நிலவாத காலத்தில் சொல் வன்மையுள்ள தமிழறிஞனை நாவலனென்றும், பாமிக இயற்ற வல்ல வல்லுநனைப் பாவலனென்றும், நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உள்ளவாறுணர்ந்து அறிவு நிறைந்த உள்ளத்தாலும் அன்புநிறைந்த மொழியாலும் அறம் திறம்பாச் செயலாலும் அறிவுப் பணி புரிந்தோ ரைப் புலவரென்றும் கூறுவது தமிழ் மரபு. இம் மரபு நிலவுங் காலத்தே நம் முனிவரர் சிறப்புற்றவராதலின் இவரை அந்நாளை அறிஞர்கள் வண்ணப்பாவலரென்றும் திண்ணிய செந்தமிழ்ப் புலவரென்றும் பாராட்டினர். பாவலருள் வண்ணம் பாடுவோர் மிக அரியராவர். சில ஆண்டுகட்கு முன்பே திருப்புகழ் முருகதாச சாமிகள் வண்ணம் பாடுவதில் சிறப்புற்றிருந் தனர். அந்நாளில் அவரும் மகிழ்ந்து பாவத்தக்கநிலையில் நம் நாகலிங்க முனிவர் தணிகை முருகன் பேரில் வண்ணம் பாடி 'வண்ணக்களஞ்சியம்' எனச் சிறப்பிக்கப்பெற்றார். அச்சிறப்பு இன்னும் நிலைபெற்றிருக்கின்றது. சென்ற ஆண்டில் நாகைப் பட்டி னத்தைச் சார்ந்த மஞ்சட்கொல்லை சைவத்திரு இராமசாமி முதலியார் அவர்கட்கு நடந்த அறுபதாம் ஆண்டு விழாவிலும் முனிவர் பாடிய பாவில் வண்ணச் சிறப்பின் வாய்மை விளங்கியது.

இனி நம் தமிழ் நாட்டில் நிலவும் சைவ சித்தாந்தம் என்பது பண்டை நாளில் மெய்கண்ட சைவம் என்றும் மெய்கண்ட சமயமென்றும் அறிஞர் உலகில் வழங்கியதாகச் சான்றோர் கூறுவதுண்டு. அச்சமய நெறிக்குக் கூறிய நூல்களை மெய்கண்ட நூல்கள் என்றும் வழங்கினர். பின்பு எவற்றையும் வடமொழியின் ஆரவார ஓசையால் கூறுவதே சிறப்பென்று கருதும் இழி நிலை நாட்டில் தோன்றவே மெய்கண்ட சைவம் சித்தாந்த சைவமென்றும், சுத்தாத்துவித சித்தாந்த சைவமென்றும் கூறப்படுவதாயிற்று; மெய்கண்ட நூல்களும் சித்தாந்த சாத்திரமெனப் படுவனவாயின. நம் முனிவர் இவ் விழி கருத்து நிலவிய காலத்தே மெய்கண்ட சமயத்தின் உண்மைப் பொருள்களை நன்கு ஆராய்ந்து சீரிய புலமை நலம் பெற்றார். இவர்க்கு இச் சமய உண்மையைக் கற்பித்த சைவத்திரு. பூவை கலியாண சுந்தர யதீந்திரர் முதலாயினோர் வட மொழி ஆரவார ஓசையில் பெருங்காதலராயினும் இவர் அக்காதலுக்கு இரையாகாது மெய்கண்ட சமயமெனவே தம்முள்ளத்தில் பதிய வைத்து அம் மெய்கண்ட நூல்களை மெய்கண்ட சாத்திர மென்ற பெயராலே முதற்கண் வெளியிட்டனர்: இஃதொன்றே இவரது புலமையின் சிறப்பை இனிது வெளிப்படுக்கும். உள்ளதன் உண்மையை ஒளிக்காது உரைப்பது புலமையின் ஒட்பமாகும். மெய்கண்ட சமயத்துக்கு அடிப்படையான நூல்கள் உண்மைத் தமிழ் மெய்ந் நூல்களாதலின் அவற்றை மெய்கண்ட சாத்திரம் என வெளியிட்ட மேதகவு நினைக்குந் தோறும் இறும்பூது பயக்கின்றது.

இவ்வண்ணம் நம் தமிழுக்கும் சமயத்துக்கும் தாம் பிறந்த குலத்துக்கும் தொழிலுக்கும் அரும்பணி புரிந்து பெரும் புகழ் பெற்று நிலவும் சைவத்திரு வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர் எண்பதாம் ஆண்டு நிறைவு நம்மனோர்க்கு இன்பத்தைச் செய்கின்றது. அதனோடு ஒருண்மையும் நமக்குப் புலனாகின்றது. ஒருவன் எய்தும் ஆக்கக் கேடுகட்கு அவன் உள்ளத்தில் நிலவும் கருத்துக்களே காரணம் என்பர். கருத்துக்கள் தீயவையாயின் அவை நஞ்சாய் உடலிற் பரவும் குருதியைக் கெடுத்து அழிக்குமென்றும், நல்லவையாயின் அமுதமாய் ஆக்கம் பயக்குமென்றும் விளக்குவர். இதனால் நெடிது வாழ்பவர் நற்கருத்துக்களாய அமுதத்தால் வளம் பெற்றவரென்பது துணியப் படும். இந் நாளில் எண்பதாண்டுகள் இவ்வுலகில் வாழ்பவர் மிக அரியராவர். அவருள்ளும் எண்பதாண்டுகட்கு மேல் பல்லாண்டுவாழும் நற்பாங்கு பெற்ற நம் முனிவர் நற்கருத்துக்களின் வடிவமே என நம்மால் துணியத்தகும் தக்காராவார். இவர் செய்துள்ள திருப்பணிகள் பலவும் இவருடைய நல்லெண்ணத்தின் வடிவங்களாகத் திகழ்கின்றன. சுருங்கச் சொன்னால் இவர் பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் தமிழ் சமயம் சமூகம் முதலியவற்றில் காதல் சிறந்து

அவற்றின் முன்னேற்றத்திற்குரிய நல்லெண்ணமே நிறைந்து மேம்பட்டவரென்பது தெளிவாம். ஆனது பற்றி யன்றோ இவரை 'வண்ணக் களஞ்சியம் நல்ல எண்ணக் களஞ்சியம்' என இளமையுலகு பாராட்டுகின்றது. இளமைபாராட்டும் முதுமை சான்ற இம் முனிவரர் பெருந்தகை முந்நீர்குடித்த முது முனிபோல மன்னிய வாழ்வும் துன்னிய நலங்களும்பெற்று இன்னும் பல் யாண்டு இருந்து சிறப் பெய்துவாராக என எழில்பிறை மிலைச்சிய இறைவன் தாளை மொழி மனம் மெய்களால் வழிபடுகின்றேம்.

## பொது நலத்தின் மாண்பு

பிறர்க்கென வாழும் பெரியாரைச் சேருந்
துறக்கமுங் காணுச் சுகம்''

துறக்கமாவது சுவர்க்கம் (மோட்சம்) அதன் இன்பம் பெரிதுதான். அதைவிடப் பெரிய இன்பம் ஒன்றுள்ளது. அதுவே எல்லா உயிர்களையும் தானென்றெண்ணி அன்பு செய்யும் ஆனந்தம். அந்த இன்பம் யாரைச் சேரும்? தன்னலம் விட்டுப் பிறர்நலமே போற்றி அறப்பணி செய்து வாழும் பெரியாரையே அந்த இன்பம் தானாக வந்தெய்தும்.

மனிதன் தன்னைப் பூரணப் படுத்திக்கொண்டு மனித சமுதாயம் இன்னலற்று இன்புறத் தொண்டு செய்தல் வேண்டும். வாழ்வுஆறு பூரண வெள்ளத்தால் நிரம்பி, உலகுயிர் செழிக்கப் பாய்ந்து அருட்கடலைச் சேர்ந்து பேரின்ப மெய்தல் வேண்டும்.

எண்ணெயுந் திரியுங் குறைந்தாலும் பிறர்க்கு வெளிச்சம் தருவதே விளக்கின் இன்பம். தான் அற்று மறைந்தாலும் மண்செழிக்கப் பொழிவதே கார்மேகத்தின் இன்பம். இதுபோல நமது குலப் பெரியாராகிய நாகலிங்கமுனிவரவர்களுக்கும் தன்னலங் கருதாது குந்தர்குல மக்கள் குடி செழிக்கவும் ஏனையோரும் தமிழ் நூல் கற்று நற்றவப் பயனையடையவும் தொண்டாற்றி வருதலே கழிபேரின்பம். அவர் செய்த தொண்டுகளில் தலையாயது ''செங்குந்தர் பிரபந்தத்திரட்''டையும் இன்னும் பல நூல்களையும் நன் முறையில் எல்லோரும் படித்துப் பயனடையும்படி பதிப்பித்தமையேயாம்.

''தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றேன்றுமை நன்று''

என்று புகன்ற வள்ளுவன் வாக்குக்கோர் சான்றாகத் தோன்றிப் புகழொடு விளங்குகின்றார் நமது நாகலிங்கமுனிவர் என்றால் ஒருசிறிதும் மிகையாகாது என்று கருதுகிறேன்.

முருக. சரவணபவன்.
தமிழ்க் கல்லூரி, மயிலம்.

# பழந்தமிழ் இசையும் கர்நாடக சங்கீதமும்

டி. இலஷ்மணப் பிள்ளை

இசைத்தமிழ்ச் செல்வர்

மிகப் பழையகாலத்திலே, மனிதர் நாகரீகமற்றுக் காட்டாளராக வாழ்ந்திருந்தபோது, இசை, அல்லது, சங்கீதம், இருந்ததென்பதற்குப் பல அத்தாட்சிகள் உள. 'இசை' என்ற பெயர் ஆதியில் சொல்லோடு இசை இயைந்தமையால், அதற்கு ஏற்பட்டது. ஆதியில் சொல்லோடு பொருந்திய ஒலிப்பொருளாதலால், அப்பெயர் அதற்கு மிகவும் பொருத்தமாயிருக்கிறது. இசை முதலாவது உலகத்தில் தோன்றிற்று என்பது துல்லியமாய்க் குறிப்பிட்டு வரையறுக்கக் கூடவில்லை. ஆனால், முதலில் இசை நாட்டியத்தோடு கலந்திருந்தமை ஊகிக்கப்படுகிறது. காட்டாளரிடையே ஒரு வர்க்கத்தார் போரில் வெற்றியடையவோ, அல்லது, மற்றெவ்விதமான முக்கிய காரியங்கள் நிகழவோ நேர்ந்தால், அதை அவர் ஆட்டம் மூலமாகக் கொண்டாடி வெளிப்படுத்துவது வழக்கமாயிருந்தது. அக் கொண்டாட்டங்களில், ஆட்டத்தோடு உரையும் இயைந்திருக்கும். அவ்வுரையை உள்ளுணர்ச்சியுடன் அழுத்திச் செல்லும்போது, இசை பிறக்கின்றது. அவ்விசை இசை நூற்கள் ஏற்படுவதற்கு எவ்வளவோ முந்திக் கிளம்பி யிருக்கவேண்டும். உணர்வோடு கலவாத தனியிசை இன்பத்தை அவர் அறிந்திருக்கவில்லை. அவருடைய ஆட்டங்களில் பாடிய பாட்டுகளைத்தான் மேனாட்டார் 'போக் ஸாங்ஸ்,' (Folk-songs) என்று பெயரிட்டு அழைக்கின்றனர்.

சிலகாலம் சென்று இசையுடன்பாடி ஆடுகின்றவர் இரு கூறாகப் பிரிந்தனர். ஒரு பிரிவினர் நாட்டியக்காரர்; மற்றொரு பிரிவினர் நாட்டியத்தைக் கண்டும், இசையைக் கேட்டும் இன்புறுகின்றவர். இந்நிலைமை நிகழ்ந்தபோது, கேட்போரை மகிழ்வித்தல் என்னும் செயல் ஏற்பட்டதால், அப்பொழுதே அது இசைக்கலையின் ஆரம்பம் ஆகிறதென்று திரு. கானவி சாரதா M. S. ராமசுவாமி ஐயரவர்கள் ஆராய்ந்து அபிப்பிராயப்படுகிறார். தமிழரிடையில் மிகப் பழைய காலத்திலேயே, இசை வழங்கி வந்தது. தலைச்சங்க காலத்திற்கு முந்தியே, இடையரிடையில், குழல் ஊதுதல் நிகழ்ந்தது என்பதற்குப் பல அத்தாட்சிகள் உள்ளன. 'யாழ்' என்னும் தமிழரின் இசைக்கருவி மிகப் பழையகாலத்திலேயே வழங்கி வந்தது என்பதற்கு அத்தாட்சியாக, 'மொஹஞ்சோதாரோ', ஹரப்பா', என்னும் சிந்துநாட்டு நகரங்களில் அண்மையில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பண்டையத் தமிழ் நாகரீகச் சின்னங்களில், 'யாழ்'க் கருவி யிருந்ததற்கு லக்ஷியம் இருக்கிறதாகவும், ஆதியில் 'யாழ்' என்னும் மொழி, 'ஆழ்', அல்லது, 'ஆள்' என்னும் மொழியின் திரிபே யென்றும் தலைசிறந்த ஐரோப்பிய ஆராய்ச்சியாளரான பாதர் ஹீராஸ் என்பவர் சில நாட்களுக்குமுன் அண்ணாமலை நகரில் சொற்பொழிவாற்ற வந்திருந்தபோது, என்னிடம் வெளியிட்டார். யாழ் என்னும் இசைக்

கருவியின் உருவமே முற்கூறிய சின்னங்களில் காணக் கிடைக்கின்றது என்று அவர் எடுத்து மொழிந்தபோது, நான் அற்புத மேலீட்டினால் மயிர்க்கூசல் உற்றேன். அகழ்ந்தெடுப்புச் சின்னங்களால் வெளிப்பட்ட நாகரீகம் திராவிட நாகரீகமே யென்றார். அதற்குக் கிறிஸ்து ஆப்ஜத்திற்கு முந்தி 2750-க்கு மேல் 3250 ஆண்டுகள் வரையில் காலம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பாபிலோனிய நாகரீக காலமும் இதுவேயாகும். ஆரியர் வருகைக்கு அந்த ஆப்ஜத்திற்கு 2000 ஆண்டுகளுக்கு முந்தியகாலம் குறிப்பிடும் ஆராய்ச்சியாளர் ஒருவருமில்லை. திராவிடருடைய நாகரீக காலத்தில் யாழ் வாத்தியம் வழங்கி வந்திருத்தலால், அதை யொட்டி ஓர் இசையிலக்கணமும் அக்காலத்தில் இருந்திருக்கவேண்டும் என்பது உய்த்துணரலாம். ஆரியருடைய சாமவேதத்திற்குப் பிற்பட்டுத் தோன்றிய ஆரிய இசை இலக்கணம் திராவிட இசை யேற்பாட்டுக்கு எவ்வளவோ பிந்தியதென்பதும் வெளிப்படையே.

இனி, கர்நாடக சங்கீதத்தைப்பற்றிச் சற்று ஆராய்வோம். அது திராவிட இசை யேற்பாடா, அல்லது, ஆரிய சங்கீத யேற்பாடா, அல்லது, இரண்டும் கலந்த ஒரு ஏற்பாடா, என்பதைப்பற்றிச் சிந்திப்போம். சென்னைப் பல்கலைக் கழகம் இந்திய சங்கீத இலாகாத் தலைவர் புரொபஸர். P. சாம்பமூர்த்தி அவர்கள் கீழ்க்கண்டவாறு உரைக்கின்றார் :—

"பண்டைக் காலத்துத் தமிழ் மக்கள் இசையில் வெகு வல்லவர்கள் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. பரத முனிவரே தமது நாட்டிய சாஸ்திரத்தில், 'தாக்ஷிணாத்ய பத்ததி' என்பதைப் பற்றிச் சிறப்பாகக் கூறுகிறார்."

பரத முனிவர் கிறிஸ்து ஆப்ஜத்திற்கு ஒரு நூற்றாண்டு முன்பிருந்தார் என்பது சில ஆராய்ச்சியாளரின் முடிபு. அவர் காலத்திற்றான் ஆரிய சங்கீத சாஸ்திரம் ஆதியில் முறைப்படி எழுதப்பட்டுள்ளது. அக்காலத்திலேயே தக்ஷிணத்தில், அதாவது, தென்னிந்தியாவில், ஒரு தனிப்பட்ட இசை யேற்பாடு இருந்ததென்று இதனால் விளங்குகிறது. 'சங்கீத ரத்னாகரம்' என்னும் இசைநூலை இயற்றிய சாரங்க தேவர், தமிழ்நாட்டுப் பண்களை ஒருவாறு ஆராய்ந்து கற்றவர் என்றும், தேவாரத்தில் கூறப்படும் சில தமிழ்ப்பண்களைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார் என்றும் அறிகிறோம். அவர் கி. பி. 13-வது நூற்றாண்டில் வாழ்ந்திருந்தார். அவருக்குப்பின் வாழ்ந்திருந்த 'ஸ்வரமேள கலாநிதி' என்னும் இசை நூலை இயற்றிய ராமா மாத்தியரும் சில தமிழ்ப்பண்களைக் குறிப்பிட்டிருப்பதாகவும் அறிகிறோம்.

பரத முனிவரும், சாரங்கதேவரும், ராமா மாத்தியரும் தமிழிசை யேற்பாட்டுப் பண்களைக் குறிப்பிட்டிருப்பதிலிருந்து, நாம் உய்த்துணரக் கிடப்பது என்னவென்றால், தமிழிசை யேற்பாட்டிற்கும், ஆரிய சங்கீத ஏற்பாட்டிற்கும் இடையே ஒரு நெருங்கிய தொடர்பு இருந்தது என்பதே. இரண்டு மரங்கள் நெடுங்காலம்

அடுத்தடுத்து வளர்வது உண்மையாயின், அவற்றின் வேர்கள் ஒன்றோடொன்று பிணைந்து பின்னிக்கொள்வது இயற்கையின் நெறியாகும். அவ்வாறே அந்நெறி சங்கீத ஏற்பாடுகளிலும் தொழில் புரிகின்றது. இப்படியே தமிழிசை யேற்பாட்டிலுள்ள பண், பண்ணியல், திறம், திறத்திறம் என்னும் பாகுபாடு, கர்நாடக சங்கீத ஏற்பாட்டில் சம்பூர்ணம், ஷாடவம், ஔடவம் முதலிய பாகுபாடாகத் திரிந்திருக்கலாம்.

திரு. N. S. ராமச்சந்திரன் என்னும் ஆராய்ச்சியாளர் தாம் எழுதிய 'கர்நாடக சங்கீத ஏற்பாட்டின் ராகங்கள்' (Ragas of Karnatic Music) என்னும் நூலில்,

(1) "கர்நாடக ராகங்களில் மிகவும் பிரசாரமுள்ள சங்கராபரணம், கரஹரப்ரிய, தோடி, கல்யாணி முதலிய ராகங்கள் தமிழ் நாகரீகத்தின் பொற்காலக் கலைநிலையிலிருந்து எஞ்சியவையாகின்றன", என்று குறிப்பிடுகிறார். இன்னும் அவர் கூறுவதாவது :—

(2) "ஒரு சங்கீதஸ்தாயியை 12 ராசிகளாக தமிழிசை ஏற்பாட்டில் பாகுபாடு செய்திருப்பது, முற்றிலும் புதுமையானதும், ஒரு புதுக்காலவட்டத்தை உற்பத்தி செய்வதும் ஆம் (Quite Original and Epoch making) கர்நாடக சங்கீதத்தின் தற்கால ஸ்வர ஏற்பாடு அந்தப் பாகுபாட்டையே அடிப்படையாக்கி உருப்பட்டது.'

(3) இந்தத் தமிழிசை ஏற்பாடு தற்கால சங்கீத ஏற்பாடு உண்டாவதற்கு வெகு முக்கியமான அம்சங்களை அளித்திருக்கின்றது. உண்மையாகவே, பிந்தியது முந்தியதின் தழைப்பே யாம் (Development).

காலஞ்சென்ற சென்னை சங்கீத கீர்த்தனாசாரியார் திரு C. R. ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள், 1927-ஆம் வருஷத்திய சென்னையிற் கூடிய அகில இந்திய சங்கீத விழாவில் (All-India Music Conference) சொற்பொழிவு ஆற்றியபோது, இவ்வபிப்பிராயங்களை யொட்டியே பேசியிருக்கின்றார்.

தேவாரத்தில் 24-தமிழ்ப்பண்கள் குறிக்கப்பட்டுள்ளன. அவை இன்றும் ஓதுவார்களால் பாடப்பட்டு வருகின்றன. அவற்றிற்கும் இப்போதைய கர்நாடக ராகங்களுக்கும் நெருங்கிய ஒற்றுமைப்பாடு காணப்படுகின்றது. இரண்டு வகை ராகங்களும் ஒருவகையே யென்று சொல்லலாம். உதாரணமாக,

| | | |
|---|---|---|
| செவ்வழி | — | யதுகுல காம்போதி |
| சாதாரி | — | காமவர்த்தனி |
| வியாழக்குறிஞ்சி | — | சௌராஷ்டிரம் |
| பழந்தக்கராகம் | — | ஆரபி |
| புறநீர்மை | — | பூபாளம் |

ஏனைய 19 தமிழ்ப்பண்களுக்கும் கர்நாடக ராகங்களில் ஒப்புடையவை உள்ளன, தமிழ்ப் பண்களே ஸம்ஸ்கிருதப் பெயர் பெற்றுக்

கர்னாடக ராகங்களாக மாறின என்று கூறும்படியாயிருக்கிறது. ஆரிய
ராகங்களே தமிழ்ப் பண்கள் ஆயின என்று சொல்லலாகாதோ என்
னால், காலத்தால் தமிழ்ப்பண்கள் முந்தியன என்பதை நாம் முன்
கண்டோம். தமிழிசை, அல்லது, திராவிட சங்கீதக் கலை ஆரிய
சங்கீதக் கலைக்குப் பல நூற்றாண்டுகள் முற்பட்டு வழங்கி வந்தமைக்
குச் சான்று, தமிழர் ஆரியர் வருகைக்குப் பல நூற்றாண்டுகள் முந்
திய காலத்தில் இந்தியா முழுவதும் பரந்திருந்தனர் என்று ஆராய்ச்
சியாளர் துருவிக்கண்ட முடிபேயாம். அவ்வுண்மையை மொஹஞ்சோ
தாரோ, ஹரப்பா என்னும் வட இந்தியப் பட்டணங்களில் அகழ்ந்
தெடுக்கப்பட்ட சின்னங்கள் வற்புறுத்துகின்றன. பழைய தமிழ்
நூல்களில் 103 பண்கள் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றில், முற்
கூறிய 24 தேவாரப் பண்கள் நீங்கலாக, மீதி 79 பண்களும் வட
மொழி நாமகரணம் பெற்று கர்நாடக ராகங்களாக உருமாறி யிருத்
தல் வேண்டும்.

கர்நாடகம் என்னும் பெயர், ‘கரை நாடகம்’ என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபேயாகும். அப் பெயர், தென்னிந்தியா, அல்லது, தக்ஷிண இந்தியாவுக்கே உரியதாகும். தமிழகம் என்ற முன்பிருந்த பெயர் விரிவுற்று, கரைநாடகம், அதாவது கடற்கரையை மூன்று பக்கங்களிலும் உடைய நாடு என்னும் பொருளதாயிற்று. அப் பெயர் வடமொழிக்கு இருப்பிடமாயிருந்த வட இந்தியாவுக்கு ஒருவாற்றானும் பொருத்தமுடையதன்று.

ஆகவே, சரஸ்வதிக் கிளைநதியும், யமுனைக் கிளைநதியும் ஒன்று சேர்ந்து, கங்கா நதியென்ற புதுப்பெயர் பெற்றது போல், தமிழிசை யேற்பாடும், ஆரிய சங்கீத யேற்பாடும், ஒரு காலத்தில் தம்முட் சந்தித்துக் கலந்து, கர்நாடக சங்கீதம் என்ற ஏற்பாடாய்த் திரிந்தன என்பதும், ஆயினும், அதற்கு அடிப்படை தமிழிசை ஏற்பாடே யென்பதும், முற்கூறியவாற்றால் நன்கு விளங்கும். தமிழிசை யேற்பாட்டில், இசை நுணுக்கம், பேரிசை, சிற்றிசை, பெருநாரை, பெருங்குருகு முதலிய இசை நூல்கள், இரண்டாவது தமிழ்ச்சங்க காலம் தொட்டே, அதாவது, கி. மு. முதல் நூற்றாண்டில் இருந்த ஆரிய சங்கீத ஆசிரியராகிய பரதமுனிவருக்கு முந்தியே, இருந்தன என்று அடியார்க்கு நல்லார் முதலிய உரையாசிரியர்கள் குறிப்பிட்டிருக்கின்றார்கள். ஆனால், 13-வது நூற்றாண்டில் இருந்த சாரங்க தேவருக்குப் பின்பு தமிழில் இசையிலக்கணம் எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. அதற்குக் காரணம் இரண்டு ஏற்பாடுகளும் கலப்புண்டு அநேக தமிழ்ப் பண்கள் வடமொழிப் பெயர்கள் பூண்டும், வடமொழியில் சங்கீத இலங்கணங்கள் எழுதப்பட்டும் வந்தமையால், தமிழிசைக்குத் தனியான இசையிலக்கணம் எழுதுதல் அவசியமில்லையென்று கண்டு, அவ்விலக்கணம் எழுதும் வேலை விடுபட்டதாயிருக்க வேண்டும் என்று உய்த்துணரலாம்.

# பிறர்க்குரியாளன்

கு. நமசிவாயன், மயிலம், தமிழ்க் கல்லூரி.

மலர்தலையுலகத்து வாழ்ந்தோர் பலருள், இன்று நம்மால் அறியப்படுவோர் சிலரே; ஒருவராலும் அறியப்படாது, 'மரையிலை போல' மாய்ந்தோரே பலராவர்.

இங்ஙனம் ஒரு சாரார் பிறரால் அறியப்பெற்றும் மற்றொரு சாரார் அறியப் பெறுதும் இருத்தற்குக் காரணம் காணலுறின், முன்னவரின் பிறர்நலங் கருதும் பெருநெறி வாழ்க்கையும், பின்னவரின் தம் நலங் கருதும் தாழ்நிலை வாழ்க்கையுமே ஏதுக்களாகும்.

பிறர் நலங் கருதும் பெற்றியாளர் தம் நலத்தை நோக்காது பிறர் நலனுறுதற்காகவே தாம் உயிர் வாழ்தலின், அவர் பிறர்க்கே உரியவர் ஆகின்றார். இங்ஙனம் ஆதற்குக் காரணம்,

> "அன்பிலா ரெல்லாந் தமக்குரியார்; அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு."
>
> (குறள்-அன்புடைமை-உ).

என்ற வள்ளுவர் வாய்மொழியின்படி பிறர் யாவர் மாட்டும் கொண்ட அன்பே யாம்.

இப்படியாகப் பிறர்க்குரியாளராய் வாழ்ந்த நல்லோர் பலருள் பண்ணன் என்ற கொடையாளனும் ஒருவன் ஆவான்.

இந்நாளில், காஞ்சி. நாகலிங்க முனிவர் அவர்களின் 80-ஆம் ஆண்டு நிறைவு குறித்துச் சென்னை முதலிய பல இடங்களில்-ஏன்? தமிழ்நாடு முழுதும் "முத்து விழா" கொண்டாடப் பெறுகிறது.

முனிவர் அவர்கள் தமிழ் மொழிக்கும், சைவ சமயத்துக்கும், செங்குந்த குலத்துக்கும் பற்பல வழிகளிற் பெருந் தொண்டு ஆற்றியவர்கள். தம் நலம் நோக்காது, நூல்களைச் செவ்விய முறையில் தொகுத்தும், பதிப்பித்தும் வெளியிடுதலையே தம் வாழ்நாளின் குறிக்கோளாகப் — பணியாகத் — பயனாகக் கொண்டவர்கள். தொழிற் கல்வி, செங்குந்த மித்திரன் முதலிய இதழ்களை நடத்தி மக்களின் மனத்தில் புத்தம் புதிய உணர்ச்சிகளைப் புகுத்தியவர். சுருங்கக் கூறின், முனிவர் அவர்களைப் "பிறர்க்கென வாழ்நர்" என்றே கூறலாம்.

பிறர்க்கென வாழும் பெரியோரின் விழா நாளில் பிறர்க்குரியாளனாய் வாழ்ந்த ஒருவனது பெருமையைப் பேசுதல் பெரிதும் பொருத்தமுடைத்தாம். ஆதலின், இங்கு பண்ணனைப் பற்றிக் கூறத் துணிகின்றேன்,

பண்ணன் கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு வள்ளல். சிறுகுடி என்ற ஊரையுடையவன். நெல்லி, மா, பாதிரி முதலிய பல மரங்கள் நிறைந்த சோலைகளை யுடையவன். புலவர்களையும் இரவலர்களையும் புரந்த அறவோன்.

பண்ணனது பெருமைகளுள் முதற்கண் கூற நிற்பது, அவனது சோற்றுக் கொடைச் சிறப்பேயாம். பொதுவாக நோக்குமிடத்துப் பழங்காலத் தமிழ் அரசர்களிற் பெரும்பாலோர், பாணர்களுக்கும் புலவர்களுக்கும் பிறர்க்கும் சோறளித்தலையே பெருங் கொடையாகக் கருதினர் என்பது, சங்கப் புலவர் பாடல்களினின்று நன்கு விளங்குகின்றது.

> "அற்றார் அழிபசி தீர்த்தல்; அஃதொருவன்
> பெற்றான் பொருள்வைப் புழி."
>
> (குறள்-௨௨௬)

> "மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
> உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே."
>
> (புறம்-௧௮)

என்ற பொருண்மொழிகளும் உணவளித்தலின் உயர்வையே உணர்த்துகின்றன.

ஓர் நாள் பண்ணனது சுற்றத்தார்கள் எல்லாம் பசியால் வாடினார்கள். அந்நிலை கண்டு, அவர்கள் யாவருக்கும் தன் மனையில் உணவளித்துத், தான் பெற்ற பெருஞ் செல்வத்தை எல்லோரும் நுகருமாறு பெருஞ்சோற்று விழா அயர்ந்தான், நம் சிறுகுடிச் செல்வன்.

இந் நிகழ்ச்சியை அறிந்த "குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்" என்ற சோழன், தானோர் இரவலன் நிலையிலிருந்து,

"யான் வாழுங் காலம் வரையும் பண்ணன் நன்கு வாழ்வானாக. பாணர்கள், இவன் சுற்றத்தாரது வறுமைத் துன்பத்தைக் காண்பாராக. (அத் துன்ப நிலை கண்டு பண்ணன் இடும் சோற்றை) அவனுடைய சுற்றத்தார் உண்ணுங்கால், "புதிதாகப் பழுத்த மரத்தில் பறவைகள் ஒலித்தல் போல," உண்டாகும் பேரொலியும் கேட்கின்றது; "தப்பாது பெய்யும் மேகம் மழைபெய்யுங் காலம் நோக்கி, வெண்முட்டைகளை எடுத்துக்கொண்டு, கடின நிலத்திற் செல்லும் எறும்புகளைப் போலச்" சோறு ஏந்திய கையினராய்க், கூட்டம் கூட்டமாகச் செல்லும் சுற்றச் சிறுவர்களையும் பார்க்கின்றேன்; பார்த்திருந்தும் (என் பசி மிகுதியால்) மீண்டும் மீண்டும் கேட்கின்றேன். பசிப்பிணியை நீக்கும் மருத்துவனாகிய பண்ணனது இல்லம், அண்மையில் உள்ளதா? தொலைவில் உள்ளதா? எனக்கு விரைவில் கூறுங்கள்." என்ற பொருளில்

"யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய
பாணர் காண்கிவன் கடும்பின(து) இடும்பை
யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி அரவம் தானும் கேட்கும்;
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி,
முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக் கையர் வீறுவீ(று) இயங்கும்
இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும்; கண்டும்
மற்றும் மற்றும் வினவுதும் தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே"

(புறம்-கஎந

எனப் பாடிய பாடல், பண்ணன் சோறு அளித்ததனை நன்கு விளக்கும் சான்றாகின்றது.

இப்பாட்டினுள், "யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந்தன்ன ஊணொலியரவம்" என்ற உவமையைச் சிறிது ஆழ்ந்து நோக்கின், பண்ணன் பழுமரம் ஆகவும், சுற்றத்தார் பறவைகளாகவும் கொள்ளக் கிடத்தல் புலனாகும்.

"மரம், பலநாட்கள் ஈட்டிய உணவின் பயனாய்ப் பழுக்கும் பழங்களைக் கைம்மாறு கருதாது, பிறர்க்கெல்லாம் வழங்கல்போல, பண்ணனும் தான் பல நாட்கள் முயன்று தேடிய செல்வத்தைப் பிறர்க்கெல்லாம் வழங்குந் தன்மை வாய்ந்தவன்" என்ற செய்தி, அவ் வுவமையினின்று பெறப்பட்டது, "பசிப்பிணி மருத்துவன்" என்று கூறியுள்ளது போற்றற்குரியதாம்.

"மக்கள் அடையும் துன்பநோய் தீர்க்கும் அன்புடை மருத்துவன் பிணியாளரின் நோய் தீருமளவும் மருந்து கொடுத்துப் பிறர் நலத்துக்காக உழைத்தல் போலப் பண்ணனும் பசியாளரின் பசிநோய் தீரும் அளவும் உணவு நல்கிப் பிறர் நலத்துக்காக உழைப்போன்" என்பது, அதிலிருந்து பெறப் பட்டது.

"யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன"

என்ற அடி,

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால், செல்வம்
நயனுடை யான்கட் படின்.

(குறள்-ஒப்புரவறில்-கூ)

என்ற குறளுடன் ஒப்பு நோக்கி மகிழற்பாலது. 'யாணர்....இமிழ்ந் தன்ன', "பசிப்பிணி மருத்துவன்" என்ற இவ் வரிகள் — பிறர்க்குரியாளன் பண்ணன் — என்ற நம் கொள்கைக்கு அரண்செய்கின்றன,

அடுத்து நோக்கற்குரியது அவனது பொருட் கொடைச் சிறப்பாம். அவன் பொருளை வழங்குதலிலும் சிறந்தவனென்பது,

"வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
இரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும் பெயர்
..................................பொருந்தித்
தங்கிலை யறியுந ருக அங்கிலை
இடுக்கண் இரியல் போக உடைய
கொடுத்தோன் எந்தை கொடைமேந் தோன்ற"

(புறம்-ந அஅ)

என்ற மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் கூற்றாலும்,

("உடைய தோன்ற".—எம் தலைவனாகிய பண்ணன், தன் கொடைத் தன்மை மேம்பட்டுத் தோன்றும்படி, தன்னிடத்திருந்த செல்வங்களைக் கொடுத்தான் என்பது கருத்து.)

"கைவள் ளீகைப் பண்ணன்"

என்ற கோவூர் கிழார் மொழியாலும் தெளிவுறும்.

இங்ஙனமாக இருவகைக் கொடையும் ஒருங்கு புரிந்த பண்ணனைப் புலவரொருவர், தலைவன் கூற்றில் வைத்துப் புகழும் ஒரு பகுதியைக் கூறி இக் கட்டுரையை முடிப்பாம்.

தலைவன், தலைவியைப் பிரிந்துசென்று, போர்த்தொழில் செய்து, முடித்து வீடு திரும்புகின்றான். வரும் வழியில் தலைவியின் நினைவு வருகின்றது அவனுக்கு. தலைவி, தன்னைப் பிரிந்து ஆற்றியிருப்பதுடன், இனிய மொழிகள் கூறிக் குழந்தையை நன் முறையில் வளர்த்தலையும் மேற்கொண்டுள்ள காட்சி அவனது மனக்கண்முன் தோன்றுகின்றது. பொன்மணித் தேரூர்ந்து வரும் அத் தலைவன், உடனே தன் தேர்ப்பாகனை நோக்கி,

"தேரை விரைந்து செலுத்தி, 'தனக்காக உயிர் வாழாதவனும் பிறர்க்கே உரியவனும் ஆகிய பண்ணனது சிறு குடி என்ற ஊரில் உள்ள நெல்லி மரத்தின் பசுமைவாய்ந்த காயினைத் தின்றவர்கள், நீர்குடித்த காலத்து நுகரும் இனிப்பைப் போன்ற இனிமையுடைய மொழிகளைக் கூறிப், புதல்வனை ஏமாற்றும் நம் தலைவியின் நிலை'யை நாம் காண்போமாக" என்ற கருத்துப்பட

"கடவிக் காண்குவம் பாக.........
தனக்கென வாழாப் பிறர்க்குரி,யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பைச் சிறியிலைப்
புன்கால் நெல்லிப் பைங்காய் தின்றவர்

நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி
..........................................................
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே."

(அகநானூறு

எனக் கூறுகின்றான்,

இச் செய்யுளைப் பாடிய நல்லிசைப் புலவர், பண்ணனின் கொடைச் சிறப்புக்கள் பலவற்றையும் நன்கறிந்து, சுருக்கமாகத் 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்று அவனைப் புகழ்ந்துள்ள தன்மை, கற்போர்க்குக் களிப்பு ஊட்டுவதாகும்.

இனி, இத்தகைய பிறர்க்குரியாளரின் புகழ்ச்சி முழுதும் கூறுவதென்பது என்றால் முடியாததாகும்.

*"உண்டால் அம்மஇவ் வுலகம்.........
...........................................
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"

(புறம்-கஅ௨)

என்னும் பாடலில் "தமக்கென முயற்சி செய்யாது பிறர்க்காக முயற்சி செய்யும் பெரியோர்கள் இருப்பதால்தான் இவ்வுலகம் (நிலைபெற்று) இருக்கிறது" என்று கூறிப் பிறர்க்குரியாளரின் பெருமையைக் 'கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதியாரே' முற்ற முடித்துப் போந்தாராதலின் சிறிது கூறப் புகுதலும் மிகையாம்.

பண்ணன் கடைச் சங்க காலத்தினனாயிருப்பினும் இன்று நம்மிடையேயும் வாழ்கின்றான்—என்றும் வாழ்வான். எங்ஙனமெனின்,

"..................................இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக"

என்ற ஆன்றோர் ஆணைப்படி, தம் புகழை நிறுத்திச் சென்றோர் இவ்வுலகத்தில் நிலைபெற்று வாழ்வார் ஆதலின். அப் பிறர்க்குரியாளனைப்—பிறர்க்குரியாளரின் பெருவிழாவில்—"யாம் வாழும் நாளும் பண்ணன் வாழிய" என்று நாமும் வாழ்த்துவோமாக.

வாழ்க பண்ணன்! வாழ்க முனிவர்!

---

* முயலுநர் உண்மையான் இவ்வுலகம் உண்டு என முடித்துக்கொள்க. ஆல் ('உண்டால்'), அம்ம என்பன அசைச்சொற்களாதலின் விடுக்க,

# படிக்காசுத் தம்பிரான் சுவாமிகள்

மா. அ. கனகசபை

பதினேழாம் நூற்றாண்டில் செங்குந்த நன்மரபிற்றோன்றி இறைவன் திருவருளால் புலமை நிரம்பப்பெற்றுத் தருமையாதீனத்துத் தம்பிரான்களுள் ஒருவராகிய படிக்காசுத் தம்பிரான் சுவாமிகள் புள்ளிருக்கு வேளூரெனப் பெறும் வைத்தீசுவரன் கோயில் கட்டளையினை மேற்பார்த்துவந்த வரலாறு தமிழ் நாடறிந்ததேயாகும். இவ்வரலாற்றால் திருக்கயிலாய பரம்பரை தருமையாதீனம்போன்ற சைவ ஆதீனங்களில் தம்பிரான்களாயமர்ந்து சைவ சமய ஆட்சியினை நிகழ்த்தும் உரிமையும் தகுதியும் செங்குந்தப் பெருமக்களுக்கு உண்டென்னு முண்மையினைச் சரித்திர உலகு நன்குணரும்.

இஃதிவ்வாறாக, "பதினேழாம் நூற்றாண்டுப் புலவர்" என்னும் உரைநடை எழுதிய தேசிகர் ஒருவர் தருமை ஆதீனத் தம்பிரானாகிய படிக்காசுப் புலவரைச் செங்குந்தரென்றால் தமது தேசிகநிலைக்குத் தாழ்வுவருமென்று கருதிப்போலும் தமக்கு முன்னுள்ள ஆசிரியர் பலர் கூறியும் எழுதியும் வந்த வரலாற்றுக்கு மாறாகத் தாமொருவர் மட்டும் அவர் செங்குந்தரல்லர் தொண்டைமண்டல முதலியாரேயெனச் சாதிப்பாராயினர். சைவசமய ஆதீனங்களில் தீக்கை பெற்றுத் தம்பிரான்களாதற்குரிய உரிமை சைவ வேளாளர்க்கும் தொண்டைமண்டல முதலியார்களுக்கும் அன்றிப் பிறமரபினர்க்கின்மையால் தருமையாதீனத்தைச் சேர்ந்த படிக்காசுத் தம்பிரான் செங்குந்தராக இருக்க முடியாதென்றும் அவர் தொண்டைமண்டல முதலியார் மரபினராகத்தானிருக்க வேண்டுமென்றும் அவ்வுரைநடையில் பொருந்தாக் காரணமொன்று காட்டி எழுதியுள்ளார்.

வரலாற்றாசிரியராவார் தொன்று தொட்டு வழங்குவனவற்றை ஆதரிக்கவோ அன்றி மறுக்கவோ புகுமிடத்து அறிஞரனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய காரணங்களை ஆதாரமாகக் காட்டற்குரியர். அம்முறையில் படிக்காசர் செங்குந்தரே எனத் தொன்று தொட்டு வழங்கும் வரலாற்றை இத்தேசிகர் மறுத்தற்கு அவர் தருமையாதீனத் தம்பிரானாக இருந்தார் ஆதலால் அவர் செங்குந்தரல்லர் என்றொரு காரணம் காட்டுகிறார். செங்குந்தர்கள் சைவ ஆதீனங்களில்தம்பிரான்களாக இருக்கமுடியாது என்ற விதியினை இவர் யாண்டு அறிந்தார் என்பது முதல் வினா? நல்லொழுக்கமும் கல்வியும் உயர்குடிப் பிறப்பும் உடைய தமிழரனைவரும் சைவ ஆதீனங்களிலிருந்திருக்கிறார்கள். தேசிகர் கருத்துப்படி செங்குந்தமரபு இத்தகைய தகுதியைப் பெற்றதன்று என்பது பொருந்துமா? பெரியார் ஒருவரை இணங்கருதிப்

பாராட்டுதல் இனப்பற்றுடையார்க்குரிய இயல்பாகும். இம்முறையிற் செங்குந்தாளைவரும் படிக்காசரைத் தம்மினத்தவ ரெனத் தவறுது போற்றி வருகின்றனர். தேசிகர் கூறுமாறுபோலப் படிக்காசர் தொண்டைமண்டல முதலியார் மரபினராகவோ அன்றிக் கார்காத்த வேளாளர் முதலிய பிறகுலத்தினராகவோ இருந்திருப்பாராஞல் அவ்வினத்தவர் படிக்காசரைத் தம்மவரெனப் போற்றத்தவருர். ஒரு தொடர்புங்காணுது சிறப்புக்கருதி வேற்றினத்துப் பெரியாரைத் தம்மினத்தவரென்று கூறிக்கொள்ளுதல் தம்முடைய குடிப்பிறப்புக்கே இழுக்குத் தருவதாகும் என்று அறிந்து கொள்ளுமியல்பு நம்மவர்க் குண்டாகும்போதுதான் நம்நாட்டுப் பெரியோர் வரலாறு உண்மை வரலாருக வெளிவரமுடியும். திருவாவடுதுறை, தருமபுரம் ஆகிய திருவருள் நிலையங்களில் முதற் குரவர்களாகவும், தம்பிரான் முதலிய அடியார் குழாங்களாகவும் பண்டுவாழ்ந்துவந்த மக்களனைவரும் தமிழகத்திலுள்ள தமிழ்க் குடும்பங்களாகிய பல குலங்களிலும் தோன்றியவர்களே யென்பதும் இக்காலத்துச் சைவ வேளாளர்களெனவும், தொண்டைமண்டல முதலியார்களெனவும் தம்மைச் சொல்லிக்கொள்ளும் ஒரு சில இனத்தவர்களின் ஆட்சியில் மட்டும் இவ்வாதீனங்கள் கட்டுப்பட்டடங்கியது இற்றைக்கு ஒரு நூற்றுண்டுக்கு உட்பட்ட நிகழ்ச்சியே யென்பதும் ஆகிய வுண்மைகளை ஆராய்ச்சியாளர் அறிந்து வெளியிடுங்காலம் மிகச் சேய்மையதன்று என்பதனைக் குலநலம் பேசுவோர் உணர்தல் வேண்டும்.

இப்போது தருமையாதீனத்தின் அருட்டலைமை நடாத்தும் பரமாச்சாரிய சுவாமிகளின் பத்தாம் யாண்டு ஆட்சிமலரில் தருமையாதீன அடியார்களின் வரலாறெழுதிய தம்பிரான் சுவாமிகள் ஒருவர் படிக்காசுப் புலவர் செங்குந்த மரபினரே யென்பதனைத் தாம் முன்னர் அறிந்தவராயினும் "பதினேழாம் நூற்றுண்டுப் புலவர்" என்னும் உரைநடை நூலால் தம்மனம் குழம்பப்பெற்று, அந்நூலிலெழுதியபடி படிக்காசர் தொண்டைமண்டல முதலியாரே எனச் சொல்லத் துணிவுபெருமலும், பழைய மரபின்படி படிக்காசர் செங்குந்தரே யெனக் குறிப்பிடும் விருப்பமின்றியும் படிக்காசர் மரபினை "ஓர் உயர் சைவக்குடி" எனப் பொதுப்பட எழுதியுள்ளார்கள். தம்மாதீனத்து மற்றைய அடியார்களின் குலம்விளங்கப் பெற்றவர்கட்கெல்லாம் இவர் கார்காத்த வேளாளர், இவர் தொண்டைமண்டல முதலியார் என்றுங்குக் குறிப்பிட்டெழுதிய அத் தம்பிரான் சுவாமிகள் தெளிவாகச் செங்குந்தரெனத் தெரிந்த படிக்காசர் மரபினை மட்டும் "ஓர் உயர் சைவக்குடி"யெனப் பொதுப்படக்கூறி மறைத்துப் பேசுதல் திருவருள் நிலையமாகிய தம்மாதீனத்தின் துறவுநிலை உண்மை யொழுக்கிற்கும், வரலாற்று மரபிற்கும் ஒரு சிறிதும் ஏலாத செயலாம்.

உண்மை யுயர்வும் பொறுப்புமுடைய தருமையா தீனத்தி லிருந்துவரும் வெளியீடுகளில் இத்தகைய பிழைபாடுகள் இனியும் நேராது பார்த்தருளும் வண்ணம் தருமையாதீனத்தின் பரமாசாரிய சுவாமிகளைப் பணிந்து வேண்டுகின்றேன். யான் இத்துணையும் படிக்காசர் மரபுபற்றி எழுதியது எனது குலப் பற்றுலன்று. தமிழ கத்துப் பல குலப் பிரிவினராகிய மக்களுக்குள்ள குடிச் சிறப்பினை வெளிப்படுத்துங்கால் உண்மை வரலாற்றோடு மாறுபடா வண்ணம் தெரிவித்துக் கொள்ளுதலே பல பிரிவினராகச் சிதைந்து தாழ்ந்த தமிழ்க்குலத்தார் ஒன்றுகூடி உரிமையடைதற்குரிய வழியாமெனத் தெரிவித்தற்கெழுந்த விருப்பத்தினாலேயாம்.

---

## சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம்.

யானும், திருக்கூட்டமும் வண்ணக் களஞ்சியம், காஞ்சி உயர் திரு. நாகலிங்க முனிவரவர்களது 80 - ஆம் ஆண்டு நிறைவு விழா வில் கலந்துகொள்ள நேர்ந்தது இறைவன் அருள். லௌகிக, பார மார்த்திக, நிலைகளில் திருக்கூட்ட முன்னேற்றத்திற்கு முதல் முதல் கால் விழா கோலினவர் இவர். இவர்களது நற்குண, நற்செய்கைகள் பலவுள. பலதிறத்தன. விரிவஞ்சி விடுத்தனம். எடுத்துக் காட்டாக அவர்களது அன்பளிப்பாகிய "மெய்கண்ட சாத்திரம்" இன்னும் என் னிடம் பூரணச் சந்திரன்போல் பொலிவுற்று விளங்குகிறது. இதனது விளைவே திருக்கூட்டத்தின் 44-வது ஆண்டில் திருக்கூட்டத்தின் சார்பில் திரு. இளவழகனா ரவர்களால் சிவஞானபோத விரிவுரைகள், சீராக, 8-மாதம் தொடர்ந்து நடந்து, சிறப்பு விழா கண்டது.

இத்தகைய அன்பின் திருவுருவுக்கு ஆண்டவன் நீடித்த ஆயுளைத் தந்து, தமிழ்நாடு, பண்டைய நிலைக்குப் பண்புற கருணை பாலிக்கு மாறு ஆசையுடையனாகிய,

ந. வே. அப்பாதுரை.

# அழகை வெறுத்த அழகி

வ. பா. தாமரைக்கண்ணி அம்மையார்.

"அப்படிச் சொல்லு. இப்போதுதான் தெரிந்தது, கணவன் இந்தப் பெண்ணைக் கைவிட்டதன் காரணம். இதோ, பார்க்கும் போதே தெரிகிறதே. இவ்வளவு அவலட்சணமாயிருந்தால் யார்தான் இப்பெண்ணுடன் கூடி வாழமுடியும்?"

"அதுதான் சரி. நான் சொல்வதை மறந்துவிடாதே. உண்மையில் நடந்தது இதுதான். இந்த அம்மாள் சுத்த விகாரம். இவர் கணவன் எப்போது இவரைவிட்டு நீங்கிவிடலாம் என்று காத்துக்கொண்டிருந்தான். ஒருநாள் அவனுக்கு இரண்டு மாம் பழங்கள் கிடைத்தன. அவைகளை வீட்டுக்கு அனுப்பிவைத்தான். இந்த அம்மாள் அவைகளை வாங்கிவைத்தார். ஒரு சிவனடியார் பசியோடு வந்தார். அவருக்கு ஒரு பழம் வைத்துச் சாப்பாடு போட்டு அனுப்பினார். பின்னால் கணவன் வந்தான். மிகுந்திருந்த ஒரு பழத்தை வைத்து அவனுக்கு அன்னம் படைத்தார். பழம் சுவையாயிருந்தது கண்டு, அவன் 'இன்னொரு பழத்தையும் கொண்டுவா' என்றான். அதைத்தான் அவர் முன்பே ஒரு சிவனடியாருக்குப் படைத்துவிட்டாரே. ஒன்றும் தெரியாமல் விழித்தார். கணவனுக்குச் சந்தேகம் பிறந்தது. அதோடு, முன்பிருந்து அவன் காத்திருந்த சமயமும் வந்துவிட்டது. இதைச் சாக்கிட்டுக்கொண்டு, அவன் இந்த அம்மாளை விட்டு நீங்கி, வேற்றூருக்குப் போய், மற்றொரு பெண்ணை மணம் செய்துகொண்டான். வேறு வழியில்லாமல், இந்த அம்மாள் சாமியாராய்ப் போய்விட்டார்."

"உண்மை இவ்வாறிருக்க, ஜனங்கள் எப்படியெப்படியெல்லாம் பேசிக்கொள்கிறார்கள்! இந்த அம்மாள் 62 பிள்ளைகளைப் பெற்று விட்டு, ஒரு பெண்ணுக்காகக் கடவுளை வேண்டித் தவங் கிடக்கிறார்களாம். ஒருத்தி எங்கேயாவது 62 பிள்ளைகள் பெற முடியுமா? ......உம்ம்ம்......சொல்கிறவர்கள் சொன்னாலும் கேட்பாருக்கு மதியில்லையா?......"

*　　　*　　　*

திருமயிலைக் கபாலீச்சரத்தில் சில ஆண்டுகட்குமுன்பு நடந்த பங்குனிப் பெருவிழாவின்போது 8-ம் நாளன்று அறுபத்துமூவர் ஊர்வலத்தைக் காண்பதற்கு வடக்கு மாடவீதியில் என் தோழியொருத்தியின் வீட்டு முகப்பில் நான் நின்றுகொண்டிருந்தபோது, இரண்டு பேதையருக்குள் - தப்பு, தப்பு, இரண்டு வடிகட்டின பேதையருக்குள் - நிகழ்ந்த சொல்லாடல் தான் மேலே கண்டிருப்பது.

'பேதையர்' என்றதும், தமிழ்நூல் மரபுப்படி பெண்கள் என்று நினைத்துவிடக்கூடாது. தமிழ்ப் புலவர்கள்தான் கொஞ்சங்கூட இரக்கமில்லாமல் பெண்களையெல்லாம் ஒரேயடியாய்ப் பேதையர்களாக்கிவிட்டாலும், பெண்களாகிய எங்களுக்கு ஆடவர்மீது அத்துணை வன்மம் கிடையாது. அச்சொல்லுக்கு முற்றிலும் இலக்காயிருந்த இரண்டு ஆடவரைத்தான் மேலே பேதையரென்று குறிப்பிட்டேன்.

மேற்படி சொல்லாடலைக் கேட்டதும், 'சிவசிவ' என்று காதைப் பொத்திக்கொண்டேன். எங்கள் காரைக்கால் பெண் தெய்வத்தையல்லவா அம்மூடன் குரூபி என்று சொன்னான்? பொங்கிய பேரழகு மிகும் புனிதவதியாரையல்லவா அக்கயவன் அவ்லட்சணம் என்று பிதற்றினான்? இச் சொல்லாடலை நான் இங்கே எழுதியதற்காகவும் சைவசிலர்கள் என்மேல் சீற்றங் கொள்ளக்கூடும். ஆம், ஒப்புக்கொள்கிறேன். ஆனால், சீற்றங்கொண்டு என்ன பயன்? நான் உட்பட சைவமக்களும் சைவ நிலையங்களும் சைவ மடங்களும் எத்துணை 'அழகாக' தங்கள் சமயப்பணியை ஆற்றுகிறார்கள் என்பதற்கு மேற்படி சொல்லாடல் ஒரு தக்க சான்றாகும்.

மேற்சொன்ன இரண்டு பேதையருள், முதலாவதாகப் பேசியவன் பெரிய புராணக் கதையையே அறியாதவன். இரண்டாவதாகப் பேசியவன் அக்கதையைக் கொஞ்சம் அறிந்தவன்.

வெளியூர்களில் எப்படியோ, எனக்குத் தெரியாது. சென்னையிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் சைவர்கள் வீடுகளில் யாராகிலும் ஒரு வயதான பெண் இறந்துவிட்டால், இறுதிச்சடங்கு நடக்கும் நாளன்று காரைக்காலம்மையார் புராணப் பிரசங்கம் வைப்பது வழக்கம். அப்படிப்பட்ட வீடுகளில் ஏதோ ஒன்றில் கீழ்த்தரமான பிரசங்கி ஒருவர் தப்பும் தவறுமாகச் சொன்ன கதையை அரைகுறையாக உட்கொண்டதுதான் மேற்படி இரண்டாம் பேதையின் வாய்ப் பிதற்றலாக வெளிவந்ததென்று அன்பர்கள் தெரிந்துகொண்டிருக்கலாம்.

அதற்குப் பிறகும் திருவிழாவில் எனக்கு இருப்புக்கொள்ளவில்லை. அன்று என் உள்ளம் பட்ட பாட்டை அந்தக் கபாலி ஒருவன்தான் அறிவான். நேராக என் வீட்டுக்குத் திரும்பினேன். இரவில் உணவு செல்லவில்லை. உறக்கம் கொள்ளவில்லை. பால் கசந்தது. பழமும் புளித்தது. ஒரு குறிக்கோளில்லாமல் என் அறையைச் சுற்றி வந்தேன். மேஜைமீதிருந்த பெரியபுராணம் என் கருத்தைக் கவர்ந்தது. ஏதோ ஒரு புதையலைக் கண்டுவிட்டதுபோல் அதை ஆர்வத்துடன் எடுத்துப் பிரித்தேன். ஆ! ஈதென்ன புதுமை! காரைக்காலம்மையார் புராணந்தானா வரவேண்டும்?

காரைக்காலம்மையார் புராணத்தை இதுவரையில் ஏறக்குறைய 100 தடவை படித்திருக்கிறேனென்றால், அன்பர்கள் அதைத் தற்புகழ்ச்சியாக நினைத்துவிடக்கூடாதென்று தாள் வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். அப்புகழெல்லாம், பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டக் கவிபாடவல்ல சேக்கிழார் பெருமானையே சாரும். பல பெரியார்கள் அம்மையார் பெருமையை விரித்துரைக்கக் கேட்டிருக்கிறேன். ஆனால், அன்று அப்பேதை சொன்ன சுடுசொல் நெஞ்சைத் தைக்க, அதனால் உண்டான சுரவேகத்துடன் அம்மையார் வரலாற்றைப் படித்தேன். வியப்பினும் வியப்பு! அன்றுதான் முதன் முறை படிப்பது போலிருந்தது! என்னவெல்லாமோ புதுப்புதுக் கருத்துக்கள் தோன்றின. மேற்சொன்ன பேதையர்களுக்குப் பதில் சொல்வது போலிருந்தன, சேக்கிழாரது ஆணித்தரமான பாட்டுகள். வியப்பு, புதுமை, மகிழ்ச்சி, இன்பம், இறும்பூது, இறுமாப்பு-இன்னோரன்ன உணர்ச்சிகள் என் உள்ளத்தில் புகுந்து முதன்மைபெறப் போராடின. அவ்வுணர்ச்சிகளை அன்பர்களோடு சிறிதளவாவது பங்கிட்டுக் கொள்ளலாமென்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

அம்மையார் வரலாற்றைப் பெரிய புராணத்தில் அன்று படித்த பிறகுதான், அம்மையாரைப்பற்றிய மேற்படி தப்பெண்ணம் தமிழ் நாட்டில் இன்று நேற்று முளைத்ததல்ல; பல நூற்றாண்டுகளாகவே பரவி வந்திருக்கிறது என்னும் உண்மை எனக்குப் புலப்பட்டது. திருத்தொண்டர் புராணம் பெருவழக்காக இருக்கும் இக்காலத்திலேயே அத் தப்பெண்ணம் நீங்கவில்லையென்றால், அது எழுதப்படுவதற்கு முன்பு மக்கள் அம்மையாரைப்பற்றி என்ன நினைத்திருப்பார்கள்? அம்மையாரைக் குறித்து அக்காலத்தில் மக்கள் தெரிந்து கொள்வதற்கு நான்கு சாதனங்கள் இருந்தனவென்று ஒருவாறு கூறலாம்; அவையாவன :—

முதலாவதாக, சுந்தரமூர்த்தி நாயனாரின் திருத்தொண்டத் தொகையில், " பேயார்க்கும் அடியேன் " என்னும் சொற்றொடர்;

இரண்டாவதாக, நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியில் வரும் அடியிற்கண்ட பாட்டு:—

" நம்பன் திருமலை நான்மிதியேன் " என்று தாள் இரண்டும்
உம்பர்மிசைத் தலையால் நடந்தேற, உமை நகலும்,
செம்பொன் உருவன் " என் அம்மை " எனப்பெற்றவள்; செழுந்தேன்
கொம்பினுகு காரைக்காலினின்மேய குலதனமே.

மூன்றாவதாக, அம்மையார் அருளிச்செய்த நூல்களில், 'காரைக்கால் பேய்', பெண்பேய்' என்று தம்மையே குறித்துக்கொண்டிருப்பது.

இவற்றுள், மேலே 2-வது சாதனத்தில், அம்மையார் அழகுள்ளவரென்றோ அழகில்லாதவரென்றோ வெளிப்படையாக ஒரு குறிப்பும் இல்லை. ஆகவே, அதன்மீது நாம் கருத்துச் செலுத்தவேண்டா.

முதலாவது, மூன்றாவது சாதனங்களிலிருந்து, அம்மையார் பேய் வடிவமுள்ளவரென்றே அக்காலத்து மக்கள் தீர்மானித்திருக்கக் கூடும்.

நான்காவதாக, அக்காலத்தில் அம்மையாரது திருவுருவம் கோயில்களில் வைக்கப்பட்டிருந்தால், இக்காலத்திலிருப்பதுபோலவே, அவரது உலக வாழ்வின் இறுதி நிலையாகிய பேய் வடிவமாகத்தான் வைக்கப்பட்டிருக்க வேண்டும். இதைக்கண்ட அக்கால மக்கள் அம்மையாரைப்பற்றி என்ன நினைத்திருப்பார்களென்று சொல்ல வேண்டியதில்லை.

இத்தகைய காரணங்களினால், அம்மையார் தாம் வேண்டிப் பெற்ற பேய் வடிவத்தைத்தான் அக்காலத்தவர் கண்டார்களே யன்றி, அதற்குமுன் அவர் வரலாற்றையும் உருவத்தையும் அறிந்தார்களில்லை. ஆகவே, அவர் அழகில்லாதவரென்று தீர்மானித்து, அதற்கேற்ப, நான் இக்கட்டுரையின் தொடக்கத்தில் காட்டியவாறு, கதைகளைக் கட்டி விட்டார்களென்பதில் வியப்பில்லையல்லவா? இப்படிப்பட்ட சில அவச்சொற்கள் சேக்கிழார் பெருமானின் திருச் செவிகளில் விழுந்தன. அவர் நெஞ்சம் பிளந்தே போய்விட்டது. சேக்கிழார் நாயனார், சிவபெருமானுக்கு ஓர் இழுக்கு கூறப்பட்டால் அதை ஒருவேளை பொறுத்துக்கொண்டிருந்தாலும் இருப்பார். ஆண் அடியவர்கள்மேல் பழி சுமத்தப்பட்டால், அதை ஒருக்கால் பொருட் படுத்தாமலும் இருப்பார். ஆனால், ஒரு பெண்ணடியவருக்கு ஒரு மாசு கற்பிக்கப்பட்டால், அவர் குருதி பொங்கும்; ஒருகணமேனும் அதைத் தரிக்கமாட்டார்.

அன்பர்களே, கடல்போல் பரந்துள்ள தமிழிலக்கியத்தில் ஓரேவொரு புலவர் பெண்குலத்துக்கு உயர்வு கொடுத்தாரென்றால், அவ்வொரு புலவர் சேக்கிழார், சேக்கிழார், சேக்கிழார், என்று சிறிதும் அச்சமின்றி, கொஞ்சமும் தங்கு தடையின்றி உறுதி கூறலாம். மற்றப் புலவர்கள் வேறு துறைகளில் சிறந்திருக்கலாம். அவர்களில் சிலர் பெண் குலத்தை வேண்டுமென்றே பழித்து, நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும்பழி பூண்டார்கள். மற்றுஞ் சிலர், பெண்களை உயர்த்திக் கூறுவதாக நினைத்துக்கொண்டு, அதில் வெற்றிபெறாமல் இடர்க்கடலில் வீழ்ந்தார்கள்.

மங்கையர்க்கரசியார், திலகவதியார், பரவையார், சங்கிலியார் முதலியவர்களையும் மற்றுமுள்ள நாயன்மார்களின் மனைவிமார்களைப் பற்றியும் சேக்கிழார் எத்துணை மரியாதையாகவும் பயபக்தியுடனும்

பேசுகிறாரென்பது, பெரிய புராணத்தை மேற் போக்காகப் படிப் பவர்களுக்குக் கூட விளங்கும். பெண்ணடியவர்களைக் குறிப்பிடும் போது வாய்கூசாமல் 'அவள்' 'இவள்' என்று ஒரு முறையாவது அவர் சொன்னது கிடையாது.

இத்தகைய உயர்நலப் பண்புவாய்ந்த சேக்கிழார் காரைக்கா லம்மையார் புராணத்தை எழுதத் தொடங்கினார். அப்போது அவர் உள்ளத்தில் முதன்மை பெற்றிருந்த எண்ணங்கள் இரண்டு:— (1) அம்மையார் பேரழகி; பரமதத்தன் அவரைவிட்டு நீங்கினமை அவர் அழகிற் குறைந்தவரா யிருந்தாரென்னுங் காரணத்தாலன்று என்பதை நிலைநாட்டுவது. (2) அம்மையார் கற்புக்கடம்பூண்ட பத்தி னிப் பெண்; அவர் மனையறம் பிழைத்தாரென்னுங் காரணத்தால் அவன் அவரைவிட்டு நீங்கவில்லை யென்பதை எண்பிப்பது. இனி சேக்கிழாரைத் தொடர்ந்து செல்வோம்.

திருத்தொண்டர் புராணத்திலே, காரைக்காலம்மையார்புராணத் துக்கு முன்புள்ளது பெருமிழலைக்குறும்ப நாயனார் புராணமாகும். வழக்கப்படியே சேக்கிழார் பெருமான் பெருமிழலைக் குறும்பர் புரா ணத்தின் இறுதிப் பாட்டின் பின் இரண்டடிகளில் காரைக்காலம்மை யாரைத் தோற்றுவாய் செய்கிறார். அம்மையாருடைய பெருமை யைப் பேசப்போகிறோமென்னும் நினைப்பே அவரைப் பரவசமடை யச்செய்கிறது. அப்பரவசத்தை இரண்டடிகளில் நன்கு காணலாம். தாம் காட்டப்போகும் அழகியைக் காண்பதற்கு நம்மை இப்போதே சித்தப்படுத்தி விடுகிறார். தமது சௌந்தர்ய தேவதையை நாம் நேரில் கண்டு கண் கூசுவோமோ என்று இரங்கி, தக்க பின்னணி (back ground) ஒன்றை நமக்கு முன்னதாக எழுதிக் காட்டுகிறார். அவர் சொல்வதன் கருத்து இதுதான்: "என் அம்மையைக் காண் பது இருக்கட்டும். அதைப் பின்னால் வைத்துக்கொள்வோம். இப் போது அவர் பிறந்த காரைக்காலைக் காட்டுகிறேன் வாருங்கள். அவ் வூரிலுள்ள உயிரற்ற மரக்கொம்புகள்கூட இன்பத் தேன் பிலுற்று கின்றனவென்று என் வழி நூலாசிரியராகிய நம்பியாண்டார் நம்பி சொல்லுகிறார். அப்படியானால் அவ்வூர் உயிர்ப் பொருள்களைப் பற்றிக் கேட்கவேண்டுமா? அவ்வூர்ப் பெண்களைப் பாருங்கள். அவர்களுடைய மென்சாயலைக்கண்டு வெட்கி மயில்தோற்று ஓடிவிட் டது. அம்மகளிருடைய மழலைக் கிளவிக்கு யாழும் குயிலும் நட்பாக மாட்டா. இத்தகைய மங்கையர்க்கு அரசியாய் எங்கள் புனிதவதி பிறந்தார். அவர்பெருமையை இப்போது கூறப்போகிறேன்." இக் கருத்தைச் சேக்கிழார் வாக்காலேயே கேட்பது பேரின்பம் பயப்ப தாகும்.

"மயிலைப் புறங்கொள் மென்சாயல் மகளிர்கிளவி யாழினொடும்
குயிலைப் பொருவும் காரைக்கால் அம்மை பெருமை கூறுவாம்".

இனி, அம்மையார் புராணத்துக் குள்ளேயே நுழைவோம்.

அம்மையாரைப் பற்றிய முதற்குறிப்பு 2-வது பாட்டிலேயே வருகிறது. அது அவர் இவ்வுலகில் பிறந்தா ரென்பதைப் பற்றியதாகும். குழந்தைகள் சாதாரணமாகப் பிறந்த அன்று எல்லாம் ஒரே விதமாகத்தான் இருக்கும். அப்போது அவைகளை அழகுடையன என்று சொல்லிவிட முடியாது. மேலும், ஒரு குழந்தை பிறந்த அன்று, அது பிற்காலத்தில் பேரழகுடையதாய் விளங்கும் என்றும் பெரும்பாலும் சொல்லிவிட முடியாது. ஆனால், சேக்கிழார் இவ்விதிகளை யெல்லாம் காரைக்காலம்மையார் விஷயத்தில் ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. அழகும் புனிதவதியாரும் ஒன்றாகப் பிறந்தார்க ளென்று நாம் ஒப்புக்கொள்ள வேண்டுமாம். அவர் சொல்வதைக் கேளுங்கள்.

"......திருமடந்தை அவதரித்தா லெனவந்து
பொங்கிய பேரழகுமிகப் புனிதவதியார் பிறந்தார்."

சேக்கிழார் இதோடு நிற்கவில்லை. தமது கருத்து இதுவென்பதை ஒளிவு மறைவின்றி வெளிப்படுத்தி விடுகிறார். தமது அழகுத் தேவதையை அவர் காட்டும் அழகை 4-வது பாட்டில் பாருங்கள்:

"அழகின் கொழுந் தெழுவதென வளர்வார்".

சரி; இனிமேல் சேக்கிழாரோடு நம்மால் போகமுடியாது. அவர் ஓர் அழகியின் கதையை அழகாக எழுதக் கங்கணங் கட்டிக்கொண்டார். அவர் கூறும் ஒவ்வொரு அழகுக் குறிப்புக்கும் நான் விளக்கங் கூறுவதென்றால், இக்கட்டுரை மிகவும் விரிந்துவிடுமென்று அஞ்சுகிறேன். ஆகவே, அக்குறிப்புகளை மட்டும் எழுதி, அவற்றுள் ஒவ்வொன்றும் வரும் பாட்டின் இலக்கத்தை அதன் எதிரே வளைவுக் குறிகளுக்குள் தருவேன்:

"நல்ல என உறுப்பு நூலவர் உரைக்கு நலநிரம்பி
மல்குபெரு வனப்புமீக் கூரவரு மாட்சியினால்" (6)
"சேயிழை" (7)
"பைந்தொடி" (8)
"தளிரடி மென்னகை மயில்" (11)
"அரும்புதல்வி" (12)
"பூங்குழலார்" (14)
"மணமலியு மலர்க்கூந்தல் மாதரார் (17)
"வெறிமலர்மேல் திருவனையார்" (19)
"பூப்பயில் மென்குழல் மடவார்" (21)
"நறுங்கூந்தல் அன்னமனையார்" (23)
"தாழ்குழலார்" (25)
"பெய்வளையார்" (26)
"மொய்தரு பூங்குழல் மடவார்" (28)

"வாசமலர்த் திருவனையார்" (29)
"அணிகுழலவர்" (31)
"நறுமென்கூந்தல் அணங்கனார்" (36)
"இளரொளி மணிக்கொம்பன்னார்" (40)
"மடநடை மயிலன்னார்" (42)
"தாமரைத் தவிசில் வைகும் தனித்திரு" (42]
"மொய்குழலவர்" (44)
"மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார்" (45)
"காமர் பூங்கொடியனார்" (46)
"மன்றலங் குழலினார்" (48)

அன்பர்காள், சேக்கிழார் காட்டும் அழகுத் தெய்வத்தைப் பார்த்தீர்களா! இவரும் ஒரு பெண்ணைத்தான் வருணிக்கிறார். மற்றப் புலவர்களும் பெண்களை வருணிக்கிறார்கள். நவீன நாவலாசிரியர்களும் எழுத்தாளர்களுங் கூடப் பெண்களை வருணிக்கிறார்கள். மாதர்களின் உடலழகை வெறுப்புணர்ச்சி தோன்றாமல் எழுதிக் காட்ட முடியாதென்று கருதும் அப்புலவர்களும் நாவலாசிரியர்களும் எழுத்தாளர்களும் எங்கள் சேக்கிழார் பெருமானுக்கு—அண்மையி லில்லாது போனால் போகட்டும்—சேய்மையில்தான் நிற்க முடியுமா என்று கேட்கிறேன்.

இங்கே ஒரு புதுமையை நேயர்கள் கவனிக்கவேண்டும். அம்மையாரது பிள்ளைத் திருநாமம் புனிதவதியார் என்பது. அவரைப்பற்றிய முதல் குறிப்பு வரும் 2-வது பாட்டில்தான் அப்பெயர் சொல்லப் படுகிறது. அதற்குப் பிறகு இப்புராணத்தில் 94 பாடல்கள் வருகின்றன. அவைகளில் ஒன்றிலாவது இப்பெயர் வரவேண்டுமே!...... ஊ ஊ-ம்......கிடையவே கிடையாது. இது வியப்பாக இல்லையா? ஒரு கதைத் தலைவியின் பெயர் அக்கதையில் ஒரு முறைதானா வர வேண்டும்!

ஊன்றிப்பார்த்தால், இதில் ஒரு வியப்பும் இல்லை. சேக்கிழார் ஓர் அழகியின் கதையை எழுத முனைந்திருக்கிறார். அவளைப்பற்றிப் பேசும்போதெல்லாம், அவர் பெயராகிய 'புனிதவதி' என்னும் சொல்லைப் பெய்துரைத்துவிட்டால், அவள், அழகுடையவளா யிருத்தலைக் குறிப்பது யாங்ஙனம்? அதனால் அவர் நோக்கம் நிறைவேறாமற் போய்விடுமல்லவா!? ஆகவேதான், அம்மையார் பெயரை இன்றியமையாமை கருதி முதன்முறை சொல்லிவிட்டு, மற்ற மற்ற இடங்களை வனப்பைக் குறிப்பிடும் சொற்றொடர்களை வழங்குவதற்காக வைத்துக்கொண்டார்.

"ஓ இதெல்லாம் உமது சொந்தக்கற்பனை. இது ஏதோ புதுமையாகத்தான் இருக்கிறது. இருந்தாலும், சேக்கிழார் இப்படியெல்லாம் நினைத்திருக்கமாட்டார். அம்மையார் திருப்பெயரை மீண்டும் மீண்டும் பெய்துரைக்க வேண்டுமென்னும் அவசியமே அவருக்குத்

தோன்றுதிருக்கலாம். அவ்வளவுதான். அவருடைய போக்குக்கு நீர் கூறும் காரணம் சாலாது'' என்று நீங்கள் சொல்லலாம்.'

சரி, ஒப்புக்கொள்கிறேன். சேக்கிழார் ஏறக்குறைய இதேமாதிரி கதை நடத்தும் மற்றோரிடத்தைக் காட்டிவிடுகிறேன். பிறகு எப்படி வேண்டுமானாலும் நிர்மானித்துக் கொள்ளுங்கள்.

திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில், அவர் தமக்கையாராகிய திலகவதியாரைப்பற்றிய பிரஸ்தாபம் முதன்முதல் 17-வது பாட்டில் வருகிறது. அதுவும் அவர் இவ்வுலகிற் பிறந்ததைத்தான் குறிப்பிடு கிறது. சேக்கிழார் கூறுவதைக் கேளுங்கள்.

> "நிகழுமலர்ச் செங்கமல நிறையிதழின் அகவயினில்
> திகழவரும் திருவனைய திலகவதியார் பிறந்தார்."

இதற்கும் புனிதவதியார் பிறந்ததைப் பற்றிக்கூறும்,

> "......திருமடந்தை அவதரித்தா லெனவந்து
> பொங்கிய பேரழகுமிகப் புனிதவதியார் பிறந்தார்."

என்பதற்கும் உள்ள நெருங்கிய ஒற்றுமையை நேயர்கள் கவனிக்க வேண்டும்.

மேலே சொல்வோம். கடைசியாகத் திலகவதியாரைச் சேக்கிழார் 68-வது பாட்டில் காட்டுகிறார். திருவதிகையிலே, திருவலகும் திருமெழுக்கும் தோண்டியுங்கொண்ட தவக்கோலத்துடன் திலகவதியாரை நமக்குக் காட்டிவிட்டு, அவரிடமிருந்து தாம் விடைபெற்றுக் கொள்வது மல்லாமல், நம்மையும் ஒரே யடியாய் விடைபெற்றுக்கொள்ளும்படிச் செய்கிறார். இப்புராணத்தில் மொத்தத்திலுள்ள 429 பாடல்களில் பிறகு ஒரு தடவையாவது நாம் திலகவதியாரைச் சந்திப்பதில்லை.

மேற்படி 17-வது பாட்டுக்கும் 68-வது பாட்டுக்கும் இடையில் ஆகக்கூடி 23 தடவை திலகவதியாரைப்பற்றிய பிரஸ்தாபம் வருகிறது. இவற்றில் 8 இடங்களில்தான் சேக்கிழார் திலகவதியாரை — பைந்தொடி, கன்னி, மடவார், தூண்டுதவ விளக்கனையார், மன்னு தபோதனியார், அருந்தவத்தார், தபோதனியார், மாதவம்செய் சிறடியார்—ஆகிய இந்த வேறு சொற்றொடர்களால் குறிப்பிடுகிறார். எஞ்சிய 15 இடங்களிலும் 'திலகவதியார்' என்றே குறிப்பிடுகிறார். 'திலகவதியார்' என்னும் சொல்லைப் பெய்துரைத்த சேக்கிழாருக்குப் 'புனிதவதியார்' என்னும் சொல்லைப் பெய்து பாட்டமைக்க முடியாமற் போயிற்று என்று சொல்லி உங்கள் வாயை மாசுபடுத்திக் கொள்வீர்களென்று நான் நினைக்கவில்லை.

"ஒருவேளை புனிதவதியாரைப்போல் திலகவதியார் அழகியாயிராதிருந்திருக்கலாம். 'திலகவதியார்' என்னும் பெயருக்குப் பதிலாக

வரும் மேற்காட்டிய வேறு சொற்றொடர்களிலும் திலகவதியாரின் அழகு மிகவும் வலியுறுத்தப்படாமல், அவர் தவவொழுக்கமே அதிகம் வற்புறுத்தப்படுவது காண்க. ஆகவே, சேக்கிழார் திலகவதியார் என்னும் பெயரை மீண்டும் மீண்டும் பெய்துரைத்தார்'' என்று நேயர்கள் சொல்லலாம்.

அப்படியும் சொல்வதற்கில்லை. திலகவதியாரைக் காட்டும் முதல் பாட்டிலேயே அவர் பேரழகு பேசப்பட்டமையை முன்பு எடுத்துக் காட்டி யிருக்கிறேன். மற்றும், "அணங்கனைய திலகவதியார்'' (24) "பைந்தொடி'' (24) "செம்மலர்மேல் திருவனைய திலகவதியார்'' (31) என்றெல்லாம் சேக்கிழாரே திலகவதியாரின் அழகை ஒப்புக்கொண் டிருத்தல் காண்க.

அப்படியானால் இரண்டு பேரழகிகளின் வரலாற்றை எழுதவந்த சேக்கிழார் இவ்வேறுபாட்டைச் செய்வானேன்? இன்னுமா உங்களுக்குக் காரணத்தை விளக்கவேண்டும்? பெரியபுராணம் எழுதப் படுவதற்கு முன் திலகவதியாரைப்பற்றி ஒரு சிலருக்குத் தவிர மற்றவர்களுக்குத் தெரியவே தெரியாது. என்னை? அவர் 63 நாயன்மார்களுள் ஒருவர் அல்ல ஆகலான் என்க. சுந்தரரின் திருத்தொண்டத் தொகையிலும் நம்பியாண்டாரின் திருத்தொண்டர் திருவந்தாதியிலும் அவர் பேசப்படவுமில்லை. அவரைப்பற்றி அப்படித் தெரிந்திருந்த ஒரு சிலருள்ளும், அவர் அழகியா அழகியல்லவா என்னும் கேள்வி எழவில்லை.

ஆனால், காரைக்காலம்மையார் விஷயம்வேறு. அவர் அறுபத்து மூவரில் ஒருவர். 'பெண்பேய்', 'காரைக்கால்பேய்' என்று தம்மையே குறிப்பிட்டுக்கொண் டிருக்கிறார். சுந்தரரால் 'பேயார்' என்று பேசப் படுகிறார். கோயில்களில் அவர் உருவம் பேய்வடிவமாகவே வைக்கப் பட்டிருக்கக்கூடும். அவர் பேய் வடிவங்கொண்டது தம் உலக வாழ்வின் இறுதியிலாகும். இதைமட்டும் கண்டு, அவரது முன்வரலாற்றை அறியாத அக்காலத்துப் பாமரமக்கள், அவர் அழகில்லாதவரென்று தீர்மானித்து அதற்கேற்பப் பொய்க் கதைகள் கட்டிவிட்டார்கள். இதை மறுத்துரைக்கத் திருவுளங் கொண்டார் சேக்கிழார் பெருமான். அவர் தமது முயற்சியில் முழுவெற்றி யடைந்தாரென்று நான் சொல்லவும் வேண்டுமா?

பின் ஏன் பரமதத்தன் அம்மையாரைத் துறந்து சென்றான்? அவர் மனையறம் பிழைத்தது காரணமாக இருக்குமா? இப்படிச் சொல்பவர்கள் நா புழுத்துப்போகும். "பாங்கில்வரு மனையறத்தின் பண்பு வழாமைப் பயில்வார்'' (14), "கற்புடைய மடவாரும் கடப்பாட்டி லூட்டுவார்'' (22), "கைவரு கற்புடை நெறியார் கணவனுரை காவாமை மெய்வழியன்று என விளம்பல் விடமாட்டார்'' (27), "செய்தபடி சொல்லுவதே கடனென்னும் சீலத்தார்'' (28),

என வரூஉம் சேக்கிழார் திருவாக்குகளால் நமது புனிதவதியார் கற்புக்கடம் பூண்ட பொற்புடைப் பத்தினி யென்பது தெள்ளிதின் விளங்கும். பரமதத்தன் தம்மைப் பிரிந்து, பாண்டிநாட்டுக்குச் சென்று, அங்கு வேறோர் பெண்ணை மணந்து வாழ்ந்தபோதும், இப்பால் நமது அன்னையார் காரைக்காலில் "மன்னிய கற்பினோடு மனையறம் புரிந்து வைகிறார்" (39) என்று சேக்கிழார் உவகையோடு தெரிவிக்கிறார்.

கண்கவர் வனப்பும் கற்பொழுக்கமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற புனிதவதியாரைப் பரமதத்தன் விட்டுப் பிரிவதற்குப் பின் எது தான் காரணமா யிருக்கக்கூடும்? அது ஒருபெரியகதை எனினும், ஒரு வாக்கியத்தில் அதற்கு விடை யிறுத்துவிடலாம். "என்னால் அறியாப் பதம் தந்தாய், யான் அது அறியாதே கெட்டேன்" என்று மணி வாசகப் பெருமான் வருந்தியிருக்கிறு ரல்லவா? பரமதத்தன் அதற்கு இலக்கா யிருந்தான். செழுந்தேன் கொம்பின் உகும் காரைக்காலின் மேய எங்கள் குலதனத்தை வைத்துப் படைக்க வகை யறியாதவன் அவன்.

புனிதவதியார் பரமதத்தன் திருமணம் பண்டைத் தமிழ் நாட்டில் நடந்த பொருந்தா விவாகங்களுள் ஒன்றாகும். அவர் போக்கு வேறு. அவன் போக்கு வேறு. இவ்வுண்மையைச் சேக்கிழார்,

> "தளிரடி மென்னகை மயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
> களிமகிழ் சுற்றம் போற்றக் கல்யாணம் செய்தார்கள்".

என்னும் அடிகளில் மிக நுட்பமாக முன்னதாகவே நாம் உய்த்துணருமாறு செய்திருக்கிறார். எங்கேயாவது மயிலுக்கும் காளைக்கும் பொருந்துமா? காளை நுகத்தடியில் கழுத்தை விட்டுக்கொண்டு வண்டியிழுக்கவும் மண்ணைப் பெயர்க்கவும் பாரம் சுமக்கவும் பிறந்தது. அதனால் தான் அவன் அம்மையாரைவிட்டுப் பாண்டிநாட்டுக்குச் சென்றபோது அங்கு ஒரு சுமையைத் தேடிக்கொண்டான். மயில் விடுதலை விரும்பும் பறவை. அழகிய கலாபம் விரித்து ஆடப் பிறந்தது. அதற்கு வேண்டியதெல்லாம் மலை, காடு, நிழல், குளிர்ச்சி என்பனவாகும்.

புனிதவதியார் இல்லத்திலிருந்து விடுதலை பெறத் தாமாக விரும்பவில்லை. அவ் விடுதலை அவர்மேல் சுமத்தப்பட்டது. ஒரு விடுதலை அவர்மேல் சுமத்தப்படவே, மற்றொரு விடுதலையை—உடம்பாகிய சிறையிலிருந்து பெறும் விடுதலையை—அவர் தாமாகவே தேடிக்கொண்டார். ஆஹா,

> "மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பறுக்க
> லுற்றார்க்கு உடம்பு மிகை"

என்னும் பொய்யாமொழி அம்மையார் விஷயத்தில் எத்துணை அழகாய்ப் பொருந்துகிறது பாருங்கள். பறவை கூண்டிலிருந்து

தப்பித்துக்கொண்டது. கயிலை மலைக்குப் பறந்துசென்றது. அங் கிருந்து திருவாலங் காட்டுக்கு வந்தது. அங்கே ஓர் அழகன் அண்ட முற நிமிர்ந்து ஆடிக்கொண்டிருந்தான். அவன் ஆட்டத்தைக்கண்டு, ஆடும் பறவையாகிய மயிலே பிரமித்துப் போய்விட்டது. அவன் ஆட்டத்தில் தன் ஆட்டத்தை மறந்துவிட்டது. அவன் திருவடி யாகிய குளிர்ந்த நிழலின் கீழ் நின்று, அவன் ஆட்டத்திற்கேற்பத் தாளம்போட்டுப் பாட்டுபாடத் தொடங்கியது. இப்படித் தமிழர் களுக்குக் குலதனமாகக் கிடைத்தவைதாம் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகமும் திரு இரட்டைமணி மாலையும் அற்புதத் திருவந் தாதியும் என்க.

* * *

புனிதவதியார், பரமதத்தன் ஆகியவர்களின் சரிப்பட்டுவராத இல்லறவாழ்க்கையைப் பற்றியல்லவா சொல்லிக்கொண்டிருந்தேன்? ஆம், சம்பவங்கள் விரைவில் நடந்து, நிலைமையை ஒரு நெருக்கடிக் குக் கொண்டுவந்து விட்டன. தமது கணவனால் தாம் வேண்டப் படவில்லை யென்பதை அம்மையார் உணர்ந்து கொண்டார். இது காறும் அவனுக்காகத் தாங்கியிருந்த அழகுப் பொதி இனிமேல் தமக் குச் சுமை என்பதை அறிந்தார். சிவபெருமான்தான் அம்மையார் ஏவல்கேட்டு நிற்பவராயிற்றே! பெருமான் திருவடிகளைக் கருத் தொன்றி நினைத்தார். உடம்பை ஒரு உலுக்கு உலுக்கினார். வனப்பு நின்ற தசைப் பொதி பொலபொலவென்று உதிர்ந்து போயிற்று! கண்மூடிக் கண் திறப்பதற்குள் பேழகி பேயுருவம் பெற்று விட் டார்!

"வானமும் மண்ணுமெல்லாம் வணங்கு பேய்வடிவ மானார்" என்று சேக்கிழார் நிறைந்த மொழிகளால் இக்காட்சியை வருணிக் கிறார். காரைக்காலம்மையார் புராணத்தில் இக் கட்டத்துக்கு வரும் போது (புராணப் பிரசங்கங்களில் இது கற்பூரம் கொளுத்தும் கட்டம் என்பது நினைவிலிருக்க வேண்டும்), சிலர் உரோமாஞ்சலி கொள்ள வில்லை யென்றால், அவர்கள் நெஞ்சமாகிய வயிரம் பாய்ந்த மரக் கட்டை இக்காலத்து விறகுப் பஞ்சத்துக்குச் சிறிதாவது ஈடு செய்யட்டுமே!

அன்பர்களே, நமது அம்மையின் பேயுருவைக்கண்டு அஞ்ச வேண்டா. அது நமக்கெல்லாம் அருள்பாலிக்கவந்த தெய்வ உருவம். அதை வணங்குங்கள். விண்ணவரும் அதை வணங்குகிறார்கள்.

இப்போது யார்சொல்வது, அம்மையார் அவலட்சணம் என்று? அவர்கள் இங்கே வரட்டும்.

அருமைச் சகோதரர்களே! எங்கள் சிவக்கொழுந்து, அழகின் கொழுந்து. எங்கள் பெண்குலத்துப் பெருந்தனம், வனப்புமிக்க

வனிதை, எங்களை வாழ்விக்கவந்த அன்னை, சௌந்தரியத்தின்சிகரம். எங்கள் புனிதவதி, ஒப்பனையின் எல்லை. எங்கள் பத்தினிக்கடவுள், கைதேர்ந்த ரஸவாதிகளுக்கும் அகப்படாத ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கம். பேர் அழகு அவள்காலடியில் விழுந்து “ தாயே, உன்னிடம் அடைக்கலம் புகுந்ததனால் நான் பெருமை பெற்றேன். என்னைப் புறக்கணித்து விடாதே” எனக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டது. ஆனால், கணவன் கண்டுமகிழாத அழகு முதலியவைகளை யெல்லாம் எங்கள் தாய் துச்சமென்று வீசியெறிந்தாள்; தீவினை யென்ன வெறுத்து உதறினாள். பெருமைசேர் பேய் வடிவத்தை இறைவனிடம் வேண்டிப் பெற்றாள். பெண்களின் கற்பு மாண்பை உன்னிப்பாருங்கள். தான் இறந்தவுடன் தன் மனைவி அவலக் கோலம் மேற்கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கும் ஒருவன் தன் மனைவி இறந்தவுடன், அல்லது பிள்ளை பெருமை முதலிய காரணங்களால் அவளை ஒதுக்கிவைத்தவுடன், “கொண்டைக்காரி ஒழிந்தாள்; பின்னற்காரி வரப்போகிறாள்” என்னும் குதூகலத் துடன், நரை மயிருக்குக் கறுப்பு வர்ணம்பூசி, பொய்ப் பல்வரிசை கட்டிக்கொண்டு, மிடுக்காக நடப்பதுபோல் நடிக்கும் ஆடவர்களின் கூடா வொழுக்கத்தோடு பெண்களின் புனிதமான கற்பொழுக் கத்தை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டா. காரைக்காலம்மையாரின் பேய் வடிவம் தமிழ்நாட்டுப் பெண்களின் கற்பு மாண்புக்கு ஒரு மலையிலக் காக என்றும் நின்று நிலவும். அண்ட சராசரங்களுக்கெல்லாம் தாயாகிய உமாதேவியாரே புனிதவதியாரின் பேய் வடிவத்தின் பெரு மையைச் சிவபெருமானைக் கேட்டுத்தான் தெரிந்துகொள்ள வேண்டி யிருந்ததென்றால், அவ்வடிவத்தின் மாண்பை மானிடப் பெண் ணாகிய நான் என் வாயால் எப்படி அளவிட்டுச் சொல்லமுடியும்?

* * *

அம்மையாரது அற்புதத் திருவந்தாதியில் அற்புதமான ஒரு பாட்டு. கடவுள் தத்துவத்தை அறிந்துகொள்ள ஆற்றலில்லாத வர்கள் அதை இகழத்தான் செய்வார்கள் என்பது அப்பாட்டின் கருத்து. ஆனால், அப்பாட்டு அம்மையாருக்குங்கூட சாலவும் பொருந்துவதா யிருக்கிறது. ஏற்ற பெற்றிநோக்கி அதைக்கூறி இக் கட்டுரையை முடிக்கின்றேன் :

“ இவரைப் பொருளுணர மாட்டாதாரெல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர்—இவர்தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி என்பணிந்த
பேய்க்கோலம் கண்டார் பிறர்.”

# தமிழ் இசை வரலாறு

(வித்வான் மா. இராசமாணிக்கம் பிள்ளை, B. O. L., L. T)

## தோற்றுவாய்

சங்க காலத்தில் தமிழ் இசை இத்தமிழகத்திற் போற்றப்பட்டமையும், கி. பி. 7, 8, 9-ஆம் நூற்றாண்டுகளில் சமய ஆசிரியர் நால்வரால் பெரிதும் வளர்க்கப்பட்டமையும், பிற்காலச் சோழரால் கி. பி. 10 முதல் 14-ஆம் நூற்றாண்டுவரை எல்லாக் கோவில்கள் வாயிலாகப் போற்றி வளர்க்கப்பட்டமையும், கி. பி. 14 முதல் தமிழிசை மறைந்து ஒரு நாடக சங்கீதம் தோன்றி தன்னாட்சி பெற்றமையும், அன்று முதல் இவ்விருபதாம் நூற்றாண்டுவரை தமிழ் இசை மறைந்துகிடப்பத், தமிழர் செய்த நற்பேற்றின் பயனாய்த் தமிழ் நாட்டு வள்ளல் செட்டிநாட்டு ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் திடீரெனத் தோன்றித் தமிழர்தம் பழஞ் செல்வமாகிய தமிழ் இசையை உயிர்ப்பித்திருத்தலையும் விளக்கித் "தமிழ் இசை வரலாறு" என்னும் பெயர்கொண்ட ஆராய்ச்சி நூலாக எழுத வேண்டுவது தேவையாகும்.

## ஆராய்ச்சிக்குரிய மூலங்கள்

(1) சங்க காலத்தில் இசைத்தமிழ் வளர்க்கப்பட்டமை பொதுவாகச் சங்க நூல்களைக்கொண்டும் சிறப்பாகச் சிலப்பதிகாரம் கொண்டும் விளக்கமாக வரையலாம்.

(2) இரண்டாங் காலமாகிய பல்லவர் காலத்தில் இசைத்தமிழ் வளர்க்கப்பட்டமை திருமுறைகளைக் கொண்டும் பல்லவர் கல்வெட்டுகளைக் கொண்டுமே விளக்கமாக வரைதல் வேண்டும். இதன் சுருக்கத்தை யான் அண்மையில் வெளியிட்டுள்ள "பல்லவர் வரலாறு" என்னும் நூலிற்காணலாம்.

(3) மூன்றாம் காலமாகிய பிற்காலச் சோழர் காலத்தில் தமிழ் இசை வளர்க்கப்பட்ட செய்தி பெரும்பாலும் சோழர் கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் கொண்டே ஆராய்ந்து எழுதவேண்டுவதாக இருக்கிறது. இக் காலத்திற்றான் தமிழ் இசை, சங்ககாலத் தமிழ் இசை போலவும் அதனினும் மேம்பட்டும் மிளிர்ந்தது என்னலாம். இக்காலத்திற்றான் தமிழ் 'இசை அரசியர்' பலர், தமிழ் 'இசை அரசர்' பலர் இந்நாட்டில் பெருஞ் சிறப்புப் பெற்றிருந்தனர். அவர்கள் சமயத்தையும் தமிழையும் தங்கள் இருகண்கள் எனப் போற்றிய சோழப் பேரரசரால் பெருமைப்படுத்தப் பட்டனர்.

(4) பின்வந்த விசயநகர அரசர், நாய்க்கர் ஆட்சிக் காலங்களில் தமிழ் இசை மறைந்துவிட்டது. கருநாடக இசை மெல்ல மெல்லத் தமிழிசை இருந்த இடத்தைக் கவர்ந்தது.

(5) இக் கருநாடக இசை—தமிழ்ப் பாக்கள் இல்லாத பிற மொழிப் பாக்கள்—தமிழர் வாழ்வை ஏறக்குறைய 500 ஆண்டுகளாகக் கவர்ந்திருந்தது. நல்ல தமிழ்க் குடியிற் பிறந்தவரும் தமிழ்ப் புலவர்களும் 'என்று மடியும் இந்தப் பிறஇசை மோகம்!' என்று வருந்திக் கொண்டிருந்தனர். அவர்கள் வருத்தம் அகல—தமிழ் மக்கள் உள்ளம் குளிர—தமிழ் மக்கள் தம் மொழியிற் பாடப்பொருள் உணர்ந்து மகிழ—தமிழ் வள்ளல் செட்டி நாட்டரசர் அவர்கள் "தமிழ் இசை இயக்கம்" தோற்றுவித்தமை பெரிதும் பாராட்டற் பாலதும் வரவேற்கத் தக்கதுமாகும். பல எதிர்ப்புகட்கிடையே இதனை வளர்த்துவரும் அவர்களது அருந்தொண்டு தமிழர் உள்ளமாகிய செப்பேட்டில் வரையப்பெற்ற சாஸனமாகும் என்பதில் ஐயமில்லை.

### செய்ய வேண்டுவன.

தமிழ் இசையின் பல நிலைகளையும் அதன் பலதிறப்பட்ட வளர்ச்சி முறைகளையும் எளிய தமிழில் எல்லாத் தமிழ் மக்களும் நன்குணருமாறு வரைதல் வேண்டும். அந்நூல் தமிழகம் முழுவதும் பரவவேண்டும். அன்றுதான் இசைத் தமிழ்ச் சிறப்பையும், அது தங்கள் கலை என்பதையும், அதனை வளர்க்கவேண்டும் தேவையையும் தமிழ் மக்கள் நன்கு உணர்வர். இவ் வாராய்ச்சித் துறையில் சொற்பொழிவாளர் தமிழ் இசைபற்றி நாடெங்கும் பேச வேண்டும்.

தமிழ்ப் புலவர்கள் தாம் தாம் பேசும் இடங்களில் எல்லாம் தமிழ் இசை இயக்கத்தின் தேவையைத் தெளிவாக வரலாற்று (Historical) முறையில் விளக்கி, இயக்கத்தை வளர்க்க வேண்டும். தமிழ் வளர்ச்சிக்குத் தோற்றுவாயாகவுள்ள தமிழ் இசை இயக்கம் நீடு வாழ்க! அதனைத் தோற்றுவித்த வள்ளல் அவர்கட்குத் தமிழ் அன்னையின் வாழ்த்து உரியதாகுக!

---

### நேரிசை வெண்பா

நாகலிங்க னெனும் நலமார் புலவனுக்கே
ஆகுமென்ப தாண்டென் றறிஞரெலாம் — வாகுறவே
செய்யும் விழாவும் சிறப்புடனே யோங்குகவென்
றையன் அருள்வேண்டு வன்

பண்டித வித்வான் மி. பொன். இராமநாதஞ் செட்டியார்,
முத்தியாலுப்பேட்டை உயர் நிலைப்பள்ளி, சென்னை.

---

# பெருமையின் முடி எய்திய பெரியார்

S. P. V. P. வாலசுப்பிரமணியன், தேவகோட்டை.

நிலவுலகு, மற்றையுலகினும் சிறந்தது ; எல்லா நலமும் எய்து தற்குரித்தாதலின். "புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள் நாம் போக்குகின்றோம், அவமே" என விண்ணவர் கூற்றாக ஓதிய மணி வாசகமே இதற்குச் சான்று. இந்நிலவுலகினுள்ளும், உடலை மட்டும் ஓம்பும் கொள்கையில் உயரியோர் வாழ் இடம் சிறந்ததன்று. தமக் கென வாழாப் பிறர்க்குரியாளராய்த் தத்துவம் தலைநின்ற நன்மக்கள் வாழ்நிலமே நனி சிறந்தது. "எவ்வழி நல்லவராடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்ற ஔவை மூதாட்டியின் முதுமொழியை நோக்குக.

அத்தகு நன்மக்கள் வாழும் நன்னிலமாயினும் உயிர் வாழ்க் கைக்கு இன்றியமையாப் பொருள் வாய்ப்பினன்றி அவர் அறநெறி கடைபோகா. ஆதலின் பொருள் இன்றியமையாதது. "பொரு ளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்ல தில்லை பொருள்" என்றருளியது பொதுமறை. அப்பொருளினும் நனி சிறந்தது கல்வி கேள்வி. சினந்தறியாச் செம்மொழியாரும் "செவியிற் சுவை யுணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினுமென்" எனச் சினந்துரைப்பாராயின், கல்வியின் பெருமை யாமுரைப்பக் கிடந் தென் ? அக்கல்வி கேள்விகளினானே அறிவுபெறல் வேண்டும். "அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவுடையார் ஆவதறிவார்" என்று மெய்ம்மறை புகலுமாற்றானே அறிவின் திறனையுணர்க. அவ்வறிவின் பயன்றானும் அருளேயாம். "அறிவினா னாகுவதுண்டோ பிறிதினோய் தன்னோய்போற் போற்றாக்கடை" என்னும் பொய்யா மறையுணர்க. இதனானே பொருளினும் அருள் மிகச்சிறந்ததாயிற்று. "பொருளற்றார் பூப்பர் ஒருகா லருளற்றா ரற்றார் மற்றாதலரிது" என் னும் தமிழ் மறையானே, பொருளினும் அருளே கோடற்பாலதாம். அதனோடு ஒழுக்கமும் ஒக்க மேற் கோடற்பாற்று. "ஒழுக்கம் விழுப் பந்தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்னும் பழமறை யோர்ந்துணர்க. இப்பெற்றித்தாய அருளும் ஒழுக்கமும் மேற் கொண்டு ஒழுகுதல் தலையாய துறவினின்றார்க்கன்றி ஏனையோர்க்குப் பழுதின்றி இயலுவதொன்றன்று. இது குறித்தன்றே, "தலைப்பட் டார் தீரத்துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்" என மறை முழங்குகிறது.

இவ் வுண்மையனைத்தையும் இறையருளாற் கிடைத்த நுண் ணுணர்வா னன்குணர்ந்த எமது நாகலிங்க முனிவர் பெருமான்

"சொல்லிய யார்க்குமெளிய அரியவாஞ் சொல்லியவண்ணஞ் செயல்' என்ற மறைமொழியைத் தம்மாட்டு விலக்கி வைத்தனரென்று சொல்லத்தக்க நிலையில் ஒழுகி "ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் பேதையின் பேதையாரில்" என்ற மறையவர் வெறுப்பை மாற்றி மகிழ்வளித்தாரெனக் கூறின் அது வழுவாகாது.

இனி மறையைத் தம்மாட்டு விலக்கி வைத்தாரெனின் மறைக்கு மாண்பென்னை எனின்? அற்றன்று. "நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டார்க்குக் கூற்றனும் குதித்தலும் கைகூடும்" என்றமையானே ஆண்டு யார்க்கும் என்றது, நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டாரையன்றி, ஏனையோர் யார்க்குமென்பது போதாலின் மறை மாண்புடையதேயா மென்க.

இனி இளமை முதலே எண்ணினைப்பு (அட்டாவதானம்) பூவை மணவழகு (கலியாணசுந்தர) முதலியாராய பெரியோர்பால் கற்றுங் கேட்டு முணர்ந்து ஒழுகிப் பலர்க்குரைத்து, அந்நெறி நின்று மெய்ந்நெறியுணர்ந்து - காமம் வெகுளி மயக்கந் துறவு பூண்டு, அறிவு ஒழுக்கம் அருள் தாங்கி நோற்றல் தலைக்கூடிப் பெருமையின் முடிவாய் எண்பதாண்டு நிறைவுற்று இன்னும் எண்ணிலா ஆண்டு வாழும் பெரியார்க்கு இச்சிறுமையின் அடியாய்க் குற்றக் கொள்கலனுயுள்ள இச்சிறியேன் வாழ்த்துக் கூற விழைந்தேன். இச்செயல் பிறர்க்கு நகை விளைக்கும். ஆயினும் அப்பெரியாருடைய நன்றேக் கால் 20 ஆண்டுகட்கு முன்னரிருந்து நன்மையடைந்து வரும் நான் அந்நன்றி மறவாமையைக் காட்ட வேறு வழி இன்மையானும் இன்னும் அருள்பெறும் விழைவினனுனதாலும் தன்னின் மிக்கானை வாழ்த்துதல் தான் வாழ்தற்கே ஏது என்பதை "வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்" என்ற வாதவூரடிகள் வாய்மொழியான் விளங்குதலானும் வாழ்த்தலுறுகின்றேன்.

(1) சைவப் பனுவல் தமிழ்ப்பனுவ லாந்தூய
தெய்வப் பனுவலெலாந் தேர்ந்தச்சிற்—செய்தமைத்து
நுண்புலமை பூண்டே நோன்புருவ மானார்க்கிங்
கெண்பதாண் டெய்திற் றினிது.

(2) எண்பதாண் டுற்றிங் கிலகு முனிவரின்னும்
எண்ணிலாண் டிவ்வுலகி லெய்திநனி—ஒண்மை
அறிவுரைகள் தந்தெம் ஆசகற்றி நல்ல
நெறிகாட்டி நிற்க நிலை.

(3) வண்ணக் களஞ்சியமாம் மாண்புமிகு தூயவரு
ளெண்ணக் களஞ்சியமாம் இன்புருவம்—நண்ணிநனி
வாழிய நாகலிங்க மாமுனிவர் யாம்வழுத்த
ஊழிபல வாழி யுவந்து.

நம் மரபுதித்த நன்மக்கள், ஒரு நாடு அல்லது ஒரு குலம் அல்லது ஒரு குடி மேன்மையுறுவது பொருளால் அன்று, அறிவால் மட்டுமேயாம் என்பதை உலக நிகழ்ச்சியிலிருந்தே அறிகின்றோம். எடுத்துக் காட்டாக, கவி தாகூர் அவர்களது பெருமை பொருளாலானதோ, அன்றன்று; அறிவாலானதே என்பதையறியாதாரில்லை! அத்தகைய பெரியோர்களானன்றி உலகம் நன்னிலை எய்துதல் எவ்வாற்றானுமில்லை. "பண்புடையார்ப் பட்டுண்டுலகம் அதுவின்றேல், மண்புக்கு மாய்வது மன்" என்ற தமிழ்மறை இவ்வுண்மையைக் கவினுறத் தெரிவிப்பதை யோர்தல் வேண்டும்.

ஓர்ந்து நம் பெரியார் வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவரையும் அவர்போன்ற பெரியோரையும் போற்றிக் கோடல்வேண்டும். ஆதலின் இளைஞர்களே, இனி உலகநிலை எதிர்காலத்திலாவது நன்மை எய்துவதாயின் அது உங்களிடமே யுள்ளதென்பதை யோர்ந்து, பெரியோரைத் துணைக்கொண்டு அறிவு வளரப்பெற்று, உலக வாழ்க்கையில் ஒற்றுமைகொண்டு உழைத்துத் தமக்கும் பிறர்க்கும் உறுதி நாடுவீரென நம்பி அவ்வெல்லாவற்றிற்கும் தோன்றாத் துணையாயிருந்து அருள்புரியும் வள்ளி மணாளனை மனமொழி மெய்களால் நினைத்து வாழ்த்தி வணங்குகிறேன்.

## இருவகை தெரிந்து அறம் பூண்ட பெரியார்

'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்' என்றும், 'சால்பாய மும்மைத் தமிழ்' என்றும் சேக்கிழார் பெருமானாரால் புகழப்பட்ட தமிழ்மொழி வழங்கு நிலத்துக்கண் அவ்வப்போது புலவர் பலர் தோன்றினர். அவரெல்லாம் தமிழ் மொழிக்கே அன்றி, சமயாதீதப் பழம் பொருளை அடையு நெறியை ஐயப்பாடின்றி உணர்த்தவல்ல சைவ சமயத்துக்கும் சொற்பொழிவுகள் ஆற்றுவதாலும், சமய நூல்களை அச்சிட்டு வெளியிடுவதாலும் அருந்தொண்டாற்றினர்; மற்றும் 'அறிவறிந்த மக்கள்', தோன்றிற் புகழொடு தோன்றுக,' என்னும் பெருமொழிகளுக்கு எடுத்துக் காட்டாவர். அவரேபோல் தற்காலத்தே, ஒழுக்கத்து நீத்து, இருமை வகைதெரிந்து அறம்பூண்ட பெரியார் நாகலிங்க முனிவர் விளங்குகின்றனர். இப் பெரியார் பாலியாற்று மணலிற் பன்னெடுங்காலம் நோயின்றியன்ற யாக்கையொடிருந்து, மொழிக்கும் சமயத்துக்கும் வேண்டுவனவாகிய தொண்டாற்ற ஆதி பகவன் அருள்புரிவானாக!!!

வித்வான். கீ. சதாசிவன்

# புலவரும் புரவலரும்

வித்துவான். கோ. கதிர்வேலு முதலியார், தமிழாசிரியர்
மகந்து உயர்நிலைப் பள்ளிக்கூடம். வேலூர்.

புலவர் என்ற சொல்வழக்கு வானவர்க்கும் அறிஞர்க்கும் பொதுவாகும். நெடுமான் முதற் புலவர், 'தேவரனையர் புலவர்' என்ற ஆன்றோர் மொழிகளும் இதற்குச் சான்றுபகரும். இருவர்க்கும் ஒப்ப வழங்கினும் முன்னவரினும் பின்னவரே சிறந்தவராவர். என்னை? 'கல்வி கேள்விகளிற் சிறந்த அறிஞர் பலர் தம்முள் ஒருங்கு கூடி உரையாடி உவகையுறுதலினும் இனிமை பயப்பதாயின் இன்ப வாழ்க்கையினராகிய உம்பருலகை யாங்காணக்கடவேம்' என அறிஞர் கூறியதனாலென்க. இன்னும் கலைமகளைத் தன் முகத்திலே வாழ்க்கைபுரியும் பேறுபெற்ற மலரவனும் வண்டமிழ்ப் புலவர்க் கொவ்வான். ஏனெனின், மலரவனால் செய்யப்படும் மக்கள் உடம்பு நிலையாது மாய்ந்துபோகும். புலவரால் செய்யப்படும் நூல்கள் முதலிய புகழுடம்பு அழியாது நிலைபெற்றனவாம். எனவே, புலவர் தேவரினும் உயர்ந்த பெருஞ் சிறப்புடைய ரென்பது பெறப்படும். இங்ஙனங்கூறல் புனைந்துரையாகா உண்மை, உணர்ந்தவர்க்கே நன்கு விளங்கும்.

அத்தகைய புலவராவார் யாவர்? அவரே வினையின் நீங்கி விளங்கிய மெய்யறிவுடையார். அவர் இயற்கையாகிய நுண்ணறிவோடு செயற்கையாகிய நூலறிவும் கைவரப் பெற்றவராவர். உலகமாகிய பள்ளிக்கூடத்தில் அவர்கள் கற்றுணர்ந்த உண்மைகளைத் தமது நுண்மாண் நுழைபுலங் கொண்டு வெளிப்படுத்துவர். ஏன்? 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்றபடி பிறரும் அறிந்து பயனுற வாழ்தலே அவர் உள்ளக்கிடக்கை யாதலி னென்க. அவர்தம் விரிந்த உள்ளத்தினின்றும் வெளிப்போந்த அருங் கருத்துக்களே நூல்களாக விளங்குவன. அன்றியும் அவர் பூதவுடம்பு மறைந்த பின்னர் நிலைபெற்று விளங்கும் அழியாப் புகழுருவமும் நூல்களேயாகும்.

பண்டைக் காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்கள் அருளிய நூற்களெல்லாம் எப்பினில் வைப்பாக விருந்து மக்கள் வாழ்க்கைக்குப் பெருந்துணை புரியுமென்பதில் எட்டுணையும் ஐயமின்று. பத்துப் பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களைக் காணுங் காலையில் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தாகிய அரசியல், கைத்தொழில், வாணிகம் முதலியவற்றின் நிலைகளையும், மலை, யாறு, பொழில் முதலிய இயற்கைவளங்களையும் புலவர் தம் சொல்லோவியங்களால் சித்திரித்து வெளிப்படுத்தியுள்ளமை அவைகள் அன்

றுள்ளவாறே இன்றும் அறிவுக் கண்களுக்கு இன்பம் பயப்பன வன்றே! முற்காலத்திற்கும் பிற்காலத்திற்கும் புலவர்களாலேயே தொடர்பு ஏற்படுகின்றது. சுருங்கக் கூறினால் புலவர்களாலேயே உலகம் நிலைபெற்றுள்ள தெனலாம். அத்தகைய பெருந்தகையாளர் கட்கு நாம் செய்யக்கடவ கைம்மாறென்னே?

இனி, அங்ஙனஞ் சிறந்து விளங்கிய நல்லிசைப் புலவர்க்கு அவர் காலத்து வாழ்ந்த புரவலராவார் வறுமை முதலிய சிறுமைகள் வாராதவாறு வாழ்க்கையில் உறுதுணைபுரிந்து வந்தனர். எனவே புலவரும் புரவலரும் ஒருவர்க் கொருவர் இன்றியமையாதவர்களாய் நெருங்கிய தொடர்பு பூண்டு நெஞ்சு கலந்து வாழ்க்கை புரிந்தமையி னாலேயே அவர்தம் வாழ்வு நல்வாழ்வாகச் சிறந்து விளங்கலாயிற்று. புலவராவார் புரவலர்களின் ஆதரவினைப்பெற்று அவர்கள் செய்ந் நன்றியினை மறவாது தம் செந்நாவாற் புகழ்ந்து பாடியும் அவர்கட்கு வழிகாட்டியாக விருந்து நல்லுரைகளைப் புகட்டியும் வந்தனர். புரவலர்களும் அவர் தம் பொருளுரைகளைப் போற்றிச் செந்நெறியி லொழுகிச் சிறப்புற வாழ்ந்தனர்.

புலவர்களின் தகுதியறிந்து அவர்களைப் போற்றிவந்த புரவலர் அரசர்களும் வள்ளல்களும் எனப் பலதிறப்படுவர். அவர்களுள் ஒரு சிலர் புலவர்களைத் தம் வாழ்நாள் முழுதும் தம்பக்கல் வைத்து வேண்டுவன தந்து புரந்தனர். மற்றுஞ் சிலர் வேண்டுங்காலத்து வேண்டுவன தந்துதவினர். அன்றித் தம்மைப் புகழ்ந்து பாடிவந்த புலவர்க்கு வேண்டும் பரிசில் வழங்கி அனுப்பியவரும் உளர். இங் ஙனம் தத்தம் நிலைமைக்கேற்பப் புலவர்களை ஆதரித்த புரவலர்களின் புகழ், குன்றின்மேலிட்ட விளக்கென இன்னும் நின்று நிலவு கின்றது. பண்டைத்தமிழ் நூற்களைப் பயில்வார்க்கு அவர்தம் வரலாற்று நிகழ்ச்சிகள் இனிது புலனாகும்.

சேர, சோழ, பாண்டியர்களாகிய தமிழ்வேந்தர் மூவரும் தமிழையும் தமிழ்ப் புலவர்களையும் புரந்து வருதலைக் கடனெனக் கொண்டவர்களில் தலைசிறந்தவராவர். அதனை உணர்த்தும் இலக் கியச் சான்றுகள் பலவுள்ளன. சேரமன்னர் பதின்மரைக் குறித்துப் பத்து புலவர் பெருமக்கள் பாடிப் புகழ்ந்துள்ளதே 'பதிற்றுப் பத்து' என்ற சிறந்த நூலாகத் திகழ்கின்றது. அவைகளைப் பெற்ற அரசர்களும் அதன் சிறப்பினை உணர்ந்து புலவர்க்குத் தக்க பரிசில் வழங்கினர்.

சேரமான் தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும்பொறை என்ற மன்னனைக் காணவேண்டி மோசிகீரனார் என்ற புலவர் சென்றார். அரசன் அப்பொழுது அரண்மனையில் இலன். வீர முரசினை

நீராட்டிவர வெளியே சென்றுள்ளனர். புலவர் நெடுந்தூரம் வழி நடந்த களைப்புடனே அரண்மனையுள் நுழைந்து முரசுகட்டில் வைக்கும் இடத்தையடைந்தார். அது முரசு கட்டிலென்பதனையும் அறியாராய்ப் புலவர் தம் இளைப்பு மிகுதியால் அதன்மேல் படுத்துக் கண் வளரலானார். பின்னர் வெளியே சென்றிருந்த மன்னன் அவண் புக்கனன். முரசுகட்டிலில் யாரோ படுத்துறங்குவதாகக் கண்டான். அவர் புலவர் மோசிகீரனாரென உணர்ந்துகொண்டான். வெகுளியை அறவே விடுத்தான். விரைந்து கவரியை எடுத்தான். அளவிலா உவகையோடு புலவர் களைதீர இனிது துயில வேண்டுமெனத் தன் இருகைகளாலும் கவரியை வீசலானான். புலவர் பெருந்தகை நன்கு துயின்று பின்னர் கண்விழித்துப் பார்த்தனர். அரசன் தன்பக்கல் நின்று கவரி வீசுவதை அறிந்தார். அவர் தம் திண்ணிய நெஞ்சந் திடுக்கிட்டதாயினும் தாம் எண்ணிய கருத்தைத் தம் நுண்ணிய பாவால் அஞ்சான்று அரசனை நோக்கிக் கூறுகின்றார்.

"மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
இவணிசை யுடையோர்க் கல்ல தவணது
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே."

[புறம் ருO] இதனால் அரசன் தமிழினிடத்தும் தமிழ்ப் புலவரிடத்தும் பேரன்பும் பெருமதிப்புங் கொண்டிருந்தமை தெள்ளிதின் விளங்கும்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் என்ற புலவர் கண்டு பரிசில் பெற்றுச் செல்லுங் காலையில் அரசன் 'நீவிர் எம்மை நினைத்து வருகிரோ' என்றான். அது கேட்ட புலவர் தம் உள்ளக்கிடக்கையை உள்ளவாறு வெளிப்படுத்துகின்றார். அது வருமாறு;

"ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம் பாடிற்றே யாயிழை கணவ
காலை யந்தியும் மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே."

[புறம் ௩௪] இதனால் அரசன் புலவர்க்குச் செய்த பெருஞ் சிறப்பு விளங்குவதுடன் புலவர் தம் நன்றி மறவாமையாகிய அருங் குணமும் அங்கை நெல்லியென விளங்கும்.

முற்கால்த்து மன்னர்களும் கற்றுத் துறைபோய காவலராய் விளங்கிக் கவியரங்கேறினர். அதனால் புலவர் தம் அரசாட்சியில் சிறந்து விளங்குவதையும் தம்மைப் புகழ்ந்து பாடுவதையும் அவர் பெருமையாகக் கொண்டு வாழ்ந்தனர். பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன்னை இகழ்ந்த பகை வேந்தர்மேற் போர்க்குப் புறப்படு முன்னர் அவர்களைப் போரில் வென்று கைக்கொள்ளாவிடில், "ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் தலைவனாக உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப் பிற், புலவர் பாடாது வரைகவென் நிலவரை" என்று வஞ்சினங் கூறுகின்றான். இதனால் அம்மன்னன் புலவர் பாடும் புகழுடையோ னென்பதும் அங்ஙனம் புலவர் தம் செந்நாவாற் புகழ்ந்து பாடுதலைச் சிறப்பாகப் போற்றி வந்தனனென்பதும் மலைவிளக்காம்.

இதுகாறும் சங்க காலத்துத் தமிழரசர் மூவரும் தமிழ்ப் புல வர்களின் சிறப்பை உணர்ந்து அவர்களைப் போற்றிப் புரந்தனர் என் பதற்கு ஓரோஒர் சான்று எடுத்துக் காட்டினேன். இன்னும்-ஏனைய

அரசர்களும் வள்ளல்களும் குறுநில மன்னர்களும் செல்வப் பெரு மக்களும் முற்காலப் புலவர் பெருமக்களின் தகுதியறிந்து அவர் களைப் பல்லாற்றானும் சிறப்பித்து வந்தமைக்கு நூல்களில் சான்றுகள் பலவுள. அவையனைத்தும் இங்கு எடுத்துக்காட்டின் விரியுமென் றஞ்சி விடுக்கின்றேன்.

இந்நாளில் புலவர்களின் சிறப்பினை உணர்ந்து புரப்பவர் நாட் டில் அருகியுள்ளனர். எனவே நாட்டில் புலவர்கள் இருந்தும் அவர் களின் புகழ் வெளிப்படாமல் மாசடைந்த மணியென ஒளி மங்கிக் கிடக்கின்றது. ஆதலின் உலகமும் அவர்களாலடையும் பெரும் பயனை இழந்து முன்னேற முடியாது அறியாமை இருளில் மூழ்கிக் கிடக்கின்றது. தமிழ் உயர் தனிச் செம்மொழி என்பதனையும் மக்கள் உணர்ந்திலர். எனவே பிறமொழிகள் தமிழகத்தில் தலை யெடுக்கலாயின. அம்மட்டோ? தமிழ்மொழிக்கும் புலவர்க்கும் மதிப்புத் தருதலொழிந்து இழித்துரைப்பா ருளராயினர். என்னே காலத்தின் கோலம்! தமிழரசோடே தமிழின் பெருமையும் மறைந் தது போதும்?

இனி, தமிழ்நாட்டிலுள்ள செல்வர் சிலரும் திருமடங்களுட் டலைமை சான்ற அடியார் சிலரும் தமிழினிடத்துப் பேரன்பு பூண்டு தமிழ்ப் புலவர்களைப் போற்றிவரத் தலைப்பட்டுள்ளார். அவர் தம் அருஞ்செயல் குறித்துத் தமிழகம் பெரிதும் பாராட்டக் கடமைப் பட்டுள்ளது. அவர்களைப் பின்பற்றித் தமிழ்நாட்டுச் செல்வரனை வரும் தமிழ்மொழி வளர்ச்சி கருதித் தமிழ்ப் புலவராவார்க்குத் தம்மாலியன்ற பேருதவி புரிய முன்வருவரேல் அவர்கள் செல்வம் பெற்றதனாலாய பெரும்பயனை அடைந்தவராவர். தமிழ்ப் புலவர்க ளனைவரும் அப்புரவலர்களைத் துணையாகக் கொண்டு நாட்டின் நாகரீக வளர்ச்சிக்கேற்ப முன்னேற்றங் கருதி மனமொழி மெய் களால் தொண்டு புரியத் தலைப்படுதல் வேண்டும். தமிழ்ப் பெருந் தகையாம் முருகவேள் தண்ணருள் புரிவானாக.

தமிழ் வாழ்க! தமிழகம் வாழ்க!

நூல்களைப் பதிப்பிப்பதில் நம்பிக்கை தோன்றாத இருள் சூழ்ந்து கிடந்தநாளில் பல நூல்களையும் வெளியிட்டு விளக்கம் செய்து வந்த பெரியாரைத் தமிழுலகம் மறவாது பாராட்டுவது கண்டு தமிழன்னை மிக மிக அகமகிழ்வாள் என்பதில் ஐயம் இல்லை.

T. P. மீனாக்ஷிசுந்தரன்.

# துறவும் தொண்டும்

எ. கே. பரந்தாமன்

துறவு வேறன்று; தொண்டு வேறன்று. துறவும் தொண்டும் உடல் உயிர்போன்றவை: பூவும் மணமும்போலும், மணியும் ஒளியும் போலும், நகமும் சதையும்போலும் ஒன்றுபட்டிருப்பவை. துறவு கொள்வது தொண்டு செய்வதற்கே ஆகும். தொண்டு செய்யப் பயன்படாத துறவும் துறவாக மதிக்கப்படுமா? எல்லாரும் இன்புற்றிருக்க மட்டும் நினைப்பதல்லாமல் எல்லாரும் இன்புற்றிருக்க உழைப்பதுவும் துறவின் நோக்கமாகும்.

துறவு என்றால் என்ன? மனைவி மக்களை விட்டுக் காட்டில் போய்த் தன் உயிர் நன்மையுறும் பொருட்டுத் தவஞ்செய்வது துறவாகுமா? குடும்பத்துக்குச் செய்யவேண்டிய கடமையை மறந்து காவித் துணி அணிந்து கமண்டலமும் முக்கோலும் கையிலேந்தி வீட்டைவிட்டு வெளியேறி விடுவது துறவாகுமா? தண்டனைக்கு உரிய குற்றத்துக்கு அஞ்சித் துறவுக்கோலம் பூணுவது துறவாகுமா? மடத் தலைவராய் இருந்து துறவி வேடம் பூண்டு அறத்தை மறந்து மறத்தை மணந்து ஆடல் பாடல்களில் மிதந்துகொண்டு வாழும் வாழ்க்கையும் துறவாகுமா? பெண்டு பிள்ளைகளோடு இல்லறத்தில் இருப்பினும் ஒழுக்கத்தினின்று வழுவாது அறவழி நின்று உண்மையைப் பேசி உயிர்களுக்குத் துன்பம் நேர்ந்த காலத்தில் தொண்டு செய்யும் வாழ்க்கையன்றோ உண்மைத் துறவு? நாட்டைக் காக்க வீட்டை விட்டு மக்களை விட்டு மனைவியை விட்டுப் போர்க்களம் புகுந்து உயிர்விடும் வீரனும் துறவியே. உலகிற்கு நன்மை செய்ய ஊன் அற்று உறக்கமற்று உறுசுகம் அற்று ஊக்கமாய் அல்லும் பகலும் அநவரதமும் உழைத்துவரும் விஞ்ஞான கலைஞனும் துறவியே. தாழ்ந்த நிலையில் வீழ்ந்து தத்தளிக்கும் மக்களை உயர் நிலையுற உழைக்கும் உண்மைத் தொண்டனும் துறவியே. மாதர் முன்னேற்றமடையப் பாடுபடும் மாதும் இணையிலாத் துறவியே. சுருங்கக் கூறின், உலகுக்கு உண்மையில் ஏதாவது தொண்டுசெய்ய வாழும் வாழ்க்கையே உயர்ந்த துறவு; மற்றது தாழ்ந்த துறவே.

மனைவி மக்களை விட்டுக் காட்டுள் புகுந்து தன்னலத்துக்கு மட்டும் பாடுபடும் துறவு ஆரிய நாட்டிலும் பின்வந்ததே. துறவு வரலாற்றைச் சிறிது ஊன்றி நோக்கினால் இது நன்கு விளங்கும். ஆரிய நாட்டிலும் மனைவி மக்களை விட்டுவிடுவது முதலில் மிகப் பழங் காலத்தில் துறவாகக் கருதப்படவில்லை. முனிவர்கள் வாழ்க்கைத் துணைவியரோடு வாழ்ந்து வந்ததைப் பலபல ஆரியக் கதைகள் வாயிலாகக் காண்கிறோம். மிகப் பழங்காலத்தில் தமிழ்நாட்டில் துறவு என்பதே இல்லை. இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு

முன் ஆரியக் கொள்கைகளும் சமணக் கருத்துக்களும் பௌத்த சமய முறைகளும் புகுந்தபின்னரே ஆரியத்துறவு, இளமைத்துறவு மண் பெண் பொன் வெறுக்குந் துறவு தமிழகத்தில் தலைகாட்டத் தொடங்கிற்று. எவ்வாறு பொருளற்ற ஆரிய மணச் சடங்குகளும் அறிவற்ற சாதிக் கொடுமைகளும் ஆரியர் கூட்டுறவால் தமிழ்நாட்டில் புகுந்தனவோ அவ்வாறே அவர்கள் கூட்டுறவால் இத்தீய துறவு தமிழ்நாட்டில் நுழைந்து தலையெடுத்துவிட்டது. "மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்தது ஒழித்துவிடின்" என்று தமிழ்மறை கூறிய தமிழகத்தில் மழித்தலும் நீட்டலும் மிகுந்த போலித் துறவு பிற்காலத்தில் கிளம்பிப் பெருந்தீமையை மறக்கமுடியாத தீமையைச் செய்துவிட்டது. பட்டினத்தார் தாயுமானுர் போன்ற அறிஞர்களும் வழக்கத்தையொட்டி மாதரைப் பழித்தார்கள். இப்பொழுதுதான் பொய்த்துறவு, பயனற்ற துறவு மடிந்து வருகிறது. உயிர்களுக்குத் தொண்டு செய்யும் துறவு எழுந்து நன்மை செய்து வருவதை பார்க்கப் பார்க்க நம்மனம் மகிழ்வடைகிறது.

பல ஆண்டுகள் இல்லற இன்பத்தைத் துய்த்தபின்பே துறவை ஏற்றுக்கொள்வது முடியும். இல்லற இன்பத்தைத் துய்க்காதவர்கள் துறவுநிலை அடைவது எவ்வாறு? உலகவாழ்க்கை என்னும் பெரும் பள்ளியில் அடையும் அனுபவத்தாலே துறவுநிலை அடைதல் கூடும்; மற்றப்படி அந்நிலை வருவது கடினமே. திருவள்ளுவர் இவ்வாறு வற்புறுத்துவதைத் தமிழ்மறையில் காணலாம். துறவுநிலை என்பது என்ன? உள்ளத் துறவுதான் துறவுநிலை. இதை அடைவதற்கு நற்பயிற்சியும் நல்லறிவும் வேண்டும்" என்று வள்ளுவனுர் தெள்ளிதில் விளக்குவது மிகமிகப் பொருத்தமானது. நற்பயிற்சி என்பது மனம் உறுதியுறச் செய்யும் பயிற்சியே. இது வடமொழியில் விரதம் எனப்படும். திருவள்ளுவர், துறவு நிலையடைய விரும்புகிறவன் முதலாவது அருளுடையவனுக இருக்கப் பழகுதல் வேண்டும் என்கிறுர். அருள் இல்லாதவன் துறவுநிலை கொள்வது முடியுமா? அவன் தொண்டு செய்வதுதான் முடியுமா? அருளுடைமையிற் பழகியபின் புலான்மறுத்தல், தவம், நல்லொழுக்கம், திருடாமை, உண்மை பேசுதல், வெகுளாமை, பிற உயிர்களுக்குத் தீங்குசெய்யாமை, கொல்லாமை ஆகிய இப்பண்புகளைப் பெறும்படி பயிற்சி வள்ளுவனுர் வற்புறுத்துகிறுர். வள்ளுவர் கூறும் இப்பண்புடைய வள்ளுவனுர் வற்புறுத்துகிறுர். வள்ளுவர் கூறும் இப்பண்புகளை அடையாதவன் உண்மையில் துறவுநிலை அடையவே முடியாது. இப்பண்புகளைப் பெற்றபின் மெய்யறிவுபெற அவன் நிலையாமை, உள்ளத்துறவு, மெய்யுணர்வு, அவா அறுத்தல் ஆகிய உண்மையறிவு பெறல் வேண்டும் என்கிறுர் தமிழ்மறை அளித்த தமிழ்நாட்டு வள்ளுவனுர். துறவுக்கு நற்பண்பும் மெய்யறிவும் இன்றியமையாதவை. இவ்விரண்டும் இணைந்தாலன்றி உண்மைத் துறவுநிலை

ஏற்படாது. தொண்டு புரிய வருபவர்கள் இவற்றையடைதல் வேண்டும். இவைகளை அடையாதவன் உண்மைத் தொண்டு செய் வதும் முடியாது; உண்மைத் துறவுநிலை அடைதலும் முடியாது.

வள்ளுவர் மொழிந்துள்ள வளமையான நற்பண்புகளையும் நல் லறிவையும் பெற்றுத் துறவு நிலைபெற விரும்புகிறவன் மனைவி மக்களைத் துறந்துவிட வேண்டியதில்லை; காவியாடை அணிந்து கொள்ள வேண்டியதில்லை. அவர்கள் உள்ளத்துறவு பெற்றால் போதுமானது. ஒருவன் உள்ளத்துறவு கொண்டு மனைவி மக்க ளோடு இருந்து தனக்கென வாழாது பிறர்க்கெனவே பெரிதும் வாழ்வானாயின் அவன் சிறந்த துறவியே. அத்தகைய துறவியே இத் தமிழ்நாட்டுக்கு இன்றைக்கு வேண்டியவன் - கிறிஸ்தவ பாதிரி மார்களைப் பாருங்கள். அவர்களுள்ளும் போலிப் பாதிரிமார்களும் நல்ல பாதிரிமார்களும் உண்டு. நல்ல பாதிரிமார்கள் மிகமிகச் சிலரே. அவர்கள் இல்லறத்திலே இருப்பினும் நாகரிகமில்லாத நாடு களுக்குச் சென்று அந்நாகரிகமற்ற மக்களை நல்வழிக்குக் கொண்டு வருகிறார்கள். நம் நாட்டிலே அப்பாதிரிமார்கள் பண்டை முனிவர் களைப்போல் தலைவரும் தலைவியுமாக இருந்து ஆற்றிவருந் தொண்டு போற்றத் தக்கதாக இருக்கும். கிறிஸ்தவராக்கும் நோக்கம் இருப் பினும் அவர்களுள் சிலர் துறவு உள்ளத்தோடு தொண்டாற்று வதைப் பார்க்கிறோம், நாமும் அவர்களைப் பின்பற்றவேண்டும்.

துறவு விரும்பி எவரும் மண்ணை வெறுத்துப் பெண்ணை வெறுத்துப் பொன்னை வெறுத்துக் கட்டிய மனைவியை விட்டுப் பெற்ற மக்களை விட்டுக் காவித்துணி கட்டிக்கொண்டு கண்மூடித் தவம் செய்ய இமயமலைக்கோ, பொதிய மலைக்கோ திருவண்ணா மலைக்கோ போக வேண்டியதில்லை. அப்படிப் போவதும் வீண்; அவ்வாறு போவதும் துறவாகாது. மனைவி மக்களோடு வீட்டுள் இருந்து நாட்டுள் இருந்து அவர்களையும் பாதுகாத்து நாட்டு மக்க ளுக்கும் தொண்டு செய்து வருவதே நல்ல துறவாகும், தன்னல மற்றுத் துறவியுள்ளம் கொள்வதே போதும்.

தமிழ்நாடு வறுமையில் ஆழ்ந்து கிடக்கிறது. நாலரைக்கோடித் தமிழர்கள் கல்வியற்றுச் செல்வமற்று வீரமற்றுத் தீரமற்றுக் கிடக் கிறார்கள். தமிழ்நாட்டுக் கிராமங்கள் மடிந்து கிடக்கின்றன. தமிழ்ப் பெண்கள்நிலை மிக வருந்தத்தக்கது. இந்து சமய நிலையோ ஆபத்தி லிருக்கிறது. சென்ற 1931-ல் இந்துக்கள் 100க்கு 74 ஆக இருந் தார்கள். 1941 குடிமதிப்பின்படி 100க்கு 64 இந்துக்களே இப் பொழுது இருக்கிறார்கள். பத்து ஆண்டுகளுக்குள் இந்து சமயம் 100க்கு 10பேரை இழந்துவிட்டது. இந்த நிலையிலும் கண்மூடித் தவஞ் செய்யும் துறவு வேண்டுமா? வேண்டவே வேண்டா. தொண்டு செய்யும் துறவே வேண்டும், வேண்டும்.

துறவிகள் என்ன செய்தல் வேண்டும்? துறவிகள் இல்லறத்தி
லிருந்து தொண்டு செய்தல் வேண்டும். இல்லறத்தில் இருந்தாற்
ளுன்றிய ஒழுக்கத்திற்கு வழி ஏற்படாது. பரந்த அறிவும் விரிந்த
உணர்வும் உடையவர்கள் சமயப் பணியோடு சமூகத் திருப்பணியும்
புரிதல் வேண்டும். மேனாட்டுக் கலையறிவுடையவர்கள் நாட்டு முன்
னேற்றத்துக்கு உழைக்கும் முனிவர்களாக விளங்குதல் வேண்டும்.
கிராம அறிவும் சீர்திருத்த நோக்கமுமுள்ளவர்கள் கிராமச் சீர்
திருத்தத் திருப்பணியில் ஈடுபடுதல் வேண்டும். இவர்கள் கிராமங்
களுக்குப் போய்க் கல்விச் சாலைகளை அமைத்துத் தங்களுடைய
ஒழுங்கான வாழ்க்கையால் மக்களைச் சீர்படுத்தி அவர்களை நல்வழி
யில் வாழுமாறு செய்தல் வேண்டும். இதுவே இன்று துறவிகள்
செய்யவேண்டிய பெரும்பணியாகும். மொழிப்பயிற்சி மிக்கவர்கள்
தமிழ்மொழிக்கு நன்முறையில் ஆக்க வேலை செய்யலாம்.

துறவியாதற்கு யார் உரியர் என்றும் யார் உரியரல்லர் என்றும்
ஆயவேண்டியதில்லை. எக்குலத்தாரும் துறவியாதற்கு உரியர். எந்
நிலையினரும் துறவியாதற்கு உரியர். இக்காலத்தில் வேலையிலிருந்து
விடுதலையடைந்தவர்கள் மனைவி மக்களோடு இருந்துகொண்டே
துறவிகளாகித் தொண்டு செய்யலாம். செல்வர்கள் இல்லற இன்பம்
துய்த்தபின்பு துறவி உள்ளத்துடன் நாட்டுப் பணி புரியலாம். திரு
வாளர் ஜவஹர்லால்நேரு பெருந் துறவியாக இருந்தன்றோ இன்றைக்
கும் நாட்டுக்குப் பணிபுரிகின்றார்? அவர் இல்லறத்தைவிட்டு விலக
வில்லையே. காந்தியடிகள் இல்லறத்தில் இருந்துகொண்டு நாட்டுப்
பற்றுவிடாமல் நாட்டுக்குத் தொண்டாற்றி வருகிறார். அவரைவிடத்
துறவி யார் இருக்கின்றனர்? எனவே, துறவு தொண்டுக்கு உட
லாகும் என்றும் தொண்டே துறவுக்கு உயிர் என்றும், எவரும்
இல்லறத்தில் இருந்துகொண்டே துறவியாயிருந்து நற்பணி செய்ய
லாம் என்றும், துறவுக்குப் புறக்கோலம் வேண்டியதில்லை என்றும்
அறியலாம்.

தமிழ்நாட்டுத் துறவிகளே, தமிழ்நாட்டைப் பல்லாற்றானும் நல்
வழிப்படுத்த வாருங்கள், வாருங்கள். நீங்கள் இல்லறத்திலிருந்து
கொண்டே தொண்டுபுரியுங்கள். தமிழ்நாடு உங்களை எதிர்பார்க்
கிறது. கண்ணை மூடித் தவஞ்செய்யக் காட்டில் நுழைவீர்களானால்
நீங்கள் பிறவியெடுத்ததன் பயனை இழந்தவர்களாவீர்கள். துறவி
யுள்ளமுடன் தொண்டு செய்து உய்வீர்களாக!

உயர்திரு காஞ்சி நாகலிங்க முனிவர் இவ்வகையில் நின்று அமிழ்
தினும் இனிய அருந்தமிழ் மொழிக்கும் சமூகத்திற்கும் பல ஆண்டு
களாகப் பெரும்பணியாற்றி எண்பது ஆண்டுகள் வாழும் திருவினைப்
பெற்றார்கள். அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழ எல்லாம்
வல்ல முழுமுதற் செழும்பொருள் திருவருள் புரிவாராக!

## சங்கம் கண்ட புங்கவர்

திரு. இறையனார்

யாண்டு பலகண்ட நரைபயில் சிரத்தினர். வெண்ணீற்று சண்ணித்த பொன்னார் மேனியர். மேனி வண்ணத்திற்கு இயையச் செங்கற் பொடிக் கூறையினர். வெண்பல் தவத்தவர். 'உள்ளுவது எல்லாம் உயர் வுள்ளல்' என்பதை வலியுறுத்தும் பரந்த நெற்றியும் விரிந்த நோக்குமுடையவர். 'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு' அடக்கப்பெற்ற கக்கத்தினர். உவந்த முகமும் துவண்டகாமு முடையவர். குறுகுறுத்த நடையினர். படபடத்த பேச்சினர். எனினும் எதிர்ந்தோரைத் தன் வயப்படுத்தும் நயம்படு நாவினர். குலமுன்னேற்றமொன்றே குறிக்கோளாக் கொண்ட கொள்கையினர். எண்ணுவது மட்டுமன்று; எழுதுவதும் பேசுவதும் நடப்பதும் அதை ஒட்டியே தான். இத்தகைய பண்பமைந்த பெருமானார் யாவரென யான் கூறவேணுயின் கொல்லன் தெருவில் ஊசி விலை கூறுவோனுக்கு ஒப்பாவேன். இருப்பினும் அவரே இன்றைய முத்து விழாத் தலைவர் என்று ஒருவாறு குறிக்கின்றேன்.

அவ்வாறாயின், அம் முனிவர் அவர்கள் ஆற்றிவரும் அரும்பணிகள் தாம் என்னே? அவரது பணிகளனைத்தையும் பாரித்துரைத்தல் எம்போன்ற எளியாரால் இயலாததொன்றாம். தமிழ் மொழி பரவத் 'தமிழ் அகராதி' தந்த தகைசால் தமிழ் மகன் என்கோ? கவி பல புனைந்து காவியம்பாடிய கவிவாணரென்கோ ? வண்ணப் பாக்கள் வளம்பெற யாக்கும் வண்ணக் களஞ்சியம் என்கோ ? மெய்கண்ட சாத்திரம் மேம்படப் பதித்த மேலவனென்கோ ? சைவந்தழைக்கத் தரையிடைப் போந்த மைவளர் கருணை மாரியென்கோ? செங்குந்தர் சிறக்கப் புகழுறு சங்கம் புதுமையிற்கண்ட புங்கவர் என்கோ ? தொழிற் கல்வித் தாளைத் தொன்னாள் நடத்திய தொல்லாசிரியனென்கோ ? யாங்ஙனம் கூறி இம் மேதகு முனிவரின் மேன்மையதனை விளக்குதல் என அறியகில்லேன். இத்தகைய அறிவின் திருவுடையார் அன்பின் உருவுடையார் குலத்தின் கருவுடையார் — நாகலிங்க முனிவரவர்களைச் செங்குந்தருள் அறியாதார் அறியாதாரே. முனிவரவர்கள் அஷ்டாவதானம் கலியாணசுந்தரயதீந்திரர் அவர்களின் தலை சிறந்த மாணவர்களுள் ஒருவர் என்றால் இவரது பெருமை நன்கு விளங்குகின்றதன்றோ ?

நம் முனிவரவர்கள் 'செங்குந்தன்' என்ற ஒரு கிழமைத்தாளைத் தோற்றுவித்தவர். அக்கிழமைத் தாள் பின்னர், திங்கள் இதழாக மாற்றப்பட்டதும் இவர்களாலேதான். அவ்விதமே இன்று செங்குந்தர் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டு வருகிறது. குலமுன்னேற்றங் கருதி

ஆரூர் அண்ணல், அருமை வள்ளலார் சபாபதி முதலியார் அவர்களின் அருந்துணைகொண்டு சென்னையில் இன்றைக்குப் பதினெட்டு யாண்டுகளின் முன் செங்குந்த மகாசனசங்கம் கண்ட குலமுதற் பெரியார் நம் முனிவர் அவர்களே ஆவர். எனவே சிறப்பாக நம் செங்குந்த குலத்திற்கு நம் முனிவர் அவர்கள் செய்த தொண்டினை நம் நாடு மட்டுமன்றித் தென் ஆப்பிரிக்கா போன்ற பிறநாடுகளும் நன்கறியும் எனின், மிகையாகாது. இதுவரை யாரும் செய்திராத அத்துணை நலங்களை முனிவர் அவர்கள் ஆற்றியுள்ளார் என்றால் அது புகழ்ந்துரை யாகாது. இன்று 'நான் ஒரு செங்குந்தன்' என்று முன்வந்து மார்தட்டி உணர்ச்சியுடன் ஒரு செங்குந்தன் பேசுகிறான். என்றால், செங்குந்த மக்கள் ஓரளவு முன்னேற்ற மடைந்துள்ளார் என்றால், செங்குந்தர் தாம் இன்னாரென உணர்ந்துள்ளார் என்றால் அவை அத்தனைக்கும் முதற்காரணர் நம் முனிவர் அவர்களே ஆவார்கள். எனவே, செங்குந்தகுலம் அவர்மாட்டுப் பெரிதும் கடமைப் பட்டுள்ளது என்பதில் யாது தடை ?

இவ்வாண்டு செங்குந்தகுலத்திற்குச் சிறந்ததொரு ஆண்டாகும். எற்றுக்கோ வெனின் முனிவரவர்கள் தோற்றுவித்த மித்திரனும் சங்கமும் செவ்வனே வளர்ந்து பதினேழும் பதினெட்டும் ஆண்டுகள் முறையே நிறைந்து நிற்கின்றன. முனிவர் அவர்களும் எண்பது நிறையப்பெறுகிறார். முத்துவிழாவின் முழக்கமும் யாண்டும் செவி குளிரக் கேட்கப்படுகிறது. இவ்விழாவினைத் தலைச்சங்கம் உள்ளிட்ட கிளைச் சங்கங்களும் ஏனைய அன்பர் குழாமும் கொண்டாடுகின்றன என்றறிந்து மட்டிலா மகிழ்ச்சியில் மனம் திளைத்துள்ளோம்.

'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்' என்ற மணிவாசகப் பெருந்தகையாரின் பாதச் சுவட்டைப் பின்பற்றி நாம் வாழ நம் குலம் வாழ நம் முனிவரவர்களை வாயார வாழ்த்துவது நமக்குரிய கடமைகளில் ஒன்றன்றோ? எனவே நம் முனிவரவர்கள் இன்னும் பல்லாண்டுகள் பாரினில் திகழ்ந்து நோயற்ற வாழ்வினராய்ச் செங்குந்த குலத்திற்கும் சைவ உலகிற்கும் தமிழ்க் கலை உலகிற்கும் நலம்பல புரிந்து பாலாற்று மணலினும் பல நல்லாண்டுகள் வாழியரென குலமுதற் கடவுள் குமரவேற்பெருமான் திருவடித்துணையைப் பெரிதும் இறைஞ்சுவோமாக !

வாழ்க முனிபுங்கவர் ! வாழ்க நம் குந்தர் !

வாழ்க நம் வள்ளல் !

# சிறிய பெருந்தகையார்

க. வெள்ளை வாரணன்

இவ்வழகிய செந்தமிழ்ச் சொற்றொடர் சண்டேசுரரையும் திருஞான சம்பந்தப் பிள்ளையாரையுங் குறித்துத் திருத்தொண்டர் புராணத்து வழங்குவதாகும். இதன் பொருளையும் இதனாற் குறிக்கப் பெற்ற அடியாரிருவர்க்கும் இப்பொருளமைதிக்குமுள்ள இயைபினையும் ஒரு சிறிது நோக்குவோமாக.

செய்யுள் செய்யும் புலவன் தான் பயின்றுணர்ந்த மொழிகளின் துணைகொண்டு, தன் உள்ளத்துணர்வுகளை வெளியிட விழைகின்றான். இந்நிலையில் அவனுக்கு மொழிவாயிலாகிய நூலறிவும், உலகியற் பொருள்களை நுனித்தறிந்து அவற்றினியல்பினை உளங்களனாக ஆராய்ந்து வெளியிடும் உள்ளுணர்வும் உடனின்றுதவுமென்பர் உணர்ந்தோர். சொற்களின் பொருளையுள்ளவாறறிந்து அறிந்த அம்முறையே அவற்றையுமிழ்த்துவிடாமல், அவையிற்றைத் தன் அறிவு கருவியாகத் தெளியுங்கால், தன்னுள்ளத்துத் தேக்கெறிந்த சுவையுடன் பிறரும் நுகர்ந்து மகிழ விரித்துரைக்கும் நுண்ணுணர்வே புலமையெனப் பெறும். புறத்தே சென்று பொருள்களைப் பற்றியறியும் அறிவும், அங்ஙனம் அறிந்தவற்றை அகத்தே வைத்து ஆராயும் உணர்வும் என இவ்விரண்டினையும் நிலைக்களனாகக் கொண்டு முன்னர்க் கூறிய புலமை தோன்றுமென்றல் பொருந்தும்.

உலகியற் பொருள்களைத் திறம்பெற விளக்கப் போந்த புலவன், அவற்றை விளக்குங் கருவியாகிய தனது புலமையினையும் ஓரோ வழி தனி நின்றுணர வைத்தலியல்பு. பொருளியல்பிற்கேற்பச் சொற்களையாளுந் திறத்தினாலேயே தன் புலமையுணர்வையுணர வழி செய்தலும் உண்டு. சிறிய பெருந்தகையார் என்னுமித் தொடரும் அருண்மொழித் தேவரது புலமைத்திறனை நம்மனோர் உணர்ந்து மகிழத் துணை புரிகின்றது.

சிறுமை பெருமையென்னும் இவ்விரு பண்புகளும் ஒன்றற்கொன்று மாறுபட்டனவாம். தம்முள் மாறுபட்ட இத்தன்மைகளிரண்டும் ஒரு பொருளினொருதிறத்தில் ஒருங்கமைதல் இயலாது. எனவே சிறிய பெருந்தகையார் என்னுமித் தொடரிலமைந்த சிறுமை பெருந்தகைமையென்பன இத்தொடராற் குறிக்கப்பெற்ற பெரியார்களின் உடல் உயிர் என்பவற்றுள் ஒன்றற்குரிய பண்புகளாய் இணைந்து வந்தனவெனக் கொள்ளப்படா. உருவு, ஆண்டு முதலியவற்றாற் சிறுமையுடையாரென்றால் பின்னர் அவ்விருவரையும் பெருந்தகையார் எனக்கூறப் பொருந்துவதன்று. அன்னோர் அறிவு ஆற்றல்

முதலியவற்றால் பெருந்தகையரென்றற்கு அங்ஙனங் கூறியதெனின் சிறிய என்னும் அடைமொழியைப் பெருந்தகையார் என்பதன் முன்னர்ப் பெய்துரைத்தல் சிறப்பின்றாம். இருதகைமையும் ஒருங்குடையார் என்றற்கு அவ்வாறு கூறப்பட்டதெனின் தம்முள் மாறுபட்ட தன்மைகளாகிய பெருமையும் சிறுமையும் வேறுவேறு திறத்திலன்றி ஒரு திறத்தில் ஒருங்கமையக் கூறல் பொருந்தாது என முன்னர்க் கூறினோம். எனவே சிறுமையும் பெருந்தகைமையும் இங்கு இரு வேறு கூறுபாடுகளைப் பற்றிக் கூறப்பட்டனவென்றே கொள்ள வேண்டியுளது. ஆசிரியர் சேக்கிழார் இவ்வரிய தொடரை யெடுத்தாளுஞ் செவ்வியினைத் தெரிந்துகொள்வோமாக.

மலராகியபோது உளதாம் நறுமணம், அரும்பாம் நிலையிலேயே உள்ளிருந்து தோற்றுதல்போலத், தம் ஐந்தாட்டைப் பருவத்திலேயே பழம் பிறப்பிற் கற்ற கல்வியின் தொடர்ச்சியினால் உள்ளம் விரிய உடன் மலரும் நல்லறிவு சிறக்கப்பெற்றார் சண்டேசப் பிள்ளையார் எனப் பெரிய புராணத்தா லறிகின்றோம். சண்டேசப் பிள்ளையார் தமது ஏழாம் யாண்டிற் பெற்றோராற் பள்ளியிலமர்த்தப்பெற்ற பின்னர் அடைந்த கலைப்பயிற்சியை விளக்கப் போந்த தொண்டர்சீர் பரவுவார்,

> " குலவு மறையும் பலகலையுங் கொளுத்து வதன்முன் கொண்டமைந்து
> நிலவு முணர்வின் றிறங்கண்டு நிறுவு மறையோ ரதிசயித்தார்
> அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே யெனக் கொண்ட
> செலவு மிகுந்த சிந்தையினிற் றெளிந்தார் சிறிய பெருந்தகையார் "

எனவரும் பாடலாற் பாராட்டிய திறம் இவண் கருதத்தக்கதாம்.

மறைமுதலாகிய நூற்பொருளை ஆசிரியர் அறிவிப்பதன் முன்னமே தமது அறிவின்றிறத்தால் அப்பொருளியல்பினை யெதிர் சென்று வாங்கித் தம் உள்ளத்தமைத்து, அதனை யிடைவிடாதெண்ணி யாராய்தலால் நிலைபெற்ற வுணர்வின் திறனுடையரானார் சண்டேசர் எனவும், அதுகண்டு இவரைப் பள்ளி பயிலவைத்த அறிஞர்களும் வியந்தனரெனவும், இப்பாடலின் முன்னிரண்டடிகளிற் குறித்த ஆசிரியர், அத்தகைய கல்வியால் இவர் பெற்ற பயனை இதன் பின்னிரண்டடிகளினும் இனிது விளக்குகின்றார். வரம்பின்றிப் பெருகிய கலையுணர்வால் உணரப்படும் பொருள் எல்லாவற்றிற்கும் எல்லையாயமைந்தது முழுமுதற் கடவுளது திருவடியேயெனக் கருதி மேற்கொண்ட வாழ்க்கை நடைமுறையினை உயர்வுக்கு நிலைக்களனாகிய தமது உள்ளத்தில் தெளிய வுணர்ந்தார் சிறிய பெருந்தகையாராகிய சண்டேசப் பிள்ளையார் என்பது மேற்குறித்த பாடலின் பின்னிரண்டடிகளுக்குரிய பொருளாகும்.

இச் செய்யுளில் "அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே யெனக் கொண்ட செலவு" என்றது, அளவின்றி விரிந்து

பரவிய கலைத்திறங்களாலுணரத் தகும் பொருள்களெல்லாவற்றை யும் தன்னகத்தே யடக்கி நிற்கும் எல்லையாயமைந்தது கூத்தப் பெருமானது தூக்கிய திருவடியேயெனக் கொண்ட கொள்கையாற் றுணியப்பெற்ற வாழ்க்கைநெறி முறைமையினையேயாம். இங்ஙனங் கொண்டதனுலுளதாகும் வரம்புடைச் செயலாகிய வாழ்க்கை நடக்கையினைக் 'கொண்ட செலவு' என்றது, ஆற்றிற் (வழியிற்) சேரலான், வந்த வியர்வையினை ஆறு சென்ற வியர் என்றாற்போலச் செயப்படு பொருளில் வந்த பெயரெச்ச முடிபெனப்படும். 'செலவு' என்னுஞ் சொல் இங்கு நடக்கையென்னும் பொருளில் வழங்கப் பட்டது. இப்பாட்டில் 'தெளிந்தார்' என்ற வினைக்கேற்பச் 'செலவினை 'யென இரண்டாவது விரித்துப் பொருள் கூறப்பெற்றது. இங்ஙனம் தெளிதற்குக் காரணமாக முன்னைப் பல பிறவிகளினும் கேட்டல் சிந்தித்தற் றொழில்களாற் பெற்ற உரனுடைமையின் மிகுதி தோன்றச், சண்டேசரது உள்ளத்தை 'மிகுந்த சிந்தை' யெனச் சிறப்பித்தார். இவர் தாம், ஏழாட்டைப் பருவத்தாற் சிறியவராயினும், அறனுற்றி மூத்த முதியோர்களாலும் எளிதிற் பெறுதற்கரிய மெய்யுணர்வு கைவரப்பெற்ற பெருந்தகையார் ஆயினர் என்பார், 'சிறிய பெருந்தகையார்' எனத் திறம்பெறப் போற்றினர். 'சிறிய பெருந் தோன்றலார்' என்றதும் இப்பொருளதேயாம்.

இனி, தமிழ்நாடு செய்த தவப்பயனாகத் தோன்றி மூன்றும் யாண்டிலேயே உமையம்மையா ரளித்த ஞானப்பாலுண்டு, உண்ணிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால் தீந்தமிழ்த் திருப்பதிகங்களை யருளிய காழிப்பிள்ளையாரையும் அச்சிறிய பெருந்தகையார் என்ற சொற்றொடரால் அழைக்கின்றார் சேக்கிழார் பெருமான். அங்ஙனம் அழைப்பதற்குரிய நோக்கத்தினைத் தெரிந்து கொள்ளுமுன், சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் பெற்ற தவமுதல்வராகிய சம்பந்தப்பிள்ளையார் உள்ளத்தெழுந்த உணர்வு நிலையிஃதென விளக்கும் பாடற்பொருளையறிதல் இன்றியமையாததாம்.

> "எப்பொருளும் ஆக்குவான் ஈசனே யெனுமுணர்வும்
> அப்பொருடா னுளுடைய ரடியார்க ளெனுமறிவும்
> இப்படியா லிதுவன்றித் தம்மிசைவு கொண்டியலும்
> துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார்"

என்பது அப்பாடலாகும்.

இதன்பொருள்:—உலகத்து எவ்வகைப்பட்ட பொருளையும் படைத்தளித்தழித்து இயக்குவான் இறைவனொருவனே யென அவனைப்பற்றி 'புணரும் உணர்வினையும், அங்ஙனம் அவனால் இயக்கப்படுபொருளுள், தன்னருளால் எவ்வுயிரையும் ஆட்கொள்ளு மியல்புடைய அப்பெருமானால் ஆட்கொள்ளப் பெற்ற அடியார்களும் அடங்குவர் எனத், தாமும் பிறருமாகிய பிறவுயிர்களைப்

பற்றியறியும் அறிவினையும், இம்முறையால் இது நிகழுமெனக் கொள்ளும்முறை பிறழ்ந்து தம்முளம் விரும்பியவாறு அலைந்து திரியும் அறிவு வலியில்லாராகிய பிறர்தம் துணிபுகளாகிய பிழைபட்ட கொள்கைகள் சிதர்ந்து அழியும் வண்ணம் தம்முள்ளத்தே ஆராய்ந்து தெளிந்தார் ஞானசம்பந்தப் பிள்ளையார் என்பதாம்.

இப்பாட்டில் வந்த 'ஆக்குவான்' என்னுஞ்சொல் இயக்குவான் என்னும் பொருளதாம். இறைவனை யறியும் செயலை 'உணர்வு' என்றும் அடியார்களைப்பற்றி யறிவதனை 'அறிவு' என்றும் சேக்கிழார் பெருமான் கூறியது, உயிரானது தன்னை உள்நின்றியக்கும் உள்ளது என்னும் மெய்ப்பொருளின் திருவருளுடன் ஒற்றித்து உடனிருந்து அழுந்தியறிவதனை 'மெய்யுணர்வு' என்றும், பொறி புலனுதவி கொண்டு புறப்பொருளை யறிவதனை 'அறிவு' என்றும் ஆசிரியர் திருவள்ளுவர் தனித்தனி யிரண்டதிகாரங்களி லுணர்த்திய நுண்மை கருதியென்க. சூழ்தற்குச் செய்யப்படுபொருள் உணர்வும் அறிவும். உணர்வினையும் அறிவினையும் சூழ்ந்து எழுந்தார் எனவும், துப்புரவில்லார் துணிவு துகளாகச் சூழ்ந்து எழுந்தார் எனவும் தனித்தனி கூட்டுக. இப்படியாலிது என்பது, இன்ன செயலால் இவன் பெறுதற் குரியது இது என்னும் ஊழ்முறைமை விளக்கி நின்றது. மேலே எப்பொருளுமாக்குவான் ஈசனே யெனக்குறித்தபின், அதனை யொட்டி 'இப்படியாலிது' என்றமையின், அவன் ஆக்கிவகுத்த முறையால் என்பது பெறும். திருவள்ளுவரும் ஊழினியல்பினை யுணர்த்துவார், இருவினைப்பயன்களை நுகரும் வழியினை வகுத்தல் பற்றி அதனை வகையென்ற சொல்லாற் குறித்தவர், வகையென வாளாகூறாது 'வகுத்தான் வகுத்தவகை' என்றதும் இவண் ஒப்பு நோக்கத்தக்கது. 'இப்படியா லிதுவன்றித் தம்மிசைவு கொண்டியலும் துப்புர வில்லார்' என்பதற்கு, இவ்வினையால் இது விளைவது என ஊழுண்மை நம்பாது, தம்மனஞ்சென்றவாறே நடப்பாராகிய பாழ்ங்கொள்கையினரெனவும், எப்பொருளும் ஆக்குவோனாகிய ஈசன் வகுத்தமுறையால் இது நுகரப்படுவதென் றெண்ணாது, தம்மனமிசைந்தவாறே தம்மால் முன்னர்ச் செய்யப்பட்ட அறிவிலதாகிய வினையே பின்னர் உருக்கொண்டு நுகர்விக்கும் என்றெண்ணுகின்ற உரமில்கொள்கையினர் எனவும் இருதிறமும் பொருள் கூறல் பொருந்தும். எனவே ஊழென்பதொன்றே இல்லை யென்பார் துணிபும், ஊழுண்டு என நம்பி அதனை வகுப்போன் ஒருவனிலன் என்பார் துணிபும், ஞான சம்பந்தப்பிள்ளையார் தம் உள்ளத்து இறைவனையும் அடியார்களையும் பற்றிச் சூழ்ந்த ஆராய்ச்சியுணர்வானே துகளாயின என்பது இப்பாடலின் முடிந்த பொருளாயிற்று.

இதுகாறுங் கூறியவற்றால் சண்டேசுரரும் ஞானசம்பந்தரும் ஆண்டு நிரம்பாத இளங்குழவிப் பருவத்தினராயினும், இறைவன் திருவருளாலும் முன்னைப் பிறவியின் தொடர்பாலும் புறப்பொரு

ளைப் பகுத்தறியும் அறிவும், அப்பொருளின் அகத்தும் புறத்தும் விளங்கும் இறைவனைத் தமது அழுந்திய அறிவால் உள்ளமொன்றி நின்றுணரும் உணர்வும் ஒருங்குடையாராதல் கருதிச் சிறிய பெருந் தகையார் என்றகாரணப்பெயரினை ஆசிரியர் சேக்கிழார் அவ்விரு வருக்கும் இசைத்து வழங்கியருளினர் என அறிகின்றோம்.

இங்ஙனம் வளரா வுடம்பினையுடைய குழவிப்பருவத்திலேயே வளர்ந்த பேரறிவு வாய்க்கப்பெற்ற மக்களைப் பண்டைத்தமிழ்ச் சான்றோர் மிகவும் வியந்துபாராட்டினர். புறநானூற்றிலுள்ள 'உண் டாலம்மவிவ் வுலகம்' எனத் தொடங்கும் பாடலை உணர்வுற்றெனப் பாடிய கடலுள்மாய்ந்த இளம்பெருவழுதியென்னும் பாண்டியன், ஆண்டிலிளையனாயினும் அறிவினால் முதுமையுடையான் என்பதனை யுணர்ந்த பெரியோர் அவனை இளம்பெருவழுதி யென்று அழைத் தார்களன்றோ? அங்ஙனமே சோழனொருவனும் இளம்பெருஞ் சென்னியெனப் பாராட்டப் பெறுகின்றானல்லனோ?

கயமனார் என்னும் புலவராற் பாடப்பெற்ற 17-ஆம் அகப்பாட லில், தலைவன் பின்னே உடன் போக்கிற்சென்ற தன் மகளைச் செவி லித்தாய் சிறுமுதுக்குறைவி எனப் பரிந்து போற்றுகின்றாள்.

"வளம்பொருந்திய நகரின் கண்ணே பந்தினைச் சிறிதுபொழுது எறிந்து விளையாடினாலும், இளையராய்த் துணையாய தோழிமார் கூட் டத்து உடனிருந்து கழங்காடினாலும், அன்னாய், எனதுடல் நோகின் றது என்று வருந்திச், செறிந்த வியர்வை துளித்த முகத்தினராய் என் மகள் முன்பெல்லாம் என்னைக் குளிரத்தழுவி யுடனிருப்பாள். அந்தோ அவ்வுடனுறைவு கழிந்ததே. இன்றோ, வளையலால் மாட்சி மைப்பட்ட சுற்றத்தாராகிய ஆயத்தாரையும், தாயாராகிய எம்மை யும் ஒரு சிறிதும் நினையாதவளாய், நெடுமொழி கூறும் வல்லாண்மை மிக்க தன்தந்தையின் கடத்தற்கரிய காவலையும் நீங்கி, அயலானொரு வனது நெஞ்சினைத்தனக்கே யுரித்தாகப்பெற்று அவனுடன்சென்றாள். இங்ஙனம் வினைவுதெரியாச் சிறுபருவமாகிய இளமையிலேயே, காதலிருவர் கருத்தொருமித்து வாழும் இவ்வாழ்க்கைக் கேற்ற பேரறிவு முதிரப்பெற்றமையாற், சிறு முதுக்குறைவி யெனத்தக்க என்மகளுடைய சிலம்பணிந்த சீறடிகள், கடுங்கதிர்காயும் அருஞ் சுரத்து நடத்தற்கு வன்மையுடையன வாமோ', எனச் செவிலித்தாய் வருந்திப் புலம்புங்கூற்றாக அமைந்தது அவ்வகப் பாடலாகும்.

இப்பாடலிற் கயமனார் புதுவதாகத் தாம் படைத்து வழங்கிய சிறுமுதுக்குறைவி என்னுஞ் சொற்றொடரே சிறிய பெருந்தகையார் என நாம் எடுத்துக்கொண்ட சேக்கிழார் மொழியுடன் சிறப்பாக ஒத்து நோக்குதற்குரியது. இங்கே உயிர்ப்பண்புகளின் சிறுமை யளவினையுணர்த்தாது உடலின் சிறுமை யளவினைப் பற்றிநின்று,

இளமையெனப் பொருள் தருகின்றது. இவ்வாறே சிறிய பெருந் தகையார் என்ற தொடரிலுள்ள சிறுமையும் வளரா வுடம்பின் சிற்றளவினைச்சார்ந்து நின்று, இளமையெனப் பொருள் தந்தமை புலனும்.

முதுக்குறைவு.—பேரறிவு எனப் பொருள்படும் ஒரு மொழி. அதனையுடையாள் என்பதுபோன்ற இகரவீறு சேர்ந்து முதுக்குறைவி யென்றாயது. இச்சொல்லின் பொருளையே பெருந்தகையார் என்னுஞ் சொல்லும் அடியொற்றி வழங்குகின்றது. ஆகவே சண்டேசுரரும் ஆளுடைய பிள்ளையாரும் தமது குழந்தைப் பருவத்திலேயே மெய்யுணர்வு கைவரப்பெற்றமை குறித்தே, ஆசிரியர் சேக்கிழார், அவ்விரு பெருந்தகையாரையும் சிறியபெருந்தகையார் எனச் சிறப்பித்தனரெனவும், இவ்வகைப் பொருள் நயங்குறித்த மொழியாக்க முறை சங்ககாலத்தும் ஆளப்பெற்ற தென்பதற்குச் சிறு முதுக்குறைவி, எனவரும் அகநானூற்றுத் தொடரே சான்றாமெனவும், அத்தகைய அரிய மொழியாக்க முறையைப் பிற்றைநாளில் உயிர்ப்பித்து நிலைநிறுத்த பெருமை சேக்கிழாரடிகட்கே சிறப்பின் உரியதெனவும் ஆராய்ந்துகண்டோம். தெய்வப் புலவர் தெரிந்து வழங்கிய திருந்திய செந்தமிழ்ச் சொல்லாக்க முறை, இனிவருங் காலத்தும் நன்கு வளர்வதற்குத் தமிழ்மக்கள் முயன்று புகழ்பெறுவாராகவெனத் திருவருளை வழுத்துகின்றேன்.

## காலத்துக் கேற்பன செய்யும் கவிஞர்

எண்பது ஆண்டு நிறைந்த தமிழறிஞராக விளங்கும் வண்ணக் களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் வீட்டைத்துறந்து காட்டில் உழலாது வீடு பேற்றிற்குரிய நல்வாழ்வு வாழ்ந்தவர்; உலகம் பொல்லாததென ஒதுங்கி வெறுது மக்கள் முன்னேற்றத்துக்குரிய பல்வேறு தொண்டில் பயின்றவர்; காலத்துக் கேற்பன செய்யும் கருத்துடன் தொழிற்கல்வி முதலாம் தாள்களைத் திறம்பட நடத்தியவர்; உயர் தனிச் செம்மொழியாம் தமிழும் பழம் பொது நெறியாம் சைவமும் இருகண் எனக் எண்ணியவர்.

'தமிழ்' என்றால் மருண்டு நோக்கிய ஆங்கிலப் பட்டத்தினர் பலரிடையே அக்காலத்தில் தமிழ்த்தொண்டு ஆற்றிய பெரியார் இக்காலத்தையும் கண்டு களிக்கின்றார்; இக்காலமோ, தமிழ் பேசத் தெரியாத (பிறமொழியில் வல்ல) ஊமையரும் 'தமிழ்' எனக் கேட்டு உள்ளம் குளிரும் தன்மை யுற்ற நற்காலம். ஆயினும், ஒரு குறை உள்ளது. பல்வகைப் பித்துக்களால் பிணங்கிப் பிரிவுற்றுப் பிற்போக்கெய்தி வீழ் நிலையில் உள்ளனர் தமிழர். மொழியின் தன்மையால் அத் தமிழர் தெளிந்து இணங்கி ஒன்றி முற்போக்குற்று உயர்நிலை எய்தும் நன்னாளினையும் இம் முனிவர் கண்டு களித்து இறுமாப்பு உறுமாறு மேலும் பல்லாண்டு நல்வாழ்வு வாழ இறைவன் அருள்க.

மு. வரதராஜன். எம். ஓ. எல்.

# தமிழும் தமிழ் மருத்துவமும்

பண்டைக்கால இலக்கிய வாயிலாக நாம் தமிழ் இலக்கியத்தின் சிறப்பியல்புகளையும், இலக்கண வரையறைகளையும், துறைகளையும், மக்கள் வாழ்க்கைகளையும், சமயங்களையும் செவ்வையாக அறியலாம் இதற்குப் புலவர்கள் இயற்றிய நூற்கள் பெரிதும் பயன்படுகின்றன. அவர்கள் இலக்கிய இலக்கணங்களையே கூறிப் போந்தார்களல்லர், மற்ற மருத்துவ சம்பந்தமானவைகளையும் இடையிடையே கூறியுள்ளார்கள். அவ்வாறு கூறியவைகளிலிருந்தே சிலவற்றை யீண்டுக் குறிக்கின்றேன்.

மருத்துவர்கள் நல்ல கொள்கைகளையும் தூய வொழுக்கத்தையும் உடையவர்களா யிருந்தவர்க ளென்பதை “ விளங்கிய கொள்கை யாயுள் வேந்தர் ” என்று சிலப்பதிகாரங் கூறுவதா லறியலாம்.

மருந்தால் பிணிதீருமென்பதையும்,சில பிணிகள் மருந்தால் தீரா தென்பதையும், இன்ன பிணிக்கு இன்ன மருந்து பயனளிக்கு மென் பதையும் அறிந்திருந்தார்களென்பதை,

“ பசிப்பிணி மருத்துவ னில்லம் அணித்தோ
சேய்த்தோ கூறுமின் எமக்கே ”. (புறநானூறு 360)

“ விறலிழை நெகிழ்த்த வீவு அரும் கடுநோய் ” (குறிஞ்சிப்பாட்டு)

என்பதாலும் அறியலாம்.

முற்காலத்தில் தமிழ் மருத்துவத்தில் அறுத்து, அறுத்ததால் உண்டாகும் புண்ணுக்கு மருந்திட்டுத் தீர்க்கும் முறை யுள தென்பதை,

“ உடலிடைத் தோன்றிற்று ஒன்றை அறுத்ததன் உதிரம் ஊற்றிச்
சுடலுறச் சுட்டு வேறோர் மருந்தினாற் றுயரந்தீர்வர் ”

சுடலுறச்சுட்டு வேறோர் மருந்தினாற் றுயரந்தீர்வர்” என்ற கம்ப ராமாயணம் யுத்தகாண்டம் கும்பகர்ணன் வதைப்படலச் செய்யுளடி களா லறியலாம்.

இன்னும் சங்ககாலத்தில் மருத்துவர்கள் நோய்கட்கு மருத்துவம் செய்ய வழங்கும் மருந்துகட்கு வைத்திருந்த பெயர்களைச் சில நூற்கட்கு இட்டு வழங்கினர்கள். எடுத்துக் காட்டாகத் திரிகடுகம், ஏலாதி, சிறுபஞ்ச மூலம் எனப் பெயரிட்டிருப்பதாலே அம்மருந்துகள் உடலுறு பிணியை நீக்குமாறு போல இந் நூற்களும் அறியாமையாகிய மனநோயை நீக்குமென்பது துணிபாம்.

சங்கப் புலவர் குழுவில் மருத்துவன் தாமோதரனர் ஓர் உறுப் பினராக இருந்தார். அவர் திருவள்ளுவமாலையில் அடியில் குறித்த பாட்டைப்பாடியுள்ளார்.

“ சீந்திநீர்க் கண்டஞ் சிறுசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்து தீர்வுசாத் தற்கு ”.

இதனால் மருத்துவர்கள் அரசனவையி லிருந்தார்கள் என்பதையும் அரசர்க்குரிய ஐம்பெருங் குழுவினருள் மருத்துவரும் ஒரு குழுவினராவர் என்பதையும் அறிகிறோம்.

திருவள்ளுவர் அவரியற்றிய குறளில் பிணியணுகா விதியையும் வளிமுதலிய முக்குற்றங்கள் மிகினுங் குறையினும் நோய் செய்யும் என்பதையும் மருத்துவம் நாற்பகுதியை யுடைய தென்பதையும், நோயறிவிதம், அதன் காரணம், அதன் மருத்துவம், நோயளவு, கால அளவு, நோயாளியின் வன்மைக்குத் தக பரிகரிக்கும் வகை முதலியவைகளையும் விளக்க மருந்தென ஓர் அதிகாரத்தை அமைத்திருக்கின்றார். அதில் சில பாக்கள் வருமாறு:—

"மிகினுங் குறையினு நோய் செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று"
"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்"
"நோய்நாடி நோய்முதனாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"
"உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்"
உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து".

உடலின் உறுப்புகள் வன்மை குறைந்த விடத்து அதை யீடு செய்வதற்குப் பிற உயிர்களின் அவ்வவ்வுறுப்பாலாய சத்துக்களை மருந்தாக வழங்குதல் தற்கால மேனாட்டு வைத்திய முறைகளில் காணலாம். இம்முறை நம்நாட்டிலிருந்த தென்பதைக் காட்டும் சாதாரணமான பழமொழி "ஊனுக்கு ஊன்" இதை கருத்துட்கொண்டே கண்ணப்ப நாயனார் ஊனுக்கு ஊன் எனும் உரை முன் கண்டு கண்ணுக்குக் கண்ணை யீடு செய்தார்.

இதனை வலியுறத்தத் திருவிளையாடற் புராண வலர்சுரன் கதை விளக்கத்தாலு மறியலாம். அதாவது அவன் பற்கள் முத்தாகவும் இரத்தம்மாணிக்கமாகவும் இவ்வாறேபிறவும் மாறின என்பதால் அவ்வப்பாகங்களில் நோய்வர அவற்றால் ஆகிய மருந்துகளை உபயோகிக்க அவ்வந்நோய் தீருமென்பதேயாம். இம் முறைகளைச் சித்த வைத்தியமாகிய தமிழ் மருத்துவத்தில் பரக்கக்காணலாம்.

திருமுக்கூடல் கோயில்கல்வெட்டில் அக்காலத்தில் அந்தக்கோயிலினிடத்தில் வைத்தியசாலை இருந்ததாகவும் அச்சாலையில் மருந்து செய்யிடமும் (Pharmacy) ஓராண்டுக்கு வேண்டிய மருந்தும், சல்லியக்கிரியை (Surgery) முதலிய செய்ததாகவும், நோயாளிகளைக் கண்காணிக்கப் பணிமகளிர் (Nurses) இருந்ததாகவும் தெரிகின்றோம்.

---

# நங்குலப் பெரியார் நாகலிங்க முனிவரர்

திருநெறித் தமிழிசை வேந்தர்
தேவாரம் புதுவை ஆ. விநாயக முதலியார்

ஒரு நாட்டின் சிறப்பும் பெருமையும் அந்நாட்டிற் றோன்றியருளும் அறிஞர் பெருமக்களாலேயே அமைகின்றன. ஒரு நாட்டின் சிறப்புக்காகக் கூறப் பெறும் காரணங்கள் பலவற்றுள்ளும் அந்நாடு தன்கண் பெரியோர்கள் பலரையுடைமையே முதன்மையானதென்று கூறலாம். இன்றொன்று நம் இந்தியப் பெருநாடு தன் பண்டை உயர் நிலையினை நோக்க எத்துணை இழிந்ததாகக் காணப்படினும் மற்றைய நாட்டினரால் ஒரு சிறிதாதல் மதிக்கப்படுதற்குக் காரணம் கோகலே, தாகூர் போன்ற பெரியோர்களையும் அறிஞர்களையும் பெற்றமையே யாகும்.

காஞ்சி நாகலிங்க முனிவரர் அவர்களைத் தமிழ்நாட்டிற் பெரும்பாலோர் நன்கு அறிந்திருப்பர். சென்ற நூற்றாண்டினும் இந் நூற்றாண்டினும் செந்தமிழ் வளர்த்த சீரியோர்களுள் இவரும் ஒருவராவர். செங்குந்த உலகம் அறியாமைப் பாழ்ங் குழியில் வீழ்ந்து அழுந்தி எழுந்திருக்க இயலாது, கல்விக்கண் இழந்து, அநாகரிக வாழ்வில், வறுமைப் பிணியால் துயருழந்து, கட்சிச் சண்டைகளில் வலியொழிந்து, குலப் பற்றற்று உணர்ச்சியின்றி மயங்கி அயர்ந்து உறங்கிக் கிடந்த நிலையில், அவர்களைத் தட்டியெழுப்பிக் கண்ணொளி நல்கி, உணர்ச்சி வருவித்துக் குழியினின்றும் எடுத்து ஏற்றிப் பகைவரை வாட்டிப், பிணியை யோட்டி வலிமையூட்டும் இளவளளாயிறென்ன எம்பெருமான் முருகன் திருவருளால் இனிது தோன்றியருளினர்கள். அவர்கள் தக்க சமயத்தில் தோன்றி அரிதின் உழைத்த பெருந்திறலினாற்றான் செங்குந்த வுலகம் விழிப்புற்று இன்று இந்நிலையிலாதல் ஓரளவு முன்னணிக்கு வருவதாயிற்று. செங்குந்த குலத்திற் றோன்றித் தமது பெருமையால் அதனை உலகுக்கு விளக்கஞ் செய்த பெருமக்கள் வரிசையில்; இந் நூற்றாண்டிற்காக முதற்கண் நிற்கும் நிலையினர் திரு. ஞானியாரடிகளும் திரு முனிவரர் அவர்களுமேயாவர். இவர்களால் செங்குந்த உலகத்திற்கு விளைந்த பெரும் புகழுக்கும் நலங்கட்கும் அளவே இல்லை.

திரு. முனிவரர் அவர்கள்தாம், இது போது செங்குந்த குலத்தினரின் நலத்தின் பொருட்டு நடைபெற்று உலவி வருஞ் "செங்குந்த மித்திரனின்" தோற்றத்திற்கு முதற் காரணமாவார்கள். நம் முனிவரர் சாதி, குலமென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் நிலை கடந்த நிலையினராயிருப்பினும், தமது எல்லையற்ற போருட்டிறத்தால், தாம் தோன்றிய குலமும், அம் மக்களும் இழிநிலையுற்றுக் கிடப்பதன்

பொருட்டு மிகவும் இரங்கிப் பரிவுகொண்டு அக்குலமும் அம் மக்களும் உயர்வெய்துதல் குறித்துச் 'செங்குந்தன்' என்னும் பெயரால் திங்கள் இதழ் ஒன்றைத் தொடங்கினார்கள். அதுவே பின்னர்ச் 'செங்குந்த மித்திரன்' என்னும் பெயரால் அவர்களால் கிழமை இதழாக வெளிவந்தது. அவர்கள் நடத்திய கிழமை இதழே, சென்னையில் அவர்களின் அரும்பெரும் முயற்சிகளினால் நிறுவப் பெற்ற 'தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கம்' என்னும் குல முன்னேற்றக் கழகத்தினரால் இதுபோது திங்கள் இதழாக நடத்தப்பெற்று வருகின்றது. அச் சங்கத்தினர், பல்லாற்றானும் நமக்குச் செய்துபோதரும் அரிய தொண்டுகளுக்கெல்லாம் முதற் காரணம் முனிவரர் அவர்களேயாவர்.

நமது நாகலிங்க முனிவரர் அவர்கள் நமது செங்குந்த குலத்திற்கேயன்றித் தமிழுக்கும் சைவத்திற்கும் செய்துள்ள அரும்பெருந் தொண்டுகள் மிகப் பலவாகும். திருவாவடுதுறை போன்ற ஒரு சில நிலையங்களில் மட்டும் சித்தாந்த சாத்திரப் பயிற்சி அரிதின் அருகி வழங்கி வந்த காலத்துத், தமிழர்கள் பலரும் பயின்று மகிழுமாறு 'மெய்கண்ட சாத்திரம்' என்னும் பெயரால் ஒரு தொகுதியாகவும், தனித்தனியாகவும் சிறந்த முறையில், சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கையும் ஆராய்ந்து வெளியிட்டு உதவியவர்கள், நம் முனிவரர் பெருந்தகையேயாவர். இவர்களே திருமுறைகள் பன்னிரண்டினையும், விநாயக புராணம், சீகாழித் தல புராணம், ஆச்சாபுரத்தல புராணம், தாயுமானார் பாடல் முதலிய எண்ணிறந்த தமிழ் நூற்களையும் வெளியிட்டனர். இதுகாறும் தமிழிற் சில அகராதிகள் வெளிவந்திருப்பினும் அவையிற்றுள் சிறந்து விளங்கும் 'காரனேஷன் தமிழ் மொழி யகராதி'யை அரசியலாரின் ஆதரவுபெற்றுத் திருந்திய சிறந்த முறையில், விடுபட்ட பல்லாயிரக் கணக்கான சொற்களைச் சேர்த்துத் திரட்டி உதவிய பெருமையும் இவர்களுக்கே உரியதாகும்.

இவர்களின் இத்தகைய அரிய பல தொண்டின் திறனையெல்லாம் அறிஞர்கள் பலரும் பெரிதும் பாராட்டியுள்ளனர். திரு. தி. பொன்னம்பலம் பிள்ளை அவர்கள் M. R. A. S. 'காஞ்சி மாநாட்டு வித்தியாப் பிரசாரகர்' என்று இவர்களைச் சிறப்பித்துப் புகழ்ந்து போற்றியுள்ளனர். திரு. பாண்டித்துரைத் தேவரவர்கள் இவர்களைப் பெரிதும் பாராட்டித் தம் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவர்களுள் ஒருவராகக் கொண்டனர். திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் உயர் திரு. அம்பலவாண தேசிகர் அவர்கள், உடன் பயின்ற தோழமையால் ஆதீனச் சார்பு தந்து, "மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்" என்று சிறப்பித்துப் போற்றி வந்தனர். அத்தொடர்பினை அவ்வாதீனத்தார் இன்றும் ஓரளவு பாராட்டி வருகின்றனர். அன்றியும் ஆங்கிலப் பேரறிஞர் டாக்டர் ஜி. யு. போப்பையர் அவர்கள், தாம் எழுதிய தமிழ் நூல்களில் அடிக் குறிப்பாக முனிவரரின் நூல்களைக் காட்டியதோடு

அமையாத (Asiatic court Review) என்னும் ஆங்கில இதழில்
புகழ்ந்தும் எழுதியுள்ளனர். இதுவேயுமன்றிச் சித்தாந்த நூற்களை
மேனாட்டிலும் பரப்பும் நோக்கங் கொண்டு மிகப் பெரிதும் உழைத்த
சைவப் பெருந் திருவாளர் நல்லசாமிப் பிள்ளை யவர்களும் நம் முனி
வரர்பாற் பேரன்பு பூண்டு மிக நெருங்கிய நண்பு கொண்டிருந்தனர்.

இங்ஙனம் 19ம் நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த தமிழறிஞர்கள்
பலரோடும் தொடர்பு கொண்டு அவர்களால் நன்கு மதிக்கற்பாடும்
பாராட்டும் பெறும் பெருந்தகைமை மிக்க, நமது நாகலிங்க முனிவர
ரின் கல்வி நலனும், தொண்டின் திறனும் விரிப்பின் அகன்றும்,
தொகுப்பின் எஞ்சியும் எல்லையின்றிச் செல்லும் தன்மையவாக;
அவர்களின் குண நலங்களோ இவையிற்றிற் கெல்லாம் மணி முடி
கவித்தாலொப்ப விளங்குகின்றன. அவர்களுடன் கலந்து பேசி மகி
ழும் பேறு எமக்கு அண்மையிற் கிடைத்தது. அதுபோது அவர்கள்
பால், நேரிற் கண்ட மிகவுயரிய குணங்கள் எம்மைப் பெரிதும் வியப்
பித்தன.

2. முருகன் திருவடிக்கண் இடையறாத பேரன்பும் பரந்து
விரிந்த பெருங் கல்வியும் எத்துணை எளியவர் மாட்டும் அன்புடன்
எளிமையிற் பழகும் இனிமையும் கேட்டார்ப் பிணித்துக் கேளாரை
யும் வேட்பிக்கும் இன்சொல் வன்மையும், பிற பல உயரிய பண்புக
ளும் இவர்களிடம் நிறைந்து விளங்குகின்றன. சுருங்கச் சொல்லின்
இவர்களை யொரு ',குணப் பெருங் குன்றம்'' என்று கூறிவிடலாம்.
"முனிவர்'' என்னும் இவர் தம் பெயர் தானே, "சிவஞான முனிவர்,''
"கச்சியப்ப முனிவர்'' "கடவுண் மாமுனிவர்'' முதலிய பெரியோர்
களின் பெயர்களை நினைவூட்டிநின்று இவர்களின் பெருந்தகைமைக்கு
அறிகுறியாக நிலவுகின்றது. "அருணகிரிநாதர்'' மீது அவர்கட்கு அள
விறந்தபேரன்பு. "கந்தரனுபூதி முதலிய நூற்களைப் பல்லாயிரக் கணக்
கிற் பதிப்பித்து இலவசமாக யாவர்க்கும் வழங்குவது இவர்கள் வழக்
கம். திருப்புகழ் பாக்களைத்திரட்டித் "திருமுறைத் திரட்டு'' என்னும்
பெயரால் வெளியிட்டுமுள்ளார்கள். "அருணகிரி நாதர்'' மீது இவர்
கள் கொண்டுள்ள பேரன்பினாலேயே அவரைப்போற் சந்த நலம்
மேலோங்கிய அரிய வண்ணப் பாடல்கள் இயற்றும் பெருந்திறனை
இவர்கள் எளிதிற் பெற்றனர். "திருவெறும்பியூர்ப் புராணம்'' தென்
கடம்பந்துறைப் பதிற்றுப்பத்தந்தாதி'' "வட பழநி இரட்டை மணி
மாலை'' "மயிலேறும்பெருமாள் மாலை'' முதலியவற்றோடு இவர்கள் இயற்
றிய "திருத்தணிகை வண்ணமஞ்சரி'' என்னும் வண்ணத்தமிழ்ச்செய்யு
னால் இவர்களின் வண்ணம் பாடும் வன்மையினை அறிஞர்கள் வியப்ப
நன்கு விளக்குவதாகும். அது பற்றியே அஃது அரங்கேறிய காலை
"திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள்'' அந்நூலைப் பாராட்டிச்
சிறப்புப்பாயிரம் கொடுத்ததுமன்றி "வண்ணக் களஞ்சியம்'' என்னும்
சிறப்புப் பெயரையும் மனமுவந் தளித்து வாழ்த்தினரென்றால்
வேறு கூறவேண்டுவது யாதுளது?

கல்விக் கடலாயும், குணமலையாயும் விளங்கும் நமது முனிவர ரவர்களால் தமிழ் நாட்டிற்கும் காஞ்சி நகரத்திற்கும் பெருமையும் பெருமித உணர்ச்சியும் ஏற்பட்டுளது. அவர்கள் ஒரு சிறந்த தமிழ்ப் புலவராகவும், சைவப் பிரசாரகராகவும், பதிப்பாசிரியராகவும், இத ழாசிரியராகவும் நாட்டின் ஆக்கங் கருதித் "தொழிற் கல்வி" என் னும் பத்திரிகை நடாத்தியதால் ஒரு நாட்டுழியராகவும் இருந்து பல் லாற்ருனும் நம்மனோர்க்குச் செய்துள்ள செயற்கரும் பெரு நன்றிகள் அளவிடற்பாலன அல்ல. அத்தகைய நம் முனிவ ரவர்களைப் போற் றும் செவ்வியும் கடப்பாடும் பெற்றுள்ளோம். ஆதலின்

> "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
> வானகமும் ஆற்றல் அரிது" எனினும்

> "எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்பவாகலின் அவர்களின் எண்பதாம் ஆண்டு நிறைவு விழாவினைச் சிறப்புறக் கொண்டாடியாதல் நம் எளிய புல்லிய அன்பினைப் புலப் படுத்தி நன்றி பாராட்டுவோமாக. அவர்கள் தமது நூருண்டு விழா வையும் கண்டு மிக மகிழுமாறு இனியும் பல்லாண்டுகள் எல்லா நலன் களும் பெற்று நன்கினிது வாழ்தல் வேண்டு மென நம் செந்தில் மேய வள்ளி மணாளன் திருவடிகளை மன மொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகின்றேன். வாழ்க! நங்குலப் பெரியார் நாகலிங்க முனிவரர்.

## அமுதக் கலைதந்த அண்ணல்

இறை திருவருளால் எங்கள் இந்தியா தேசத் தாயினுதரத்தில் உற்பவமாகி எங்கணும் மெய்ஞ்ஞானவீட்டுநெறிக்கு விழைவுறும் இயல் பானு ரெவ்வெவர்க்கும் ஏற்ற உணர்வு உய்ப்புக்கு அருமருந்தன்ன அமுதமொழிக் கலைப்பூக்களை அவ்வப்போது அடுக்கடுக்காய்ச்சேர்த்து நூன்மாலை யாக்கி நண்பு காட்டிக் கொடுத்துதவ, மாண்புளோர் மனக் கழுத்தி லன்புடனணிய அதனின்றெழுந்து பரந்து கமழும் சைவ நற் கந்தத்தை ஆணவந்தனைத் தகித்த ஆன்ற அறிவுடையோர் உட்சுவா சிக்க அப்பூவினிடமாயிழியும் ஆனந்த இன்பத்தேனைச் சிற்சபேச சிந் தையால் தேனுகர் வண்டுபோல் திவ்விய சித்தாந்தப் பிரியர் களி கூர்ந்து எந்திப் புசிக்கப் பண்டைவினை நற் பெருந்தவத்தாலுற்ற அன்புக்கன்பான உணர்வுள ஆன்ற நற்பெருந்தகையே, நாகலிங்க முனியே வாழி, வாழி ; மும்முறையும் எனது வணக்கம்.

த. இராஜேஸ்வர முதலியார்,
இலங்கை.

# திணைமொழி ஐம்பது

தமிழாசிரியர், பி. சோ. சண்முகம் பிள்ளை

பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் தொன்மையானவைகளுள் ஒன்று திணைமொழி ஐம்பது என்பது. கடைச் சங்ககாலம் கி. பி. 250-ஒடு முடிதல் தெளிவாயின் அக்காலத்திற்குப் பிற்பட்ட சில நூல்களும் பதினெண்கீழ்க் கணக்குள் சேர்க்கப்பட்டுள்ளன. நாற்பதும், ஐந்திணையைப் பற்றிய நான்கு நூல்களும் மூப்பாலும் சங்கத்தார் காலத்தவை என்பது தெளிவு. அவற்றுள் இந்நூலானது கண்ணன் சேந்தனர் என்பவரால் இயற்றப்பெற்றது. அவர் சாத்தந்தையார் என்னும் புலவரின் புதல்வராவர். சாத்தந்தையார் என்பவர் பரணர் காலத்துத் திகழ்ந்த சோழன் தித்தனுடைய மகனாகிய போர்வைக் கோப் பெருநற்கிள்ளியைப் புறத்தில் 80, 82ல் பாடியவராவர். அவர் காலம் கி. மு. 2ம் நூற்றாண்டின் இறுதியென ஆராய்ச்சியாளர் கருதுவதால் இந்நூலாசிரியரின் காலம் கி. மு. முதல் நூற்றாண்டில் உள்ளது என்னலாம். திணை இயல்பு மொழிகின்ற ஐம்பது பாட்டினையுடையது இந்நூல் ஆதலின் இப்பெயர்த்தாயிற்று. மொழி என்பதற்குப் பாட்டு என்று பொருள் கொள்ளலாம் எனின் ஐந்திணை இயல்பு கூறும் பாட்டுக்கள் ஐம்பதினையுடையது இந் நூல் என்பது போதரும், (1) குறிஞ்சி.

இந்நூலில் திணைகளை வரிசைப்படுத்தியிருக்கும்முறையாதெனின் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பதே. குறிஞ்சிக்குரியபூக்களாகக் காந்தள், வேங்கைமலர் என்பனவே குறிக்கப்பட்டுள்ளன. யானை, குரங்கு, பாம்பு, மான்என்பன பேசப்பட்டுள்ளன. தினைப்புனங் காத்தல் பெண்மக்களுக்கும், வில்லும் வேலும் கொண்டு வேட்டையாடல் ஆண்மக்களுக்கும் உரியன. முகில்கள் இடி முழக்கத்தோடு மலைகளில் உலாவுதல், யாழ், குழல், முழவு, இவற்றின் ஓசையோடு அருவி விழுதல், கடுவன் பலவின் பழத்தை உண்பதற்கு மந்தியை அழைத்தல், பன்றி நிலத்தில் தோண்டிய விடங்களில் வெளிப்பட்ட மணிகள் செந்நிறமாய் ஒளிர்வதால் கானவர் அவற்றைக் கனல் எனக் கருதிக் கை காய்த்தல் முதலியன இயற்கைச் செயல்களைக் குறிப்பன. வரைவு கடாதல் என்கின்ற ஒரு துறையின் சார்பாகவே குறிஞ்சித் திணைப்பாடல்கள் அமைந்துள்ளன. தோழி நேராகத் தலைவனை வரைவுகடாதலும், தலைமகள் தன் வரைவு விருப்பத்தைத் தோழிக்கு உணர்த்துதலும், தோழி தலைவன் சிறைப்புறமாக வரைவினைக் குறிப்பதும் இக் குறிஞ்சிப் பகுதியில் போந்த கருத்துக்களாகும். தோழி தலைவனை நோக்கி யானை திரியும் வழியில் இரவில் வரவேண்டாம் என்றும், தினைப்புனங் காத்தல் முடிந்துவிட்டதனால்

இச் செறிக்கப்பட்ட தலைவி வெளியே வருதல் அரிதாம் என்றும், தலைவியின் தமர் தலைவன் வரவினைக் காணின் கடுஞ்சொற் சொல்லி எதம் விளைப்பர் எனவும், களிறு இவ் வழிப் போந்தது என்று கேட்ட தலைமகனுக்கு களிறொன்றும் வரவில்லையென்று அவனை விலக்கியதாம், இரவில் தலைவன் வரின் அது அலர் விளைக்கும் என்றும் தோழி தலைவனுக்குக் கூறினார்.

தலைவி தோழியை நோக்கித் தன் மேனியிலுள்ள பசலை ஒழியுமாறும், தன் பிணி நிறம் தீர்ந்து பெருந்தோள் வளருமாறும், வேங்கைமலர்ந்து வண்டார்க்கும் பொழுதில் தலைவன் வருவானோ என வினவினள். இரக்கமுடைய தலைவன் தலைவியின் வளைநெகிழ்வதையறிந்து வருவானெனவும், அன்னை களவொழுக்கம் உணர்ந்து வெளிச் செல்வதைக் கடிந்ததை உணராது தலைமகன் ஊடுவானோ எனவும், தலைமகன் சிறைப்புறமாய காலை வரைவு வேண்டும் குறிப்பால் தோழி தலைவிக்கு உரைத்தனள்.

காந்தள் முகை விரியுங் காலத்து மந்திகள் மணம்புரியும் காலம் வந்ததென்றெண்ணி மகிழ்தலைப் போலத் தலைவியும் தலைவன் வரைவினை எண்ணி மகிழ்வாளென்ற கருத்து உள்ளுறையாகக் குறிஞ்சித் திணைக்குரியது இரண்டாவது பாட்டில் காணப்படும். பலவின் பழத்தை யுண்பதற்குக் கடுவன் மந்தியை அழைப்பதுபோலத் தலைவன் இல்லின்பம் துய்த்தற்குத் தலைவியை அடைதல் வேண்டும் என்ற குறிப்பும் பத்தாம் பாட்டில் அமைந்துள்ளது. தலைவன் களவொழுக்கம் நடத்த இயலாமைக் காரணத்தால் வெகுளல் தக்கதன்று என்ற குறிப்பும் அதன்கண் காணப்படும். தலைவி தன் நோய் நீங்கும்படி உரிய காலத்தில் தலைவன் வருவானோ, வருதல் பொய்ப்பானோ என்று ஐயுறுதலை நீக்கி வற்புறுத்தும் பொருட்டுத் தோழி காந்தளைப் பார்த்து இரக்கம் கொள்ளுகின்ற மக்கள் உறையும் நாட்டினையுடையவன் தலைவன் என்று கூறும் முகத்தால் தலைவன் தலைவியிடம் இரக்கமுடையவன் என்பதைக் குறித்தமை இப் பகுதியின் மூன்றாவது பாட்டில் காணப்படும். குளிர்ந்த மணியைக் கனலெனக் கானவர் கருதுதல் போல இரக்க முள்ள தலைவன் தினைப் புனத்துள் வந்தால் கானவர் அவனைக் கடிவாரோ என்று தலைவி கருதிய குறிப்பு இதன் நான்காம் பாடலுட் காணப்படும். இதன் 5, 6-ம் பாடல்களுள் காவல் மிகுதியைத் தலைவற்குத் தோழி கூறினள். இதன் 7-வது பாட்டினுள் அருவியில் ஓசையிடுதல்போல களவொழுக்கத்தில் அலர் தோன்றி மிகும் என்பது குறிக்கப்பெற்றுள்ளது. 8-வது பாட்டினுள்ளும் 9-வது பாட்டினுள்ளும் வரைவுக்குரிய காலம் இன்னது என்பது குறிக்கப்பட்டது. இதன் 10வது பாட்டினுள் களவுநிகழ இடமில்லாத விடத்துக் கற்பொழுக்கம் நடத்தலே சிறந்ததென்பது உணர்த்தப்பட்டது.

## பாலை

பாலையானது நீரற்று எரிபரந்த கானமாய்ப் பரல் கற்களை யுடையதாய்ப் புறவும் புல்லூறும் போர்புரியும் இடமாய் ஆறலைப் போர் கோட்டம் உடைத்தாய்க் கதிரவன் வெம்மையினால் மூங்கிற் கணுக்கள் உடைபட்டு முத்தினைச் சொரியுமிடமாய், நீரின் பொருட்டு மான் வருந்துமிடமாய்ப் பருந்துக் கூட்டங்கள் வட்டமிடும் தன் மையது என்பது இந்நூலுள் உணர்த்தப்பட்டது. தான் பிரிந் தால் தலைமகள் ஆற்றுவாளோ என்று தலைமகன் தோழியை வினவ, அவள் ஆற்றுமையை நும்மினும் யார் அறிவார் என்று தோழி விடை யிறுத்தாள். அவர் பொருள்வயிற் சென்றமையை உணர்ந்த தலைவி தலைவன் பொருள்வயிற் பிரிதல் பொய்த்தமைக்கு ஈடாகும் என்றும், தலைவன் செல்லுகின்ற வழியில் மூங்கிலினின்றும் உதிரும் முத்துக் கள் என் வளையல்கள் போலத் தோன்றித் தலைவனைத் தடுக்குமோ என்றும், மானைப் பார்த்துக் கலை இரங்குவதைக் கண்டும், வழியின் அருமை நோக்கியும், ஆறலைப்போரால் வரும் இடையூற்றைக் கருதி யும், மேற்செல்லாது தலைவன் இடைச் சுரத்துத் தங்குவரோ என் றும், தலைவி தோழிக்குக் கூறும் கருத்துக்கள் சில பாடல்களில் வந் துள்ளன. தலைவன் பிரிவினால் தலைவி மேனி பசத்தலும், தோள் மெலிந்து வளை கழலுதலும், இதனுள்ளும் காணப்படும். இள வேனிற் காலத்துத் தலைவன் வருவான் என்று எதிர்பார்த்த தலைவி காலத்திற்குரிய பூக்கள் மலர்ந்தும், குயில் கூவியும் தலைவன் வாராமை கண்டு அவர் சொல் பொய்த்தது என்று தோழிக்குக் கூறி யது பருவங்கண்டழிதல் எனப்படும். எதிர்பார்த்திருக்கும் இடம் முல்லையாதலால் அந்நிலத்திற்குரிய குருந்தும், பாங்கரும், மராமும், தோன்றியும் மலர்ந்தன என்றது காண்க. கலத்திற் சென்ற தலைவ னுக்கு நெய்த னிலத்திலுள்ள புன்னை பொரிபோலப் பூச்சொரிதலும், புன்னையங் காவினுள் குயில் கூவுதலும், குறித்த காலத்தைத் தலைவ னுக்கு நினைப்பூட்டுமென்று தலைவி கூறினள்.

உடன் போக்கிலே தலைவியைத் தலைமகன் ஆற்றுவித்தற் பொருட்டுத் தாங்கள் செல்லும் வழியில் மராஅமரமும், துணு மர மும் பூத்துச் சொரிகின்றன என்றும், அழகிய வண்டினங்கள் பாலைப் பண்ணைப் பாடுகின்றன என்றும் மொழிந்தனன். உடன் போக்கிற் சென்ற தலைவியை நினைந்து வில் வேடருக்கும் பருந்தின் நிழலுக்கும் அஞ்சக்கூடிய தன் மகள் கூற்றுப் போன்ற தலைவனோடு எவ்வாறு ஆறுதலோடு செல்லக்கூடும் என்று நற்றாய் இரங்கிய பகுதி அத் திணைக்குரிய இறுதிப் பாட்டில் காண்க.

## முல்லை

முல்லைத் திணையுள் காதலர் வரவைப் பற்றித் தோழி உறுதி கூறிய கருத்திற்கு எடுத்துக்காட்டாகவே பாடல்கள் அமைந்துள்

ளன. தலைவன் வந்தார் என்றும், வருவார் என்றும் பருவம் காட்டும் என்று தோழி வற்புறுத்தினர். காயா என்னும் மரம் மை போலப் பூப்பதும், குருக்கத்தி பெண்டிர் முறுவல் போல் அழகு கொள்ளுதலும், காந்தள் அடுப்போல அரும்புவதும் முல்லைகள் பல நிற அரும்புகளைத் தோற்றுவிப்பதும், கலைபிணையோடு புரண்டு விளையாடுவதும், ஆயர் ஆம்பற் குழல் ஒலிப்பதும், காந்தளின் அரும்புபாம்பின் படம்போலத் தோன்றுவதும் முல்லைக் கருப்பொருளின் பாலனவாகும். கருமுகில் கடல்நீர் பருகி முரசுபோல் முழங்கி இடி இடித்துத் தண்ணீர் பொழிவதும், காற்றினால் மேகங்கள் வானில் உயர்வதும், மாலைக் காலத்தில் இருள் மிகுவதும், நாகங்கள் இடிக்குரலைக் கேட்டு வருந்துவதும், அருவிகள் பெருகி அதிர்வதும், ஆனிரைகள் தீம்பால் தருவதும் கார்காலத்தின் சிறப்பியல்களாகும். தலைவன் வந்தமையால் தலைவி தோள் திகழும் என்றும், பசலை ஒழியும் என்றும், வளையல் கழலா என்றும் தோழி தலைமகளுக்கு ஆறுதல் கூறி வளம்பொருந்திய முல்லை நிலத்தைச் சென்று காண வேண்டும் எனத் தலைவிக்குக் கூறினமை இத்திணைப் பாட்டுக்களின் தொகைக் கருத்தாகும்.

## மருதம்

மருதத் திணைக்குரிய பாடல்கள் பெரும்பான்மையும் தலைவியும் தோழியும் வாயின் மறுப்பதாகவே யமைந்துள்ளன. தோழி வாயில் நேர்ந்தமைக்கு ஒரு பாட்டுவந்துள்ளது. இறுதிப் பாட்டில் தலைவன் இன்ன பூ அணிந்து வரவேண்டும் என்று தோழி கூறும் துறை அமைந்துள்ளது. வயல்களில் எருமைகள் படிவதும், தொழிலாளர்கள் பொருட்டுப் பறையொலித்தலும், மருத மரத்தினின்றும் உதிரும் பூந்தாது வயலிலுள்ள நிலப்பூக்களின் மேல் படிவதும், வளமான கதிர்களை நெற்பயிர்கள் ஈனுவதும், வேனிற் பருவத்தில் மலர்களில் வண்டூதுவதும், வயல்களில் செந்தாமரைகள் மலர்வதும், குளங்களிலுள்ள நீலப் பூக்களை வாளைப் பெடைகள் பற்றுவதும், காஞ்சிமரம் வளர்வதும் மருதநிலக் கருப்பொருள்களின் செயலாகும். தலைமகள் வாயில் மறுக்குமிடத்துத் தன் தோள்கள் தலைவனுக்கு உரியன என்பதேயன்றி, அவன் வந்து அருள்செய்ய வேண்டுவதில்லை என்றும், பரத்தையர்க்கு இன்பத்தையும் தனக்குப் பசலை நோயினையும் இணைத்தான் என்றும், தன்பால் இளநலம் திகழ்ந்தகாலை பரத்தையர்ப் பிரியாதிருந்தான் என்றும், அஃதொன் றனையுமே கருதிப் பரத்தையர்ப் பிரிந்தான் என்றும், அவன் கைவிட்டமையால், தான் கரும்பின் கோதுபோலாயினதாகவும் கூறினள். பாணனைக் கூலிக்குழைப்பவன் என்றும், பலகால் வந்து பொய்யாயின சொல்லிக் கூறுதல் அவனுக்குத் தகாதென்றும் அவள் கடிந்தனள். தலைவன் கற்புநிலையில் நில்லாது மனவலி குன்

றிப் பரத்தையர் பொதுநலத்தைக் கூறுகின்றவர் சொற் கேட்டு அவர் பால் ஓடுகின்றவன் என்ற கருத்து உள்ளுறையுவமத்தால் முதற்பாட்டில் விளக்கப்பட்டுள்ளது. கூனியண்டு வெளிற் பருவத்தே எதிர்ப்பட்ட மலர்களையெல்லாம் ஊதுவது போலத் தலைவனும் எதிர்ப்பட்ட பரத்தையர் பால்செல்லுவன் என்ற கருத்து உள்ளுறையாய் ஐந்தாம் பாட்டில் அமைந்துளது. பரத்தையரும் தலைவனைப் பற்றுதல் வாளை மீனின் பெண்ணினம் தமக்குரியன வல்லாத நீலப் பூக்களைப் பற்றுவதுபோலாகும் என்ற குறிப்பு இதன் ஒன்பதாவது பாட்டிலமைந்துளது.

தோழி வாயின் மறுக்குமிடத்துத் தலைமகனது நட்புக் கடையாயார் நட்புப்போல்வது என்று கழறினள். தோழி வாயில் நேருங்கால் தலைவனை நோக்கித் தலைவிக்கு நன்னலம் தந்தவனும் நீயே. கொண்டவனும் நீயே. உன்னை நோவதால் பயன் என் என்று கூறினள். தோழியின் கூற்றுயமைந்த இறுதிப் பாட்டில் தலைவியின் ஊரார்க்குரிய மலராகிய நீலத்தைத் தொடுத்தல் வேண்டாமென்றும், தாமரைப் பூத் தலைவியின் ஐயன்மார்க்குரியது என்றும் கூறியிருத்தல் சேட்படைபோல் தோன்றுகிறது.

## நெய்தல்

நெய்தல் நிலத்துக்குரிய பாட்டுக்களில் பல நேராகவும், குறிப்பாகவும் தோழி தலைவனை வரைவு கடாவுதல் பொருட்டாக அமைந்துள்ளன. 9-வது பாட்டு தலைமகன் பாங்கற்குத் தலைவியின் சிறப்பினைக் கூறித் தன் நெஞ்சம் வருந்துவதைத் தெரிவிக்கும் கருத்துடையதாய்த் திகழ்கின்றது. மயிலோ, கடல் தெய்வமோ, மக்களுள் கன்னியோ என்று ஐயுறத் தக்க ஒரு பெண்ணைக் குயில் கூவும் கடற்கரையில் வளரும் ஞாழற்பொழிலில் தான் நோக்கியதாகவும் அவளைக் கண்ட கண்ணைப் பார்க்கிலும் தன் நெஞ்சம் மிக வருந்துவதாகவும் தலைவன் கூறியது காண்க.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவியை நோக்கித் தலைவனால் செய்யப்பட்ட குறிகள் தப்பின, ஆதலால் வரைந்து கோடலே சிறந்ததென்று குறிப்பித்தமை இத்திணைக்குரிய 2வது பாட்டிலும், மூன்றுவது பாட்டிலும் காணப்படும். இறுதிப் பாட்டினுள் தோழி தலைவனைப் பார்த்து வரைவு கடாவு முகத்தால் சித்திரம்போலச் செயலற்றிருக்கும் தலைவிக்கு நின் மார்பினை அருள வேண்டுமென்று தலைவனுக்குரைத்தாள். நான்காவது பாட்டினுள் நற்குணம் குறைவுபடாத தலைவியை வரையா நினைத்தல் தக்கதன்று என்று தோழி தலைவனைக் கழறினள். 5, 6ம் பாட்டுக்களில் தலைவியின் நோய் மிகுதியினால் அவள் அலமருதலும் நிறங்கெடுதலும் கூறப்பட்டன. ஏழாவது பாட்டினுள் தலைவி தன் வளை கழலுவது

தலைவன் துறந்தமையைக் குறிக்குமோ வென்று தோழியை வினவினள். எட்டாவது பாட்டினுள் தலைவன் மாலையில் வருவானென்று தோழி தலைவிக்குக் கூறி அவளை ஆற்றுவித்தனள்.

நெய்தல் நிலத்தில் தாழை சூழ்ந்த சோலையிருப்பதும், முடைத் தாழைகள் முத்துப்போலரும்பு ஈனுவதும், புன்னை வளர்ந்து ஓங்கியிருப்பதும், கடலின் ஓதமானது சுறா மீனைக் கொணர்ந்து கழியிடைப் பெய்தலால் அங்குள்ள இறால் மீன்கள் சுழலுவதும், கடல்குளித்துக் கொணர்ந்த நல்ல முத்துக்களைப் பரதவர் பெண்கள் மாலையாகக் கோத்து விளையாடுவதும், கழியிலுள்ள மீன்களைப் பறவைகள் எடுத்துச் செல்வதும், கடற்கரை மணல்மேல் நண்டுகள் பரந்து விளையாடுவதும் ஞாழல் பொழிலாய்த் திகழ்வதும், பவளமும் பளிங்கும் கலந்து கிடப்பதும் கருப்பொருட் செயலாகக் குறிக்கப்பட்டுள்ளன.

இதன்கண் இந்நூலாசிரியர் காலமும் ஒவ்வொரு திணைக்கும் உரிய கருப்பொருள்களும், உரிப்பொருள் அமைப்பும், உள்ளுறை அமைப்பும், துறை வகுப்பும் ஒருவாறு ஆய்ந்து கூறப்பட்டன.

## முனிவர் பெருந்தகை

நமது தமிழ் நாட்டிற்கு உள்ள ஒரு பெருங் குறை நமது புலவர்களைத் தகுமுறை அறிந்து போற்றாமையே. அது இத்தகைய விழாக்களால் ஒருவாறு நீங்குகிறது. முனிவர் பெருந்தகை பொதுவாகச் சைவத்திற்கும், தமிழிற்கும், சிறப்பாகச் சமூகத்திற்கும் செய்த நற்றொண்டுகள் பல. இவ் விழாத்தலைவர் தமது 80-ஆம் ஆண்டில், அவர் நடந்து செல்லும் வீர நடை, கிணீர் எனப்பேசும் அழுத்தமான சொற்கள் என்போன்ற இளைஞன் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன. இத்தகைய வீரப்புலவர், முனிவர், பதிப்பாசிரியர், சிறந்த இதழ்களின் ஆசிரியராக விளங்கிய இப் பெரியாருக்கு முத்துவிழா தமிழர் கொண்டாடத் துவங்கியது அண்மையில் தமிழ் அரியாசனம் வகிக்கும் என்பதற்கு ஒரு சிறந்த அறிகுறியேயாகும்.

தமிழ் சிறக்க, சைவம் ஓங்குக, சமூகசேவை விரிவடைய முனிவர் இன்னும் பல் ஆண்டுகள் வாழுமாறு தமிழ் அன்னை ஆசி கூறட்டும்.

சிறுவை, நச்சினார்க்கினியன்,
அமைச்சன். நக்கீரர் கழகம்.

# கண்கொள்ளாக் காட்சி

வல்லை. பால சுப்பிரமணியன், பி. ஏ.

1939ம் ஆண்டு ஜூலை திங்களில் தமிழ் நாட்டிலே மதுரைக் கோயிலும் வேறு சில கோயில்களும் 'தீண்டாதாருக்குத்' திறந்து விடப் பட்டன வென்பது நேயர்கள் நினைவிலிருக்கலாம். அப்போது வருணாசிரமப் பேய் பிடித்து ஆடும் போலிச் சநாதனிகளும் வைதிகர்களும், "காலம் கெட்டுப் போச்சு! மதத்துக்கு ஆபத்து வந்து விட்டது. கலிகாலத்தில் எல்லாம் தலைகீழாய் நிற்கின்றன. வருணாசிரமம் போய் விட்டது. பறையன் கோயிலுக்குள் நுழைந்து விட்டான், ஆதலால் கடவுள் கோயிலை விட்டு வெளியே போய்விட்டார்......ஹா... ஹூ..." என்றெல்லாம் கூரடியாய்க் கத்தினார்கள்.

சநாதனிகளுள்ளும் வைதிகர்களுள்ளும், 'தீண்டாதார்' கோயில் நுழைவால் பல கெடுதிகள் சம்பவிக்குமென்று மனமார எண்ணுகிறவர்களும் உண்டு. இவர்களது எண்ணத்துக்கு நாம் மதிப்பு கொடுக்கக் கடமைப் பட்டவர்களாகிறோம். எனினும், இவர்கள் அவ்வெண்ணம் நீங்கி நல்வழிப்படமாட்டார்களா வென்று ஒவ்வொரு கணமும் இறைவனை வேண்டுகிறோம்.

தம்மை உண்மை யன்போடு வழிபடும் அடியார்களுக்கு மனக் கவலையோ ஐயமோ தோன்றினால், அதை இறைவன் நேராகவோ மறைமுகமாகவோ தீர்த்து வைப்பான் என்று பழங்கதைகளில் படித்திருக்கிறோம். அவ்வகையில், தெய்வபக்தியுள்ள உண்மை வைதிகர்களுக்கு இப்போது ஏற்பட்டுள்ள மனக்கவலையையும் ஐயத்தையும் போக்க அருளுருவான இறைவன் ஏதாகிலும் செய்யக் கூடாதா என்று நான் குறையிரந்து நின்ற போது, "இப்போது செய்வானேன் முன்பே செய்து காட்டியிருக்கிறேன்" என்னும் வானொலி என் கன்னத்திலறைந்தது போல் கேட்டது. அப்போது தான், பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டிலே சிகாளத்தி மலையில் சிவபெருமானுக்கு உண்மை யன்போடு வழிபாடாற்றி வந்த சிவகோசரியார் என்னும் ஆதிசைவ அந்தணரிடம் என் மனம் தாவியது.

இன்று, "களங்க மற்ற உண்மை வைதிகர்கள் சிலரின் மனத்தைக் குழப்பும், கவலையும் ஐயமுந்தான் அன்று சிவ கோசரியாருடைய உள்ளத்தையும் குழப்பி அவரை மனம் புழுங்கச் செய்தது. அவர்பாலுள்ள பெருங் கருணையினால் இறைவன் அவரை எவ்வாறு தெருட்டினானென்று சுருக்கமாய் விளக்குவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்:

* * *

காளத்தி வேடராய கண்ணப்பரது வரலாறு தமிழ் நாட்டின் மிகப் பழைய வரலாறுகளில் ஒன்றாகும். கண்ணப்பர் அன்று முதல் இன்றளவும் தமிழ் நாட்டில் பயன் கருதா அன்புக்கு எடுத்துக் காட்டாகவும் எல்லையாகவும் மதித்துப் பாராட்டப் படுகிறார். என்னையு முருக்கும் திருவாசகம் பாடிய மணிவாசகப் பெருமானே கண்ணப்பருடைய தலையன்புக்கு ஒப்பாக வேறொருவர் அன்பைச் சொல்ல முடியாதென்று அறுதியிட்டுக் கூறுவாரானால், நாம் அவ்வன்பைப் பற்றி என்ன வென்று சொல்வது! மாணிக்க வாசகர் மாத்திரமா, நக்கீரர், கல்லாடர், தேவாரம் பாடிய மூவர், பட்டினத்தடிகள் சேக்கிழார், சிவப்பிரகாச சுவாமிகள், சிவஞான முனிவர், அருணகிரிநாதர் ,உய்ய வந்த தேவர், குமரகுருபரர், இராமலிங்க அடிகள், ஆதி சங்கராச்சாரியார் முதலியவர்களெல்லாம் கண்ணப்பரது அன்பை நிறைந்த மொழிகளால் பாராட்டு கிறார்கள்.

கண்ணப்பருடைய வரலாறு சைவர்களுக்கு மட்டும் உரியதென்று கருதப் படவில்லை. வைணவர்கள் உட்பட எல்லாச் சமயத்தினரும் பின்பற்றுதற் குரிய சிறந்த அன்பு நெறியை விளக்கினவராக அவர் கருதப்பட்டார். ஏன் அப்படிச் சொல்கிறேன்? பரம ராம பக்தனும் கங்கை வேடனுமாகிய குகனை உருவாக்கவந்த கம்பர் தமது முதனூலாசிரியராகிய வான்மீகி காட்டிய நெறியை விடுத்து, காளத்தி வேடராகிய கண்ணப்பரைத்தான் சேக்கிழாரிட மிருந்து இரவல் வாங்க வேண்டியிருந்தது. இதில் அவர் ஒளிவு மறைவு ஒன்றும் வைத்துக்கொள்ளவில்லை. அவர் செய்த தெல்லாம் இது தான். 'கண்ணப்பர்' என்னும் பெயரை எடுத்து விட்டு 'குகன்' என்னும் பெயர் சூட்டினார்: பொன் முகலிக் கரையிருந்த கண்ணப்பரை எடுத்துக் கங்கைக் கரையில் வைத்து விட்டார். இதைத் தவிர மற்றப்படி, கண்ணப்பர் பேசியதையே குகன் பேசினான்; கண்ணப்பர் செய்ததையே குகன் செய்தான் அல்லது செய்ய நினைத்தான் என்னும் விவரங்களெல்லாம், சேக்கிழாரது கண்ணப்ப நாயனார் புராணத்தையும் கம்பராமாயணக் குகப் படலத்தையும் ஒரு சிறிது ஒப்பு நோக்குவார்க்கும் நன்கு விளங்காமற் போகாது.

இங்ஙனம் கலைகளில் மிகுதியும் பேசப்படுகிறார் என்னும் கருத்தும் தொனிக்க, "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்" என்று நம்பியாரூரர் நயம்பட வுரைத்தார் என்றும் கொள்ளலாம்.

தமிழ் நாட்டுக்கே சொந்தமானதும் தமிழர்களுக் கெல்லாம் தெரிந்ததுமான கண்ணப்பர் கதையை மிக விரிவாகச் சொல்லி அன்பர்கள் காலத்தையும் இம்மலரின் ஏடுகளையும் வீணாக்க நான் ஆசைப் படவில்லை. வேண்டிய பகுதியை மட்டும் சொல்லுவேன்.

திண்ணனார் (இதுதான் கண்ணப்பருடைய இயற்பெயரும் பிள்ளைத்திருநாமமும்) நாணன் என்னும் வேட்டுவத் துணைவனோடு

குடுமித் தேவரைக் கண்டு வழிபட, சீகாளத்தி மலைமீது ஏறினர்; அப்படி ஏறும்போதே தம்மை இதுகாறும் பற்றி இருந்த பெருஞ் சுமை வெகு விரைவில் குறைவதை அறிந்தார்; தலையன்பு மேலும் வலித்திழுக்க, காந்தத்தைக் கண்ட இரும்புபோல் வேகமாய் ஓடி மலையுச்சியை அடைந்து, குடுமித் தேவரைக் கண்டார். நீண்ட நாள் தான் அருமைக் குழந்தையைப் பிரிந்திருந்து மீண்டும் அதனைக் கண்டெடுத்த தாயின் நிலையைத் திண்ணனர் அடைந்தார்; உடனே குடுமித் தேவரைக் கட்டியணைத்துத் தழுவி மோந்து நின்ருர்; நெடுங்காலம் பிரிந்திருந்த தனது கன்றை விட்டுப் பிரிய மனமில்லாதபசுவைப்போலவே, கண்ணப்பரும் தாம் புதிதாய்க் கண்டெடுத்த தமது ஆத்ம நாயகரைப் பிரிய மனமில்லாதவரானர். அவருடைய நிலையைச் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானல், மரப்பொந்தினை விடாப்பிடியாய்ப் பிடித்துக் கொண்டு நீங்காத உடும்பைப்போ லிருந்தாரென்று வேட்டுவப் பரிபாஷையிலே கூறலாம்.

பிறகு அவர் நாணனிடமிருந்து குடுமித்தேவருக்கு விருப்பமா னவை எது எது வென்று தெரிந்து கொண்டு மலையடிவாரத்துக்கு வந்தார்; இறைவனுக்குத் திருமுழுக் காட்டுவதற்காகப் பொன் முகலியின் நீரை வாயில் நிரப்பிக் கொண்டார்; அவனுக்கு ஒப்பனை செய்வதற்காகப் பச்சிலைகளையும் மலர்களையும் பறித்துத் தமது தலை மயிரில் செருகிக்கொண்டார்; அவனுடைய உணவுக்காகப் பன்றி யிறைச்சியில் எது சுவையுள்ளதென்று தமது நாவில் வைத்து அதக்கிப் பார்த்து, அதில் தேன் பெய்து ஒரு கல்லையில் எடுத்துக் கொண்டார்; மற்ருெரு கையில் வில்லும் அம்புமாக மலைமீது ஏறி னர்; தமது இரண்டு கையிலும் பொருள்கள் இருந்தபடியால் செருப்புக்காலால் இறைவன் தலைமீதிருந்த உலர்ந்து போன பச்சிலை களை அகற்றினர்; வாயிலிருந்த நீரை உமிழ்ந்து இறைவனுக்குத் திருமுழுக்காட்டினர்; தமது மயிரில் செருகியிருந்த பூவைக் கடவுள் திருமுடிமேல் எறிந்தார்; தாம் சுவைகண்டறிந்த பன்றி யிறைச்சியை இறைவன் திருமுன் படைத்து அருந்துமாறு வேண்டிக் கொண் டார்; பிறகு இறைவன் பக்கலில் வில்லும் அம்பும் ஏந்திய கையராய் இரவெல்லாம் தூங்காது காவல்புரிந்து மறுநாள் காலை முன்போலவே இறைவனுக்கு உணவு தேடப் பிரியா விடைபெற்று மலையடிவாரத்துக் குப் போனர்.

திண்ணனர் போன பிறகு, அங்கே நாடோறும் ஆகம முறைப் படி இறைவனுக்கு வழிபாடாற்றும் ஆதிசைவ அந்தணரான சிவ கோசரியார் வந்தார்.

அந்தப் பழைய காலத்திலே காளத்தி மலையில் குடுமித் தேவர் சந்நிதானம் ஒரு நாடக அரங்காகத் தோற்றமளித்தது. நாடக மேடையில் நடிகர்கள் மட்டும் நடித்தார்களே யன்றி, அப்போது

அதை எவருமே பார்க்கவில்லை. எவரோ சொல்லிவைத்து முன் ஏற்பாடு செய்ததுபோல், அவ்வளவு ஒழுங்காக, திண்ணனார் சென்றதும் சிவ கோசரியாரும், சிவகோசரியார் சென்றதும் திண்ணனாரும் நாடக அரங் கில் தோன்றுகிறார்கள். இவர்கள் தப்பித்தவறியும் ஒருவரையொரு வர் பார்த்துவிடவில்லை! அப்படிப் பார்த்திருந்தால் என்ன அனர்த் தம் விளைந்திருக்குமோ தெரியாது. அந்த நாடகத்தை அப்போது எவரும் பார்க்கவில்லை யாயினும் அதன் பின்பு தலைமுறை தலைமுறை யாகக் கோடிக் கணக்கான தமிழர்கள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுக ளாகத் தங்கள் மனக் கண்ணினால் பார்த்தார்கள், பார்க்கிறார்கள், பார்ப்பார்கள். இது நிற்க;

அங்கே வந்த சிவ கோசரியார் இறைவன் திருமுன் எலும்பும் தோலும் மாமிசமும் மயிரும் சிதறி யிருப்பதைக் கண்டு நெஞ்சம் துணுக்குற்றார்; கோயில் தீட்டுப் பட்டுவிட்டதாக நினைத்து மனம் புழுங்கினார்; இந்த அலங்கோலத்தைக் காணும் தமது தீவினையை நொந்துகொண்டார்; செய்யத் தகாத இக் காரியத்தைச் செய்தவர் கள் எவரும் அங்கே காணப்படாமையால், பொல்லாத வேட்டுவர் களோ விலங்குகளோ அறியாமற் செய்த காரியம் இது எனத் தேறி னார்; கோயிலைத் துப்புரவு செய்து ஆகம முறைப்படித் தமது வழி பாடாற்றி வீடு சென்றார்.

ஒருநாள் இரண்டு நாளென்றால் சிவகோசரியார் பொறுப்பார். அவர் வந்து கோயிலைப் புனிதமாக்கி வழிபாடாற்றுவது, அவர் சென்றபின்பு கண்ணுக்குப் புலப்படாத யாரோ ஒருவன் கோயிலை அசுசியாக்குவது—இப்படியே ஐந்து நாட்கள் நடந்தன. பொறு மைக்கு ஓர் எல்லை உண்டன்றோ? உண்மை யன்பரான சிவகோசரி யார் தாங்க முடியாத மனக்கவலை யெய்தித் தம் செயலற்று, வீடு திரும்பி, "இதற்குக் கழுவாய் ஒன்று மில்லையா? என்று இறைவன் திருவருளை நினைத்துப் படுத்துறங்கிவிட்டார்.

இங்கேதான் ஆகமநெறிக்கும் அன்புநெறிக்கும்—அதாவது ஞான மார்க்கத்துக்கும் பக்திமார்க்கத்துக்கும்—போராட்டம் நடப் பதுபோல் காணப்படுகிறது. இது நம் நாட்டில் படித்தவர்களிடையே நடந்து வரும் ஒரு பழம் போராட்டமாகும். சிலர் அறிவு நெறி சிறந்ததென்பார்கள்; வேறு சிலர் அன்பு நெறிதான் சிறந்ததென் பார்கள். படித்த நூல்களின் சாற்றைவிட்டுவிட்டுச் சக்கையைக் குரங்குப்பிடியாய்ப் பிடித்துக்கொள்ளும் ஒரு சிலரே இப்போராட் டத்தில் மும்முரமாய் ஈடுபடுவார்கள். உண்மையில் இத்தகைய போராட்டத்துக்கு இடமேயில்லை. முதலிலேயே அன்பு நெறியை மேற்கொண்டவர்கள் அறிவு நெறியில் செல்லவேண்டியதில்லை. ஆனால், அறிவு நெறியைக் கடைப்பிடித்தவர்கள், அதன் பலனாக அன்பு நெறியை மேற்கொண்டபிறகுதான் தங்கள் பிறவிப் பயனை எய்தவேண்டும். இதனையேதான் அருளுருவான இறைவன் சிவகோ சரியாருக்குத் தெளிவுபடுத்த நினைத்தார் போலும்.

இறைவன் சிவகோசரியார் கனவில் தோன்றித் திருவாய் மலர்ந் தருளியதைச் சேக்கிழாரே கூறும்படி விட்டுவிடுகிறோம்.

"வன்திறல் வேடுவனென்றும் மற்றவனை நீ நினையேல்,
நன்றவன்றன் செயல்தன்னை நாமுரைப்பக்கேள்...

"அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம் என்றும்
அவனுடைய நிலையிவ்வாறு அறி நீ—"

"உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ ஒளித்திருந்தால்,
எனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாம் காண்கின்றாய்;
மனக்கவலை யொழிக............"

ஆகவே இறைவன் பணித்தருளியபடி சிவகோசரியார் மறுநாள் அதிகாலையிலெழுந்து நீராடி நித்தியநியமங்களை முடித்து இறைவனுக்கு வழிபாடாற்றிச் சிவலிங்கத்தின் பின்புறமாக ஒளித்திருந்தார். இனியும் இக்கதையை நான் விரிவாகச் சொல்லிக்கொண்டு போக வேண்டியதில்லை. நடந்தவையெல்லாம் அன்பர்களுக்கு நன்றாகத் தெரியும். ஐந்து நாள்களாக அன்ன ஆகாரமின்றி இராப் பகலாய் விழித்திருந்து குடுமித்தேவரைப் பாதுகாத்துவந்த திண்ணனார் ஆறும் நாள் காலை வழக்கம்போல் மலையடிவாரத்துக்குச் சென்று தேன்பெய்த இறைச்சியோடும், தலையில் பச்சிலையோடும், வாயில் பொன்முகலி நீரோடும், கையில் அம்பு வில்லோடும் இறைவன் சந்நிதானத்துக்கு வந்தார். அப்போது சிவலிங்கத்தின் கண் ஒன்றில் செந்நீர் வடிந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட திண்ணனார் அடைந்த மனக்கலக்கத்தை நான் சொல்லித் தெரிந்து கொள்வதை விட அன்பர்கள் தங்கள் கற்பனையில் ஊகித்தறிந்து கொள்வது சாலச் சிறந்தது.

திண்ணனார் செயலற்றுப்போனார். கையிலிருந்த பொருள்களையெல்லாம் அப்படியப்படியே போட்டுவிட்டார். தாம் கண்ணினும் அருமையாகப் பாதுகாத்து வந்த இறைவனுக்கு இப்பொல்லாங்கு செய்ததுயார் என்று முதலில் அவர் மும்முரமாகத் தேட ஆரம்பித்தார். வில்லும் அம்புங்கொண்டு காடு மேடெல்லாம் திரிந்தார். சிவகோசரியாருக்கு ஒருமுறை சில்லென்று வியர்த்து விட்டது. தம்மை இப்படிச் சந்தியில் இழுத்துவிட்ட தெய்வத்தைநொந்துகொண்டார். ஆனால், ஒரு விலங்காவது புள்ளாவது மனிதனாவது திண்ணனார் கண்ணுக்கு அகப்பட வேண்டுமே! இல்லவே இல்லை!!

சோகமளாவிய முகத்தினராய்த் திரும்பிவந்தார். பச்சிலைகளைப் பிழிந்தார். அப்படியும் குருதி நின்றபாடில்லை. "ஊனுக்கு ஊன்" என்னும் முதுரை அவர் நினைவுக்கு வந்தது. அம்பினால் தமது ஒரு

கண்ணை அகழ்ந்தெடுத்தாச் சிவலிங்கத்தின் கோயுற்றகண்ணில் அப்பி ஞர். குருதி நின்றது. ஒருகண் குருடான கண்ணப்பர் (ஆமாம், இனிமேல் அவர் திண்ணனுர் அல்ல; ஏன்? 'தன் நாமம் கெட்டாள்' என்பது அப்பரின் அருள்வாக்கல்லவா?) மகிழ்ச்சியின் எல்லையை அடைந்தார். குதித்தார். தோள்களைத்தட்டிக் கொண்டார். ஓவென்று சிரித்தார்.

கண்ணப்பரே! இவ்வளவு அற்ப சந்தோஷியா நீர்? உமது துக்கம் இன்னும் நீங்கினபாடில்லையே. ஐயா! அதோ உமது ஒற்றைக் கண்ணுல் பாரும், சிவலிங்கத்தின் மற்ருெரு கண்ணிலும் செந்நீர்வடி கிறது. இப்போது எங்கே உமது ஆட்டமும் பாட்டும் சிரிப்பும் குதிப்பு மெல்லாம்? முகத்தைத் தொங்கப்போடும். ஆஹா, ஒரு கணத்தில் அவருடைய பிரசன்னமான முகத்தை விசனப்படலம் கப் பிக்கொண்டது. ஆ! ஈதென்ன புதுமை! மறுபடியும் அவர் வத னம் மகிழ்ச்சியினுல் மலர்கிறதே, நம்மைப்பரிகசித்துக் கொண்டே. மீண்டும் ஆடுகிருர், பாடுகிருர், குதிக்கிருர். அண்டம் குலுங்க நகைக்கிருர்.

குருதி வடியும் கண்ணில் அடையாளத்துக்காகத் தமது செருப் பணிந்த காலைப் பொத்திக்கொண்டு மற்ருெரு கண்ணையும் அம்பால் அகழ்ந்தெடுக்கப்போனுர். அப்படி அவர் கண் அள்ளும் காட்சி சிவகோசரியாருக்குக் கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. சிவ லிங்கத்தினுடைய கல் மனமும் இளகிவிட்டது. சட்டென்று அதி லிருந்து ஒரு கை புறப்பட்டுக் கண்ணப்பருடைய இருகைகளையும் அம்பும் அகப்பட ஒரு சேர நெகிழவிடாமல் பிடித்துக்கொண்டது.

"நில்லு கண்ணப்பா! நில்லு கண்ணப்பா! என்
அன்புடைத் தோன்றல் நில்லு' கண்ணப்பா"

என்னும் ஒரு ஒலி சிவலிங்கத்தினின்றும் எழுந்தது. கண்ணப்ப ரும் திகைத்துநின்றுபார்த்தார். மற்ருெரு கண்ணிலும் குருதி நின்றுவிட்டது. அதோடுகூடச் சிவகோசரியாருக்குச் சில விநாடி கள் மூச்சும் நின்றுவிட்டது. வேலையற்றுப்போய் வேறெதற்கோ பூமாரி சொரியும் தேவர்கள் இதற்குப் பொழியாம லிருப்பார்களா? ஆம், வானவர்கள் பூமாரி பொழிந்தார்கள். திருக்கண்ணப்பர் சிவ கதி பெற்றனர். வாழ்க அவர் திருநாமம்!

இப்படி முடிகிறது கதை. "இறைவனுக்கு உயிர்கள் மாட்டுள்ள கருணைதான் எத்தகையது! தமது நாயகருக்குத் தீங்குசெய்தது யார் என்று திண்ணனுர் சீற்றமடைந்து வில்லும் அம்புங்கொண்டு தேடப்புறப்பட்டபோது அவரது கண்ணில் அக்காட்டிலும் மலையிலு முள்ள விலங்குகளும் பறவைகளும் மனிதர்களும் அகப்படாதது விந்தையல்லவா? எந்த மாயப்படலத்தினுல் கடவுள் அவைகளை மறைத்து வைத்தாரோ தெரியாது. அவைகள் மட்டும் திண்ணனுர் கண்ணில் பட்டிருந்தால் என்ன பாடுபட்டிருக்கும்! தீங்கு புரியாத

அவைகள் துன்பமுழக்க எங்கள் கடவுள் பார்ப்பாரோ? எல்லாவற்றிலும் மேலாகச் சிவலிங்கத்துக்குப் பின்னாலேயே ஒளிந்துகொண்டிருந்த சிவகோசரியார்மீது திண்ணனார் நாட்டம் செல்லாதது மகா அற்புதமன்றோ? எப்படிப்பட்ட பிரீஸ்வரவாதியாயினும் அன்று சிவகோசரியார் நிலைமையிலிருந்திருப்பானாயின், அவன் மலையுச்சியிலிருந்துகொண்டு கடவுள் உண்டென்று சத்தியம் செய்வான்'' என்றெல்லாம் கண்ணப்ப நாயனார் புராணப்பிரசங்கம் செய்பவர்கள் சொல்வது வழக்கம்.

இவையனைத்தையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் சிவபெருமான் சிவகோசரியாரைத் திண்ணனாருக்குக் காட்டாததற்கு மற்றொரு நுட்பமான காரணமும் இருக்கிறது. "உனக்கவன்றன் செயல் காட்டுவேன்'' என்று ஏற்கெனவே அந்தணர் கனவில் இறைவன் வாக்களித்திருக்கிறார். அப்படியே மறுநாள் நிறைவேற்றினார். அதோடுகூட, வேடரை அந்தணருக்குக் காட்டுவதால் அந்தணருக்குப் பலனுண்டாகுமேயன்றி அந்தணரை வேடருக்குக் காட்டுவதால் வேடருக்கு யாதொரு பலனுமுண்டாகாதென்பது இறைவன் திருவுள்ளம்போலும். சிவகோசரியார் திண்ணனாரிடமிருந்து அன்புநெறியைக் கற்றுக்கொள்ளவேண்டிய நிலைமையிலிருந்தார். ஆனால் திண்ணனாரோ சிவகோசரியார் கனவிலும் கற்பனையிலுங்கூட எட்டமுடியாத மேல்நிலையை அடைந்திருந்தார். அப்படியிருக்க, சிவகோசரியாரைத் திண்ணனாருக்குக் காட்டுவதால் யாது பயன்? அதனால்தான், கடவுள் திண்ணனாரைச் சிவகோசரியாருக்குக் காட்டினார்.

அன்பர்களே, எடுத்துக்காட்டு என்னும் சொல்லின் இலக்கணத்துக்கு எத்துணைச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கண்ணப்பர் விளங்குகிறாரென்பதை ஊகித்தறிந்துகொள்ளுங்கள்.

அன்றியும், சைவ சமய வாழ்க்கைக்குச் சைவத்திருமுறைகள் இலக்கணம் என்றால், அறுபான்மும்மை நாயன்மார்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் இலக்கியங்களாகும். அம்முறையில் கண்ணப்பர் வரலாற்றைச் சிறிது நோக்குவோம். "காட்டுவித்தால் ஆர் ஒருவர் காணாதாரே, காண்பார் ஆர் கண்ணுதலாய்! காட்டாக்காலே'' என்பது திருநாவுக்கரசரது ஒரு திருத்தாண்டகத்தின் அடிகளாகும். இதன் பொருள் வெளிப்படை. கடவுள் ஒரு பொருளை நமக்குக் காட்டத் திருவுளங்கொண்டால் அதை நாம் பார்க்காமலிருக்க முடியாது. அற்றன்றி அதே பொருளை நமது பார்வையிலிருந்து அவர் ஒளித்து வைக்க எண்ணினால், அது நமது கண்களுக்கெதிரிலிருந்தாலும் நாம் அதைப் பார்க்க முடியாது. காளத்திநாதர் திண்ணனாரைச் சிவகோசரியாருக்குக் காட்டினார். சிவகோசரியார் கண்களாரக்கண்டார். அதே காளத்திநாதர் சிவகோசரியாரைத் திண்ணனாருக்குக் காட்டவில்லை. ஆதலால், சிவகோசரியார் மிக்க அண்மையி

விருந்தும், திண்ணனார் அவரைக் காணவில்லை. கண்ணுதலார் காட்டாக்கால் காண்பார் யார்?

உரிமை யுரை

வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவரர் முத்து விழாத் தொடரில் என்னை இத்துறையில் பணிகொண்ட விழாக் குழுவினர்க்கு என் நன்றி உரித்தாகுக. என் அருமைத் தந்தையார் செந்தமிழ் இரத்தினாகரம் மருத்துவமணி வல்லை சண்முக சுந்தர முதலியாரும் நாகலிங்க முனிவரும் அண்ணன் தம்பியர்போல் அமைந்து, சித்தாந்தசரபம் அஷ்டாவதானம் சிவஸ்ரீ பூவை கலியாண சுந்தர யதீந்திரரிடம் மாணவர்களா யிருந்தமையால் காஞ்சியார் ஒருவகையில் எனக்குச் சிறிய தந்தையாவர். அவரது முத்து விழாவினைக்காணக் கொடுத்து வைத்த என் கண்களின் செய்தவம் பெரிதென்றே சொல்லுவேன். அவர் இனியும் பல்லாண்டு வாழ்க வென வாழ்த்தி, இக்கட்டுரையை அவர் திருவடிகளுக்கு உரிமையாக்குகிறேன்.

## நற்றவக் குன்று

உச்சிமேற் புலவர்கொள் கச்சியம் பதிவாழ்
நச்சினார்க் கினியனே நற்றவக் குன்றே
நச்சிலா நாக லிங்கமெனும் நாம
இச்சகம் வாழ்வதே எமது வாழ் வெனக்கொண்
டச்சகம் எற்றியும் அருங்கலை தொகுத்தும்
நந்தமிழ் நாட்டை நண்ணிய கலைகளை
முந்துற அகற்றிட மொய்ம்புடைத் தான்களைச்
செந்தமிழ் விளங்கத் திசைதொறும் நடத்தியும்
கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தகவெனு மெய்ம்மொழிக்
கிலக்கண மாகிய இலக்கண வெழிலோய்
எம்மனோர் போன்ற இளைஞர் பலர்க்கும்
செம்மையை உணர்த்தும் சீருடைப் பெரியோய்
நிலவரை நீள்புக ழாற்றி நலனொடு
பலர்புகழ் குமரனின் பன்னாள் வாழ்கெனச்
சால வணங்கி வாழ்த்துவன்
பாலய அடிகளார் பதமலர் தனையே.

S. துரைசாமி, மயிலம் தமிழ்க் கல்லூரித் தலைவர்.

# மயிலின் ஆட்டம்

வை. ச. இராமலிங்க முதலியார், கண்டாச்சிபுரம்

வசந்தகாலம். மாலை நேரம். அகண்ட பெரிய வெளியிடம். மந்தமாருதமாகிய தென்றல், பொதியாசலத்திலிருந்து, ஜிலு ஜிலு வென்று வீசிக்கொண்டிருந்தது. அந்திவானம், வீற்று, வீற்றாகத் தழற் பிழம்புகள்போன்று, செக்கச் செவேறென்று சிவந்து, சடை முடிகளோடுகூடிய சிவபெருமானை யொத்திருந்தது. பசுமையாகிய அழ்கிய கடனீரையுண்டு, ஆகாயமுற்று, வானவெளியிற் காற்றினால் மோதப்பட்டு, மேற்றிசையிற் றள்ளப்பட்டு, நீலநிறமாய் மரகதம் போலும் வடிவேற்று விளங்கும் மேகக் கூட்டங்கள் உலகமாதாவாகிய உமை யம்மையாரையும்; அடிவானம், குடகடல் மூழ்குஞ் சூரிய வொளியால், வெள்ளிமலைபோல் வெளுத்திருந்த தோற்றம் திருநீற்றி னொளிபோன்று பிரகாசிக்கும் துல்லிய வெள் விடையாகிய இடப தேவரையும் நினைவூட்டிக் கொண்டிருந்தது. எங்கும் நிசப்தம். ஓரே அமைதி. கோயின் மணியடிப்பதுபோன்ற வொரு வோசை யென்னுள்ளத்தினுள்ளே வொலித்துக்கொண்டிருந்தது. இடபாரூட மூர்த்தியாகிய இறைவனிறைவியாரை இயற்கைத் தோற்றவெளியில், உருவத் தோற்றங்களாகக்கண்டு இயற்கை யின்பத்தி லீடுபட்டுக் கொண்டிருந்த வெனக்கு, என் உள்ளத்தினுள்ளே யோரசைவு தோன்றிற்று. அஃதென்னை முற்றிலும் அசைத்து விட்டதென்றே சொல்லலாம். காரணங் காண முயன்றேன். மாலை நேரமானதால் பொழுதேற, பொழுதேற கரிய மேகக் கூட்டங்கள் உயர் வானிற் சென்று, கொண்டல் கொண்டல்களாகத் திகழ்ந்து மணிவண்ணனிற் பொலிந்திருந்தது, மலையரசன் பொற்பாவை, வாணுத லிமவல்லி யாரையு மொத்திருந்தது. என் நினைவெல்லாம், என்னுள்ளமாகிய மன அசைவிற்கு, ஏன்? என் உடலசைவிற்கே காரணமாயது எது? என்னும் ஆராய்ச்சிமேற் சென்றது. மனித சஞ்சாரமே யில்லாத அவ்வெளியில் எனக்கு யாதொரு அறிகுறியும் புலப்படவில்லை. "நானு மென்சிந்தையு மென்நாயகனுக் கெவ்விடத்தோம்" என்ற படி அவ்வசைவின் அடிப்படையான காரணம் விளங்காமற் றிகைப் புற்றிருந்தேன். "ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டென்னுள்ள மும் போய், நான்கெட்ட வாபாடி" என்றபடி நான் என்னும் புறப் போர்வையாகிய ஆணவத் திரையைநீக்கி அகப்பார்வையி லிறங்கினே னாக, "முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்!, அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்," என்று பெரியோர்கள் பாடல்களிற் கூறியாங்கு, என்னுள்ளத் தூய வுணர்ச்சியால், நல்லறிவு நாட்டங்கொண்டு பார்க்கத் தலைப்பட்டதில் நான் கண்ட காட்சி யானது, உலக முவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறென்றாற்

போல, செம்மையிற்றிகழ்ந்து விளங்கும் ஒரு சிறு அழகிய மயிலின் சித்திர உருவமேயாகும்.

வெகு அழகான மயில். பல்பொறி மஞ்ஞையென்று பாவலர் புகழும் பான்மையினின்றது. தோகைமா மயிலென்று தொண்டர் பாவுஞ் சீர்த்தி வாய்ந்தது. சித்திரக் கலாப மயில் என்று சிறப்பிக்கப் படுவது அந்த மயில். சூரபதுமனிடம் போராடு மாடலை நிகழ்த் திய முருகப்பெருமானுக்கு இந்திரன் மயிலாய்த் தோன்றிவந்து, ஊர்தியானான் என்று கந்தபுராணங் கூறுகின்றதே! அந்த மயில் தானோ இது வென்றுகூட வெண்ணினேன். முற்றிலும் மாற்றம்.

............................கரா சலங்கள்
எட்டுங்குலகிரி யெட்டுங்கெட்டோட வெட்டாதவெளி
மட்டும்புதைய விரிக்குங்கலாப மயூரத்தனே' என்று அருணகிரியார்

கூறியபடி காட்சிக் கடங்காப் பெருமையில் நின்றதப் பருமயில். அது தனது தோகையை விரித்தது, நட்சத்திரங்களோடு விளங்கிய நீலநிற வானம்போன்று அழகாக விளங்கியது. சர்வ வல்லமையு மிழந்த சூரபதுமன் முடிவில் "முருகனே பரம்பொருளென் றுணர்ந்து "சேவலு மயிலுமாய்த் தோன்றி பெருமானது அடிமுடி தரிசனப்பேற்றை என்ஞான்று மெப்பொழுது மகலாது தரிசிக்கும் பாக்கியத்தைப் பெற்றான்" என்று கந்தபுராணங் கூறுகின்றதே! அதே மயில்தான் இம்மயில். விவரிப்பானேன்? அது தேவேந்திர னாதி வானவர் கூட்டங்களை நோக்கி "அன்றும் என்னை வணங்கி னீர்கள்! முருகனை முதுகிற்றாங்கப் பெற்று விளங்கும் இன்றும் என்னை அவன் வணக்க முறையில் வணங்கினவர்களாகின்றீர்கள். இனி மேலும் என்னை வணங்க யிருக்கின்றீர்கள்" என்று கர்வத் தோடும், பெருமிதத்தோடுங் கூறுவதை யொப்ப வாய்திறந்தகவி, தனது பசுந்தோகையை விரித்து மலர்ந்த முகத்துடன், நடனக்கலை வல்லாளொருத்தி போன்று வெகு இன்பமாக ஆடத்தலைப்பட்டது.

ஆட்டமோ வெகு ஆர்ப்பாட்டமானது. ஆயிரத்தெட் டண்டங்களை நிலைகுலையச் செய்து கலக்கிய இம்மயிலுக்கு இப் பூவுல கெம்மாத்திரம்? கிடுகிடென வாடி யசையத் தொடங்கியது. ஆயிரம் பணாமுடிபரித்த ஆதிசேடன் தன் முடிகளின்மீதுள்ள சுமையாகிய புவி யசைவுறுவதை நோக்கினான். தனது இரண்டாயிரங் கண்க ளாலும் இம் மயிலாடுவதைப் பார்த்தான். வந்தது ஆபத்து என்று எண்ணினான். என்? பாம்புக்கும் மயிலுக்கும் பகை. பகையோ சூரபதுமனாகிய பரு மயில். சாதாரண மயில்கூட ஒரு பாம்பைக் கண்டால், அது அதன் கண்களைக் கொத்திக் கொன்று தின்றுவிடும். நமது கோயில்களிற் காணப்படும் மயில்வாகனங்கள் வாயில் ஒரு

பாம்பைக் கௌவிக்கொண்டும், ஒரு பாம்பை தனது இரண்டு அடிகளாலும் மிதித்துக்கொண்டு மிருப்பதை நீங்கள் இன்றும் காணலாம். எனவே சேடனாகிய பாம்புக்கு உடல் நடுக்கம் ஏற்பட்டது. மெய்ம் மறந்தது. ஆடினான் ஆதிசேடன், உலகமும் ஆடிற்று. புவியிற் பெரியது மகமேருகிரி பர்வதம். புராதனமானது, தெய்வீகத் தன்மை பொருந்தியது. தேவர், முனிவர், யோகர் பலருக்கும் வாசஸ்தானமா யுள்ளது. புவியாடவே இம்மகா பெரிய புனிதமலையான இதுவும் ஆட்டங்கொள்ளத் தலைப்பட்டது. தவிர பண்டைய காவ்ய நூல்களிற் சிறப்பித்துக் கூறியபடி மலைப்பிரதேசமும் வனப் பிரதேசமும் மல்கிய இவ்விடத்தில் காளிக்கோட்டங்கள் மிகுதியும் மல்கியிருந்தன. அதிற் கோயில்கொண்டு வீற்றிருப்பவளாகிய காளிகா தேவி கண் திறந்து பார்த்தாள். மலைப்பிரதேசமும் வனமும் எல்லாம் ஆடுகின்றன. மகிழ்வினாற் றானும் ஆடத் தலைப்பட்டனள். எல்லா மழிபவராகிய பெருமான், விடையேறுபவராகிய பெருமான், பார்த்தார்; தன் கைவில்லாகிய மேரு ஆடுகின்றது. திருவாலங்காடு திருநடனத்தில் தோல்வியுற்றாளாகிய காளிகாதேவி யாடுகின்றனள்? ஏதோ கர்வங்கொண்டு இவைகளிரண்டும் ஆடுகின்றன. இவைகளை யடக்க வேண்டும் என்னும்நோக்கத்துடன் பரசிவப்பிரபும் ஒன்றும் அறியார் போன்று ஆடத் தலைப்பட்டனர். தேவாதி தேவனாகிய சிவபெருமான் ஆடுவதுகண் டுருகுநின்ற பூதகணங்களும் வேதாள கணங்களும் மகிழ்ச்சி மேலீட்டால் கால்தலை தெரியாமல் தாமாகவே யாடத் தலைப்பட்டன.

இப்படி யுலகமும், இறைவனும், சேதனாசேதனப் பல்பொருள்களும், ஆடுவதைக் கண்ணுற்றாள் நம் வெண் கமலாஸனியாகிய சரஸ்வதி தேவியார். கலைத் தெய்வம், இசைத்தெய்வம், அறிவுத் தெய்வமாக விளங்கும் அவள், சகலமும் ஆடுவது கண்டு, இசைக்கும், பாட்டிற்கும், ஆட்டத்திற்கும் தொடர்புண்டாமாதலின், காந்தசக்தி இரும்பை இழுப்பதுபோன்று தனது மனம் இசையை விரும்ப, தன் கை வீணையை மீட்டி சப்த சுரமெழுப்ப இசைக்கலையி னின்பத்தில் மூழ்கிப் பாடியாட வாரம்பித்தனள். நல்லிசைக் கலைவாணி, நாட்டியக் கலைவாணியானாள். உலகம் படைக்கும் பெருமான், நான்முகன் பார்த்தார் தன் நாவை. நாட்டியக் கலையில் நடிக்கும் தனது தேவி நளினி யாடுகின்றனள். நான்கு முகத்தாலும் எட்டுக் கண்களாலும் நன்றாகப் பார்த்தார். பத்தினி யாடுகின்றாள்! சும்மா இருப்பாரா? பரவச மேற்பட்டது! படைப்புத் தொழிலைக் கைவிட்டார்! பத்தினியைப்போலத் தானும் ஆட ஆரம்பித்தனர். சிருட்டி கர்த்தாவாகிய நான்முகப் பிரமன் ஆடுவது கண்டு, மேலுலகத்தாராகிய வானவர் கூட்டங்கள் யாவும் ஆட ஆரம்பித்தன. இந்த நிலையில் மதிக் கடவுளாகிய சந்திரன் பார்த்தான். மயிலாடுகிறது. தன் பகைவர்களாகிய பணிக்கூட்டங்கள் பெட்டிப் பாம்பென வடங்கி

விட்டது கண்டான். பெருமகிழ்வடைந்தான். தானும் ஆடத் தலைப் பட்டான். வைகுண்ட லோகத்தில் வனச மலர்மீது லட்சுமி தேவி யார் வீற்றிருக்கின்றார்கள். சர்வத்தையும் ஆட்டிவைக்கும் அந்த அபூர்வ மயிலின் மாய சக்தி, வைகுண்டத்தை மட்டும் விட்டுவிடுமா? இன்பகரமான ஓர் அசைவு ஏற்பட்டது. பத்மாஸனி பார்த்தாள். பகவான் தூங்குகின்றார். மீண்டும் ஆடுகின்றது. காரணங் கண் டாள் கமலாஸனி. எல்லாம் தனது மருகன், முருகனது மயிலின் ஆட்டம். மிக சந்தோஷம். மயிர்க்கூச்செறிவு. இப்பேர்ப்பட்ட வெற் பாட்டினையுடைய சர்வாற்றல் வாய்ந்த முருகனை மருமகனாய்க் கொண்டோமே! நமது பாக்கியமே பாக்கியம்; சிலாக்கியம் என்று மிகுந்த மகிழ்ச்சிகொண்ட வுள்ளத்தினராகி அவர்களும் தன்னை யறியாமலே ஆனந்த மேலீட்டால் ஆடத் தலைப்பட்டனர். அரி துயிலமர்ந்திருந்த அரவணைச் செல்வன் விழித்துப்பார்த்தான். தனது மார்பின் வனிதாரத்தினமாகிய மகாலட்சுமி தேவியார் ஆடுகின்றார் கள். காளிங்க நிர்த்தனனாகிய பெருமான் திருவடிகள் சும்மாயிருக் குமா? ஆச்சியர் பலருடன் குரவைக் கூத்தாடி யின்பமனுபவித்த திருவடியாயிற்றே! ஆடத் தலைப்பட்டன. என்ன? மகாவிட்டுணு வும் ஆடுகின்றார்.

இவ்வாறு உலகம் யாவும் நிலைகுலைந்து அல்லோலப்படுவதை, ஓர் லீலா விநோதமாகப் பார்வை செய்துகொண்டிருந்த நமது கட்டிளங் காளையாகிய முருகன் பார்த்தான். இவ்வளவும் நமது வூர்தியாகிய மயிற் பரியின் செயலினால்தான் நடைபெறுகிறதா என்று உன்னினான். அடியார் அல்லல் களையும் அருள் வள்ள லாயிற்றே! பெருமான் அன்புருவனாயிற்றே! அறக்கருணை கொண் டான். ஆனந்த வடிவானான். உடனே ஆறுமுகத்தினழகொழுக, அணியார் மயிலின் முதுகின்மீது அமர்ந்து காட்சி நல்கினான் அறு முகப் பரமன்.

"முழுமதி யன்னவாறு முகங்களு முந்நான்காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகியகரமீராறும், அணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டார்."

என்றபடி முருகனது திருக்கோலத்தைக் கண்டு தரிசனம் செய்து முற்றிலும் இன்பமெய்தி, உளமகிழ்ந்துவகை பூத்தது உலகம். இவ் வளவு ஆர்ப்பாட்டமும் மயிலின் ஆட்டத்தினாலோ ஏற்பட்டது என்றையுறுவார்க்கு விடையாக, இல்லவே இல்லை. "முருகன் திரு விளையாடலினால் தான் ஏற்பட்டது, இவ்வளவிற்கும் மூலகாரண மூர்த்தி முருகனே!" என்பதைத் தெளிவுறுத்துகின்றனம். "அவ னன்றியோரணுவு மசையாது" என்பது ஆப்தமொழி. சர்வ ஆட்ட

பாட்டமும் நீங்கி யுலகம் பண்டைய நிலையில் இன்பமூழ்கி யமைதி கொண்டுநிலவியது. அல்லல்நீக்கி, நல்குரவொழித்து, செல்வம் நல்கும் அறந்தரு செயலதன்றோ! அறுமுகனுடலெலாம். எல்லாம் அவன் செயல்! எனவே பழைய நிலையை யடைந்ததுலகம். எங்கும் இன்பம் நிலவிய காரணத்தினால், ஏற்கனவே எங்கோவொரு மாயச் சூழலிற் சென்று புதைபட்டிருந்த என் மனமும், மீண்டும் என் வசப்படத் தலைப்பட்டது; புலனுணர்ச்சி பெற்றது. அதே நேரத்தில் "மயிலு மாட நீயாடி வரவேணும்." என்ற திருப்புகழ் அடிகளை என் தோழன் பாடிப் பரவசமடைந்து கொண்டிருந்ததை யுணர்ந்தேன். நான் நின்றுகொண்டிருந்த இடம். ஸ்ரீ இராமநாதீஸ்வரர் தேவாலயம். குமரகோட்டம் அறுமுகப் பெருமான் திருச் சந்நிதி வாயில். பாடக்கேட்ட திருப்புகழ்மணி, மேற்கூறிய வைபத்தை, அப்படியே படம் பிடித்துக் காட்டும் பண்பு மிக்க அருணகிரிநாதரின் அமுத வாக்கு பின்வருவனவாகும்.

## திருப்புகழ்

"அதல சேடனாராட அகில மேரு மீதாட
அபின காளி தானாட —அவளோடன்
றதிரவீசி வாதாடும், விடையி லேறு வாராட
அருகு பூத வேதாள —மவையாட
மதுரவாணி தானாட மலரில் வேதனாராட
மருவு வானு ளோராட —மதியாட
வனச மாமி தானாட நெடிய மாமனாராட
மயிலு மாடி நீயாடி —வரவேணும்
கதை விடாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால்நீடு
கருதலார்கள் மாசேனை —பொடியாக
கதறு காலி போய்மீள விஜய னேறு தேர்மீது
கனக வேத கோடூதி —அலைமோதும்
உததி மீதி லேசாயு முலக மூடு சீர்பாத
உவண மூர்த்தி மாமாயன் —மருகோனே
உதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜ
னுளமு மாட வாழ் தேவர் —பெருமாளே.

கண்டராதித்தபுரம் எனவழங்குங் கண்டாச்சிபுரத்தில்செங்குந்தர் சமாஜத்தில் 9-4-44ல் காஞ்சி நாகலிங்க முனிவரின் முத்துவிழாக் கொண்டாட்டத்தின்போது, ஆலய வழிபாட்டி னமையம், இந்நிகழ்ச்சி ஏற்பட்டதாதலின் முனிவர் பெருமானுக்கு "கையுறையாக" இக் கட்டுரை அர்ப்பணஞ் செய்யப்படுகின்றது.

---

# வாழ்க்கையும் மனநிலையும்

'பழம் நீ'

வாழ்க்கையின் வெற்றியைப் பற்றியும் அதை யடையும் வழிகளைப்பற்றியும் எடுத்துக்கூறும் பல தேசத்துச் சான்றோர்களும், அஃது எப்படி மக்களுடைய மனநிலையோடு, பிரிக்க முடியாத ஒரு தொடர்பைப் பெற்றிருக்கிறது என்று வற்புறுத்துவதை நாம் படிக்கின்றோம். அதைக் கண்கூடாக வாழ்க்கையிலுங் காண்கிறோம். நம் வாழ்க்கையில் நிகழும் செயல்கள் அனைத்தும் மனதோடும் அதன் எண்ணங்களோடும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

உலகானுபவ முதிர்ச்சியும் ஞான முயற்சியும் ஒருங்கே பெற்று ஞானத் தந்தையாக விளங்கிய திருநாவுக்கரசர் :—

"உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே"

"மனமெனும் தோணிபற்றி மதியெனுங் கோலையூன்றிச்
சினமெனும் சரக்கையேற்றிச் செறிகட லோடும்போது
மதனெனும் பாறைதாக்கி மறியும்போ தறியவொண்ணா
துனையுனு முணர்வைநல்கா யொற்றியூ ருடையகோவே"

என்று மனதை ஞானத்தீ தோன்றி மங்காது எரிவதற்குரிய தகளியாகவும், வாழ்க்கைக்கடலைக் கடப்பதற்குரிய புணையாகவும் உருவகப்படுத்தினர். ஒரு வீட்டில் ஒளியைப் பரப்புவதற்கு விளக்கும், ஒரு பெரிய நீர்நிலையைக் கடப்பதற்குப் புணை அல்லது தோணியும் இன்றியமையாதன. அவ்வாறே உடம்பாகிய மனைக்கு மனமாகிய விளக்கும், வாழ்க்கையாகிய கடலுக்கு மனமாகிய தோணியும் வேண்டற்பாலன. விளக்கு அவிந்து போகாமலும், மங்கிப்போய் விடாதபடியும் பார்த்துக்கொள்வ தவசியம். தோணியும், பெருமழை, புயற்காற்று, நீர்ச்சுழிகளாதி இடையூறுகளால் உடைந்து போகாதபடி, அவற்றை எதிர்க்கவல்ல திண்மையுடன் ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். அவ்வாறே விளக்கு, தோணிகளாகிய மனதையும் பலவித உலக சோதனைகளாலும், இடையூறுகளாலும், நெறியல்லா நெறிகளிற் சென்று உழல்வதாலும் வலியிழந்து உடைந்து போகாதபடி, போற்றிப் பாதுகாத்துப் பயன்பெற வேண்டியது நம் ஒவ்வொருவரின் கடமையாகும்.

எண்ணம் செயலாக மாறுவதை மற்றொரு விதமாகவும் பார்க்கலாம். தற்கால உளநூல்வாணர் செய்யும் ஆராய்ச்சிகளின் பயனுக

காம், எண்ணம் உண்டாகின்ற தன்மையையும் அது செயலாகமாறும் விதத்தையும் அறிந்து படித்து மகிழ இடமிருக்கின்றது. நினைப்பதற்கு நிலைக்களமாகிய மனதுக்கும் ஏனைய பொறிகளுக்கும் நெருங்கிய தொடர்புளதென்பது நாம் அறிந்ததொன்றே. "ஐம்பொறிகளும், வெளியுலகிலுள்ள விஷயங்களை மனது அறிந்து கொள்வதற்குரிய வாயில்களாக இருக்கின்றன" என்று ஹார்ன் என்னும் உளநூற் பண்டிதர் கூறுகின்றார்.

உதாரணமாக நம் வீட்டு வாயிலில் உள்ள அறிவிப்பு மணியை ஒருவர் அடிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அது மணியின் ஒலி என்று காது அறிவிக்கின்றது. இதை அடுத்துக் கதவைத் திறக்கும்படி யாரோ ஒருவர் அம்மணியை அடிக்கின்றார் என்றும், உடனே கதவைத் திறக்கவேண்டுமென்றும் மறு எண்ணம் தோன்றி, உறுப்புகளுக்கு அறிவிக்கப்படவே, கை கால்கள் அவ்வேலையைச் செய்கின்றன. இஃது இன்னது என்று அறியும் எண்ணமும் வெவ்வேறுவித இரண்டு நரம்புகளின்மூலம் முறையே முதலில் மனதுக்கும், பிறகு அங்கிருந்து அவயவங்களுக்கும் அறிவிக்கப்படுகின்றன என்பது உளநூல் படித்தோர் யாரும் அறிவர்.

இதைப்போன்றே மனதின் மூலமாகவே வாழ்க்கையின் செயல்கள் அனைத்தும் நடப்பதால் அது எவ்வளவு இன்றியமையாததென்பதையும், எப்படி அதை நாம் காப்பாற்ற வேண்டுமென்பதையும் கூர்ந்து நோக்கவேண்டும். மனமெனும் நினைப்பாலேயே நாம் மேல் நிலையையோ அல்லது கீழ்நிலையையோ அடைகின்றோம். ஆவதும் அதனால்; அழிவதும் அதனாலேயே. "மனிதனது சுகநிலைமைகளிலிருந்தே அவனது புறநிலைமைகளெல்லாம் வருகின்றதனால், புறநிலைமைகளைத் திருத்துவதற்கு அகநிலைமைகளைத் திருத்தவேண்டு" மென்று ஜேம்ஸ் ஆலன் கூறியுள்ளார். மனம்போலேயே மக்களுக்கு வாழ்வும் அமைகிறது. மனமே நினைப்பின் தலைவனும். ஒழுக்கத்தைத் தோற்றுவிப்பதும், தனது நிலையையும் சுற்றுச் சார்பையும் உண்டாக்கிக்கொள்வதும் அதுவே. இதுபற்றியன்றோ "மனிதனே தன் வாழ்க்கை வெற்றியை உண்டாக்கிக் கொள்ளுஞ் சிற்பி" என்ற ஆங்கில முதுமொழியும் எழுந்தது. பெருமையுஞ் சிறுமையும் தான் தர வருவன. திருக்குறளும்:—

"எண்ணிய எண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" என்றும்

"மாந்தர்க் குணர்ச்சி மனத்தானும்,"
"மனநலம் மன்னுயிர்க் காக்கும்,"
"மன நலத்தினாகும் மறுமை",

என்றும் வற்புறுத்துகின்றது. நாலடியாரும்,

" நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடுவானு நிலையினும்
மென்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்" என்று முழங்குகிறது.

மேற்கூறியாங்கு மனமே யாவற்றிற்கும் அடிப்படையென்னு முண்மையைக் கண்டோமாதலின், அதனை நல்வழிப்படுத்தும் பயிற்சிக் கண்ணே ஊக்கத்தைச் செலுத்தவேண்டும். அவ்வாறிருப்பின் ஒழுக்கம் என்னும் குன்றேறி விழுப்பமாகிய மேல் நிலையை யடைந்து பேரின்ப வீட்டு வாயிற்படியில் கால்வைப்போம். ஒருவர் வாழ்க்கையிலும் மனதிலும் தூய்மையுடையராய் இருக்கவேண்டின் அகம்புறமாகிய இருகருவிகளும் தூய்மையோடு ஒற்றுமையாய் உழைக்கவேண்டும். உடை ஊண் முதலியனவும், சுற்றுப்பொருள்களும், இருக்கும் இடமும், நண்பரும் இன்னோரன்ன பிறவும் ஒருவரகத்தே எழும் எண்ணங்களுக்கு முற்றிலும் காரணமாயிராவிடினும், ஒரு சிறிதாயினும் அவற்றை மாற்றுவதற்கு இடமிருப்பதால் அவையெல்லாம் சரியாயிருக்கும்படி பார்த்துக்கொள்வ தவசியம்.

கழிபெருங்காமம், அழுக்காறு, அவா, வெகுளி, தன்னலமே பாராட்டல், தெய்வநிந்தனை முதலியன கெட்ட மனநிலைகளில் முக்கியமானவை. இவை அசுத்த உடையணிதல், அசுத்த உடம்பினராதல், பிறரில் விழைதல் பேருண்டி, பெருந்துயில் முதலிய பல கெட்ட செயல்களுக்கு ஒருவரை இழுத்துக்கொண்டு சென்று வாழ்க்கையைக் கெடுத்து விடுகின்றன. தன்னலமின்மை, பிறர்நலம்பேணல், அடக்கம், பொறுமை, அன்பு, தெய்வசிந்தனை முதலியன நல்ல மன நிலைகளிற் சில. நல்லோரிணக்கம் இவற்றை யடைவதற்கு அதிகமாக உதவிசெய்யும். இவை முற்கூறியபடி ஒழுக்கம் என்னும் குன்றிலேற்றி மேல்நிலைக்குக் கொண்டுபோய்விடும்.

மெய்கண்ட சாத்திரத்தை மேதினிக்காய் அச்சேற்றி
உய்யவருட் காஞ்சிஉயர் நாகலிங்கத்—தெய்வமுனி
பல்லாண்டு வாழப் பகர்கரவை யார்க்கருவில்
வல்லவையின் நாயகனை வாழ்த்து.

யாழ்ப்பாணம் முத்துவிழாக் கழகம்.

# சிவப்பிரகாசர் செந்தமிழ்ப் பற்று

வித்துவான் முத்து. சு. மாணிக்கவாசக முதலியார்

பதினேழாவது நூற்றாண்டில் விளங்கிய புலவருள் குமரகுருபர முனிவரும் சிவப்பிரகாச அடிகளும் செந்தமிழ்த் தாய்க்குச் செய்த தொண்டுகள் அளவிடற்கரியன. அவ்வருமையும் பெருமையும் வாய்ந்து 'என்றுமுள தென்றமிழ்ப்' பனுவல்களாயிலங்கும் அத் தொண்டுகளை இக்காலத்தார் எக்காலத்தும் போற்றக்கடவர். அவை தமிழன்னையின் கருவூலங்கள். அவற்றுள் இங்குச் சிவப்பிரகாசரது செந்தமிழ்ப்பற்று மட்டும் அவர்தம் நூல்களிற் காணப்படும் பல சான்றுகளுட் சிலவற்றைக் கொண்டு ஒரு சிறிது விளக்குவதே இக் கட்டுரையின் உட்கோளாகும்.

சிவப்பிரகாசர் தொண்டைமண்டலச் சைவ வேளாண் குலத் தவர்க்குத் தீட்சை செய்வித்தருளுங் குருவாய் விளங்கிய குமார சாமி தேசிகர்க்குத் தோன்றிய தவப்புதல்வர். இவர்க்கு வேலாயுதர் கருணைப் பிரகாசர் ஞானம்பிகை என்னும் உடன் பிறப்பினர் இருந் தனர். இக்குடும்பம் செந்தமிழ்க் குடும்பம். சிவப்பிரகாசர் தமிழ் வளர்ச்சிக்கென்று முப்பதுக்கு மேற்பட்ட தமிழ் நூல்களை ஆக்கி யருளிய தலைவள்ளலார். அவற்றுள் மொழிபெயர்த்த நூல்கள் எட்டு. இங்கே கருநடர் மொழியினின்றும் 'பிரபுலிங்க லீலை'யைக் கொணர்ந்து, 'சிரிய கூரிய தீஞ்சொல் வவ்விய' நற்பொருட்பாக்க ளாக உதவிய பெருமானுர்; இலக்கணம் இலக்கியம் தருக்கம் சாத் திரம் முதலிய பலவற்றிலும் பேரறிவும் பேராற்றலும் இயல்பில் வாய்க்கப்பெற்ற திருவருட் செல்வர். இத்தகைய முனிவர் பிரானுர், வடமொழிப் புலமையும் நிரம்பப் பெற்றுடையரேனும், செந்தமிழ்ப் பற்று மிக்குடையராயிருத்தல் தமிழர் செய்த தவப்பயன்.

இந்நாளிற் பலர் தனித்தமிழ் வேட்கையராய்ப் பலவும் செந் தமிழ்ச் சொல்லாலமைதலை நாடுகின்றனர். அதற்கேற்ப, கருணைப் பிரகாசர், தம் முன்னவர்க்கு வடமொழித் தொடராயமைந்த பெயரை 'இறைவிளக்கம்' எனத் தமிழ்மொழித் தொடராக்கியது அப்பற்றை நன்கு விளக்குமன்றே? 'சுயம்பிரகாசக் கோதிலாத் தமிழ்க்கடல்' என்று முன்னவரைக் குறித்தது, முற்றும் உண்மை யாதலை, அடிகளின் நூற்களை மேற்போக்கில் வெள்ளோட்டமாக நோக்கியவரும் அறிவர். இறைவிளக்கம், அருள்விளக்கம், இவ் விரண்டினிடைத் தோன்றிய அறிவுச் சுடராய வேலாயுதம் ஆகிய மூவரும் செந்தமிழ்க்குத் தொண்டு செய்தமை முற்கூறியவாறு தமிழ்க் குடும்பம் என்றதை மெய்ப்பிக்கும்.

இறைவிளக்கனுர், நூறு வயதாமளவும் நோய்க் கோட்பாட்டிற் கும் பேய்க் கோட்பாட்டிற்கும் இசையினும் இசையலாகாத பெண் கோடலை வெறுத்து முற்றத்துறந்த முழு முனிவராகியும் செந்தமி ழன்னைக்குப் பாமாலை சூடும் பற்று மட்டும் விடாதிருந்தமை நம்

மனோர்க்குப் பெருவியப்புண்டாக்கும். இவர்க்கு இத்தகைய பற்றிருத்தலையுணர்ந்த (திருக்காட்டுப் பள்ளியில் உப்பு விற்றிருந்தவளான) புலமை சான்ற ஒருத்தி, இப்பெருமானுர்க்குத் தொண்டு பூணும் "திருக்கூட்டம் அத்தனைக்கும் தெண்டனிட்டோம் தீராக் கருக்கூட்டம் போக்கினோம்" என்று வணங்கிப் பயன்பெற்றாள். இவட்கு வாய்த்த பேறு நமக்கு வாய்க்கவில்லையே!

இம்முனிவர் பாமுழு நிலத்தர் (கவி சார்வ பௌமர்) என அந்நாட் புலவர் பெருமக்களாலேயே போற்றப் பெற்றவர். இவர் செய்யுளைப் பொதுமகளுக் கீடாக்கினர் இவரிளவலார். இவர் பாக்களை நோக்கி மருளும் புலவர் நெஞ்சமும் அப் பொதுமகளைக் கண்டு மருளும் மைந்தர் உள்ளமும் ஒன்றென்றார். இவ்வுவமையால் இவருடைய பாக்கள், புனையெழில் வடிவினள் ஓர் பொதுமகளைப் போலப், புலவருள்ளங் கவரும் பொருளணியும் தீஞ்சுவை மிக்க செஞ்சொல்லும் அமைந்து மிக்க இன்பம் பயப்பன என்பது நன்கு வெளியாகும். காண்போருள்ளங் கவர்தலானும், இன்பம் பெரிதும் பயத்தலானும், அழகிய அமைப்பானும், பிற நலங்களானும் பொதுமகளை ஒக்கும் என்று உரைக்கப்பட்டதேனும், இவரது செய்யுள் உயர்நிலையில் ஒரு திருக்கோயிலுக் கொத்தது. இப்புலவர் பிரானர் முந்தையோர் செய்யுளை,

"வல்லகோ லண்ண மலைவள்ளல்—மல்லலுறச்
சந்தி பொருத்தித் தகுஞ்சீர் கெடாதடக்கிப்
புந்தி மகிழ்அற் புத அணித்தாய்—முந்தையோர்
செய்யுள்போற் செய்த திருக்கோயி லுள்ளிருந்தெம்
பையுள்போக் கிற்கும் பரஞ்சோதி"

எனத் திருக்கோயிலுக் குவமை யாக்கினரேனும், தம் செய்யுள் ஒருவாற்றாலும் முந்தையோர் செய்யுட்குத் தாழாதவாறு மேம்படவும் செய்தமையால், தம் பாட்டுக்கும் அச் சிறப்புண்மையை நாம் அறியச் செய்தார். சந்திப் பொருத்தம் கெடாத சீரடுக்கு, புந்தி மகிழ்விக்கும் அற்புத அணிகள் முதலிய திருவுடையனவே இவர் செய்யுட்களும் என்பது கற்றறிந்தோர் பலர்க்கும் உடன்பாடன்றோ? இத்தகைய உயர்ந்த பாநலத்தை இவர் உணர்ந்தவராதலின் "பழிக்கும் வழுச்சொற் பதர் சேர்த்துவைத்த இழுக்குங் கவி" பாடும் "புன்புலவராங் குரங்கு போற்றாப் பெருமையுற, இன்புலவராம் சுரும்பு ஆர்த்து ஈண்டிவர, தெள்ளு தமிழ்ச் சொல்லாம் மலரைச் சுவையாம் மது ஒழுகப் புல்லா, வழுச்சொல் எனும் புன்மையெலாம் இல்லாமல், அன்பெனும் ஓர் விடாத நார் கொண்டு, மெல்நா எனுங் கரத்தால், வாடாவகை புனை பாமாலை" களை தொடுத்து, அம்மாலைகளையும் "புன்றொழின் மனிதர்ப் புகழ்ந்து பாழ்க்கிறைக்" காமல் இறைவன் திருவடிக்கே சாத்திய பெருமையுடையவரானர் என்பது நம் முன்னோர் பலரால் போற்றப்பட்ட வுண்மை.

" திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை விருத்தகிரிச் செல்வற்கோதும்
பெருந்தகைமை யுடையம்யாம் "

என்று தாமே வீறு விளங்கக் கூறுதல் அறிக. உண்மையைத் தாமே கூறுதல் இறைவியிடத்திலும் வழுவாமோ? இவர் பின்னவராய கருணைப் பிரகாசர், இவர் "ஒரு நொடியில் எண்ணுமல் இசைத்த செய்யுள் புலவர் பிறர் பன்னுள் நினைந்து செய்த காப்பியங்களினுஞ் சிறந்தது" என்று பாராட்டியதோடு இவரொடும் பிறக்கச் செய்த நல்லூழை வாழ்த்தியும் மகிழ்ந்தார். இத்தகைய ஏற்றம் எங்கள் தருமபுர வாதீனத்து வெள்ளியம்பலவாண முனிவர்பாற் கற்றதனுல் வந்ததென்பது பொருந்தும். அம்முனிவரது பெருமை "முத்தி நிச்சய மாபாடியம்" முதலியவற்ருல் இனி உலகறிய நேரும்.

இறைவிளக்கனுர் தம் நூல்களில் கண்ட இடமெல்லாம் தமிழ்ப் பற்றை விளக்கியுள்ளார். அவற்றுள் சில இடங்களே இதிற் குறிக்கப்படும்.

'திசைபோகு தூயதமிழ்' என்று தமிழின் பரப்பையும் 'செந்தமிழ் முதலாங் கலை' என அதன் முதன்மையையும், 'நல்லிசைத் தமிழ்' என அதன் நலத்தையும் இசையையும் சீர்த்தியையும் உணர்த்தினுர். தமிழ்மக்கட்கு வேண்டுவதாய வீரம் ஈதே என்று வற்புறுத்துவாராகி "மதுரைத் தமிழ்ச் சங்க மேதைப் பசுந்தமிழ்ப் பாற்கடல் நீந்திய வீரம்" என்றருளினுர். இதில், சங்க நூற்களை உவர்க் கடலெனக் கருதவையாது பாற்கடலென்று அவற்றினது இன்சுவை யுணரவைத்து, அக்கடலைக் காத்தலே தமிழர்க்குரிய வீரமாம் எனக் குறித்தார். காடு மலை கடல் கடத்தல் வீரச் செயலென்பது அறிஞர் கொள்கை. (அம்பிகாபதி கோவை, திருவெங்கைக் கோவை, களவுப்படலம் முதலியவற்றுள் அதனை அறியலாம்.) இவர் சங்க நூற்களை நன்கு கற்றுத் திளைத்தவர். இது பின்வரும் பகுதியால் விளங்கும். தமது குருமணியைத் தொழுத இடத்தில், "கூடற் பலகைமீது முன் உயர்த்துள செந்தமிழ்ப் பழமலர்த் தொடை வீழ்ந்து படிந்து எழாதிருந்துறு பொருட்சுவை நறுப் பருகுறு பெருங்கல்விப் புலவர் தூய்மனம் எனும் களிவண்டினம் புக்கிருந்து ஒருங்குண்ணப் புனைந்த இக்கொடுந்தமிழ்ப் புகர்ச் செம்மொழிப் புதுமலர்த் தொடையாரம் உலகெலாம் புகழ் திண்புயத் தணிபவன்" எனப் பாடியருளினுர். இதில், சங்க நூற்களைச் 'செந்தமிழ்ப் பழமலர்த் தொடை' என்றும், அவற்றைக் கற்று, மற்றெந் நூலையும் நோக்க நாட்டங்கொள்ளாத சான்றோரைப் 'பெருங்கல்விப் புலவர்' என்றும், அவர் உள்ளம் அப்பழந்தமிழ் நூன்மலர் மாலையையே பற்றியிருந்தமை கருதி, அதனைத் "தூய்மனம் எனும் களிவண்டினம்" என்றும், அந்நூற் பொருள் அம்மனமாய வண்டினத்துக்கு அளவிலாத இன்பூட்டியது கருதி, 'உறுபொருட்சுவை நறு' என்றும்,

அதனை இடைவிடாது பருகியது குறித்து "வீழ்ந்து படிந்து எழாது இருந்து பருகுறு மனமெனும் வண்டினம்" என்றும், அத்தகைய பழந்தமிழின்பம் நுகர்ந்த வண்டினமெல்லாம் கூட்டமாக இருந்து நுகரத்தக்க சிறப்பு, தம் (காலத்துத்) தமிழ் நூல்களுக்கும் உண்டு என்றும், அச்சிறப்பும் தமது குருமணியின் புகழொடு கலந்த பெற்றிமையால் வந்தது என்றும் உணர்த்துவாராய், "புலவர் தூய் மனமெனும் களிவண்டினம் புக்கிருந்து ஒருங்கு உண்ணப் புனைந்த இக் கொடுந்தமிழ்ப் புகழ்ச் செம்மொழிப் புதுமலர்த் தொடையாரம்" என்றும் கூறினர். மேலும் பழமலர்த் தொடையொடு புதுமலர்த் தொடையும் ஒருசேர வைத்துக் கொள்ளப்படும் பெருமை 'உலகெலாம் புகழ் திண்புயத்தில்' அணிந்தமையால் வந்தது என்றும் விளக்கியிருத்தல் அறிக. இங்கு இவரது தமிழ்ப் பற்றனது முன்னைய நூல்களை நினைத்துப் போற்றவும், குருபத்தி யானது பின்னைய நூல்களை (குருவைப் போற்றுவனவற்றை மட்டும்) ஏற்றவும் வைத்த உண்மை உணர்தற்பாற்று. திருமுருகாற்றுப் படையைக் குறித்துப் பாட நேர்ந்துழி இவ்வாறு வேறு இரண்டு பெற்றியும் ஒருங்கு வாய்க்கப்பெற்று,

> " இன்னன நினைந்து கீரன் இலங்கிலை நெடுவேற் செம்மல்
> பன்னிரு செவியு மாரப் பருகமு தாகி ஓதில்
> உன்னிய உன்னி யாங்கிங் குதவுவ தாகிப் பாவுள்
> முன்னுற வீந்து நிற்கும் முருகாற்றுப் படைமொ ழிந்தான்."

எனப் பழந்தமிழ் நூலொன்றே தமிழ்ப்பற்றும் முருகன் திருவடிப் பற்றும் ஆகிய இரண்டும் கொண்டு சிறப்பிக்கப்பட்டதுணர்க.

இப்புலவர் பிரானர் வடமொழியும் தென்றமிழும் நன்குணர்ந்த நல்லிசைப் புலவராயிருந்தும் இவரது தமிழ்ப் பற்றும் சிவபத்தியும் சேர்ந்து, இவரொடு போராடி வென்று, வடமொழி மறையை மட்கலமாகவும் செந்தமிழ் மறையைப் பொற்கலமாகவும் சொல்வித்த சிறப்பு எல்லோர்க்கும் இன்பூட்டும். ஓரேதுவுமின்றி ஒன்றனை மண்ணுகவும் ஒன்றனைப் பொன்னுகவும் சொல்லலாமோ? ஏது ஒன்றும் இன்றிச் சொல்லும் பித்தர் செயல் நம் பெருமானரிடத்தும் உளதாமோ? மற்று யாது ஏது எனின், மட்கலம் பிறர் தொடற் குரித்தன்று. பொற்கலம் யாவருந் தொடற்குரித்து. அவ்வாறே வடமொழி மறையும் தென்றமிழ் மறையும் ஆம் என்ற ஒன்றே அதற்குற்ற ஏது. இஃது இந்நாளில் ஒற்றுமையைப் போக்கும் போர்க்கு மட்டும் இருந்து, பயன்படுமாறு நடைமுறையிலில்லை. "வேத உணவு வெறுத்துப் புகழ் மூவர் ஓது தமிழுணுக்கு உழல் செவியான்" என்று கூறுவித்த இவரது தமிழ்ப் பற்றுக்கு ஈடும் எடுப்பும் உளவோ? இவர்க்கு இத்தகைய தமிழ்ப்பற்று மிக்கமைக் குச் சிறந்த காரணம் "நலமலி வாதவூர் நல்லிசைப் புலவரது" "பழுதில் செய்யுள்" களைத் "திங்கள் வார்சடைத் தெய்வநாயகன் எழுதிய அதனல்" விருப்பம் தமிழ்மொழியில்தான் இறைவனுக்கு

மிக்குளது என்றறிந்து கொண்டதே. "தமிழுக்குவந்த இறை" என்றும் அவனை உணர்ந்து பாடியுள்ளார். அதனுல், "அண்ணல் மாபுகழ் மூவரும் புனை அரும்பா அன்றி என் கவியும் நின்றனக்கு ஆம்" என்று தக்கதொரு நியாயங் காட்டி அவன் திருச் செவியி லேற்றியும் விட்டார். காமச் சுவையை நுகர்ந்தறியாத இவர் தமிழ்ச் சுவையைக் காமியரும் நுகரற்பாலர் என்னுங் கருணையால், தலைமகன் கூற்றில் வைத்து, அவ்விரு சுவையையும் ஒன்ருக்கிக் கூறினுர்.

இங்கனம் தமிழ்ப்பற்று வரவர முதிர்ந்து முற்றுப்பெற்று, இவரை அண்ணுமலையாண்டவனிடம் ஈர்த்துக்கொண்டு சென்று,

"யாவுமாம் உமையுண் ணுமுலை முலைப்பால்
ஈந்துபா டச்செயாய் எனினும்
மேவுமா துயர்செய் சூலைநோ யெனினும்
விடுத்துநிற் பாடுமா றருளாய்"

என வேண்டச் செய்தது. அதுமட்டோ? திருஞான சம்பந்தர்க்கு ஞானப்பால் அருளிய நாளில் தாம் பிறந்திலாமை குறித்து வருந்த வைத்தது. இன்னேரன்ன பலவுள. அவற்றுள் எல்லாம் பிறப்பே வேண்டா என்று வெறுத்த இவரை அத்தமிழ்ப் பற்ருனது,

"விரைவிடை யிவரும் நினைப்பிற வாமை
வேண்டுநர் வேண்டுக மதூரம்
பெருகுறு தமிழ்ச்சொல் மலர்நினக் கணியும்
பிறவியே வேண்டுவன் தமியேன்"

என நேர்வித்ததாகிய இஃதே தமிழர் பலருளத்தும் நிலைத்து நின்று அவரையும் இங்கனம் நேர்வித்தற்குரித்து. இத் தமிழ்ப் பற்று ஒன்றே, முன்னம் ஒரு தமிழ்ப் புலவனை உண்டு, சுவை முதிர்ச்சி கண்டு நின்ற காளத்தியாண்டவன் 'கருணைப் பிரகாசன்' என்னும் தமிழ்ப் புலவரைக் கவர்ந்துண்ண வைத்தது. இவ் விறை விளக் கனுர் தமது மாதவத்தின் வலிதீரப் பின்னவர் மறைந்த அப்பொழு தும் தமிழ்ப் பாட்டு ஒன்று பாடினுராயின், அவரது தமிழ்ப்பற்றை யாவரே அளவிட்டுரைக்க வல்லார்? அதனளவை அத்தமிழன்னையே அறியவல்லுநள்.

உண்மைத் தமிழ்ப்பற்று இவ்வண்ணம் இருத்தல் வேண்டும். உண்மைத் தமிழர் ஓங்குக. தமிழ் வாழ்க. தமிழன்பர் வாழ்க. தமிழ்ப் புலவர் நாடெங்கும் பல்குக. சிவப்பிரகாச முனிவர் முதலிய நல்லிசைப் புலவர்களை அடியொற்றி வாழ்பவரும், சாத்திரங்களும் தோத்திரங்களும் காஞ்சிப்புராண முதலியனவுமாய பல் தமிழ்நூல் களை நன்கு தமிழகத்துக்கு உதவியவரும், 'வண்ணக் களஞ்சியம்' 'தமிழ்க் கருவூலம்' என விளங்குபவரும், துறவொழுக்கம் பூண்ட வருமாகிய காஞ்சி நாகலிங்க முனிவர் வாழ்க. அவர்க்கு இப்போது இம் முத்துவிழாவும் பின்னர் வைரவிழா முதலியனவும் முறையே நிகழ்க. தமிழ்ப் பற்றுடையாராகி இம் முத்து விழாக் கொண்டாட முன்னிற்கும் அறிஞர் கூட்டம் இனிது வாழ்க.

வாழ்க தமிழ். வாழிய தமிழ் நூல்கள். வாழியர் தமிழ் மக்கள்.

# ஆவுந் தமிழரும்

(ஞா. தேவநேயன்)

எல்லா நாட்டிலும் எந்நிலை நாகரிகத்திலும் ஆவானது அருமையாய்ப் போற்றப்படுவதேயாயினும், தமிழ்நாட்டில் அது தலைசிறப்பப் போற்றப்பட்டதென்பது எவரும் மறுக்கொணாதது.

ஆரியப் பார்ப்பனர் ஆக்கொடையையே மிகுதியாய் விரும்பிப் பெற்றமையானும், ஆவோடு சேர்த்து வாழ்த்தப்படும் அந்தணரை ஆரியப் பார்ப்பனரென்று இடைக்காலத்திற் பிறழ வுணர்ந்தமையானும், ஆவுக்குத் தமிழரோடுள்ள தொடர்பினும் ஆரியரோடுள்ளது மிக்கதென்று தவறாகக் கருதப்படுகின்றது. வடமொழியாரியர் சிந்து வெளிக்கு வந்த புதிதில் முல்லை நாகரிகத்தையே அடைந்திருந்தமையால், அவருக்கு ஆத்துணை இன்றியமையாததா யிருந்திருக்கலாம். ஆனால், இதனால், தமிழர்க்கு ஆத்தொடர்பு தோன்றாதொட்டதென்னும் உண்மை வலிமை குன்றாது.

மக்கள் நாகரிகம் குறிஞ்சி, முல்லை, மருதம், நகரம் என நான்கு நிலைகளையுடையது. அவற்றுள் குறிஞ்சியிலேயே தமிழர்க்கு அல்லது தமிழரின் முன்னோர்க்கு ஆத்தொடர்பு இருந்திருத்தல் வேண்டும். ஏனெனின், ஆவானது முதன்முதல் குறிஞ்சி நிலத்திற்கே யுரிய விலங்காம். குறிஞ்சியையடுத்த முல்லை நிலத்திலிருந்த ஆயர் ஆட்டையும் மாட்டையும் பெருவாரியாய் வளர்த்து அவற்றின் ஊனையும் பாலையும் உண்டு வாழ்ந்தனர். அவர் ஆட்டினும் மாட்டையே சிறப்பாய் வளர்த்தனர். ஆவை மேய்ப்பவர் ஆயர் எனப் பெயர் பெற்றமை கவனிக்கத்தக்கது.

ஆ என்னும் பெயர் தற்காலத்திற் பெண்பாலையே குறிப்பினும், முற்காலத்தில் இருபாற்கும் பொதுவாயிருந்தது. இது நகரச் சாரியை பெற்று ஆன் என நிற்கும்:

"ஆவார் கொடியாய்" (திருவிளை. நரிபரி. 19)
"பெற்றமும் எருமையும் மரையும் ஆவே" (தொல். 1560)
"ஆன்முகத்த னடற்கண நாயகன்" (கந்த. பானு. 95)

ஆன் = எருமை பெற்றம் மரை இவற்றின்பெண் (திவா.) ஆடு, மான், மரை, மிழா, கடமை, மாடு என்பவை முறையே ஒன்றினொன்று சிறிது வேறுபட்ட இனமாம். மா என்பது விலங்குப் பொதுப்பெயராயும் குதிரைப் பெயராயுமுள்ளது. குதிரை மானைப்போல வேகமாய் ஓடக்கூடியது ; வடிவிலும் ஓரளவு அதை ஒத்தது. மா என்பது னகரச்சாரியை பெற்று மானையுங் குதிரையையுங் குறிப்பதுடன், விலங்குப் பொதுப்பெயராயுமிருக்கும். கடமா (கடம் + மா) என்

பது காட்டாவிற்கும் காட்டெருமைக்கும் பெயர். இதனால், ஆ என்னும் பெயருக்கும் மா என்னும் பெயருக்கும் ஓர் இயைபிருப்பதை உணரலாம். இவ்விரண்டும் னகரச்சாரியை பெறுவதும் இங்கு நோக்கத்தக்கது.

மா என்னும் பெயரே ஆ என்று திரிந்திருக்கலாம். மா அ அ என்று முக்காரமிடும் மாடு மாவெனப்பட்டது. மா - ஆ; மான் - ஆன் மா - மான் - மாடு. ஒப்புநோக்க; கா - கான் - காடு. ஆ - அவன் - வாடு (தெ.) ஆ என்பது முதலில் மாடு என்று பொருள்பட்டுப் பின்பு பசுவிற்கு வரையறுக்கப்பட்டது.

பண்டையுலகம் முழுமையும் மாடே மக்கள் செல்வமாயிருந்தது; அதனால் செல்வம் மாடெனப்பட்டது.

"கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை."

E. Pecuniary=relating to money; L. Pecunia=money Pecudes(pl.)=cattle.

மக்களுக்கு முல்லை நிலத்திலேயே உழவு தோன்றிற்று; அது மருதநிலத்தில் சிறப்புடைந்தது. முன்னதில் புன்செய்ப்பயிரும் பின்னதில் நன்செய்ப்பயிரும் விளைக்கப்பட்டன. மாடு இருநிலத்தார்க்கும் ஊனும் பாலும் உதவியதுடன், இருவகை வேளாண்மைக்கும் உழுதிறைத்துதவியது.

"பகடு நடந்த கூழ்"

என்றார் நாலடியார்.

மாட்டின் ஊனும்பாலும் மட்டுமல்ல; தோல், கொம்பு, உரசனை (ரோசனை), வால்மயிர், சாணம் முதலிய பிறவும் பயன்பட்டன. வீட்டைத் துப்புரவு செய்யவும் அடுப்பெரிக்கவும் பயிருக்குரமிடவும் சாணம் உதவுவது. சிறந்த உணவும் மருந்துமாகிய தயிரும் மோரும் வெண்ணெயும் நெய்யும் பாலிலிருந்தெடுக்கப்படுவன. இங்ஙனம், உணவை விளைவிப்பதும் தானும் உணவளிப்பதும் வேறு பல்வகையுதவுவதுமாகிய மாட்டினத்தைச் செல்வமாக மட்டுமன்றி மக்கள் போலும் கருதிவந்தனர் முன்னைத்தமிழர். (பால் முதல் நெய்யீறாகவுள்ள ஐந்தும் ஐயமுதம் (பஞ்சாமிர்தம்) எனப்படும். இவற்றுள் இரண்டை விலக்கி அவற்றிடத்தில் ஆநீர் ஆப்பி என்பவற்றைக்

கூறுவது, தமிழர் கொள்கையறியாத புராணிகர் கூற்று என்பர் துடிசைகிழார் அ. சிதம்பரனார்.)

> " ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
> காவலன் காவான் எனின் " (560)

என்று வள்ளுவர் கூறுவதால் ஆவின் பயம்பாடு உணரப்படும் :

> " ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
> கிரவின் இளிவந்த தில் "

என்பது இரவைக் கண்டிப்பினும், ஆவின் அருமையை உணர்த்தாது போகவில்லை.

ஆவும் ஆவேறும் (காளையும்) மிகப்பயன்படுவது பற்றி அவற்றின் வரவு கண்டு முறையே 'என் அம்மை வந்தாள், அவளுக்குப் புல்லிடு' 'என் அப்பன் வந்தான், அவனுக்குத் தண்ணீர் காட்டு' என்று அன்புரைகளைக் கூறிவந்தனர் உழவர். இவை திணைவழுவுக் கெடுத்துக் காட்டாக இலக்கணத்தில் வழிவழி கூறப்பட்டன. அதோடு, சாத்தன் சாத்தி கொற்றன் கொற்றி முடவன் முடத்தி கொடும்புறமருதன் கொடும்புறமருதி முதலிய மக்கட் பெயர்களையே ஆவுக்கும் ஆவேற்றுக்கும் இட்டு அழைத்தனர். இவை, இயற்பெயர் சினைப்பெயர், சினைமுதற்பெயர் என மூவகை விரவுப் பெயராகத் தொல்காப்பியத்திற் கூறப்பட்டன. (சொல். 174) 'சாத்தன் வந்தது' 'முடவன் வந்தது,' 'சாத்தன் புற்றின்னும்,' 'சாத்தி கன்றீனும்' முதலிய சொல்லதிகாரவுரை யெடுத்துக் காட்டுகளை நோக்குக.

காளை மக்கட்காக மிக உழைத்தலினால் 'மாடுபோலுழைத்தல்' என்னும் வழக்கெழுந்தது. காளை விடலை என்னும் பெயர்கள் உவமையாகு பெயராக மறவர்க்கும் குறும்பரசர்க்கும் வழங்கிவந்தன. இடையூற்றைப் பொருட்படுத்தாமல் எடுத்த காரியத்தை முடிக்கும் திறவோன் பகடெனப் புகழப்பட்டான்.

> " மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
> இடுக்கண் இடர்ப்பா டுடைத்து " (624)

இளைஞரின் வலிமையை யறிதற்கு 'ஏறுதழுவல்' (கொல்லேற்றைப் பிடித்து நிறுத்தல்) அளவையாகக் கொள்ளப்பட்டது. முல்லை நிலத்திலுள்ள ஆயரும் ஏறுதழுவின இளைஞர்க்கே பெண் கொடுத்துவந்தனர்.

ஆவின் வாலையும் எருதின் வாலையும் பற்றி ஆழமான ஆற்றைக் கடந்தனர். எருது ஊர்தியாக உதவிப் பொதியுஞ் சுமந்தது. இன்றும் வண்டியிழுக்கின்றது.

ஆவும் ஆவேறுமாகிய இரண்டும் மக்கட்குப் பயன்படுவேனும்' அவற்றுள், ஆவே அமைதியுடைமையும் அமுதளித்தலும் இருபாற் கன்றீனுதலும் பற்றிச் சிறப்பாகப் போற்றப்பட்டது. 'பார்த்தாற் பசுப்போல, பாய்ந்தாற் புலிபோல' என்பது பழமொழி. ஆவுக்கு வாயுறை முப்பத்திரண்டறக் கொடைகளுள் ஒன்றாகக் கொள்ளப் பட்டது. இழக்கும் பொருளும் ஆவின் வாய்ப்பட்டால் ஆக்கமாம் என்னுங் கருத்தில், 'பாழாய்ப் போகிறது பசுவின் வாயிலே' என்னும் பழமொழி யெழுந்தது. தான் உண்டதை மீட்டும் தன் வாய்க்குக் கொணர்ந்து அசையிட்டுச் செரிக்கச் செய்வதுபற்றி, ஆவானது தலை மாணாக்கர்க்கு உவமையாகக் கூறப்பட்டது.

ஆவின் தினவு தீர்த்தற்பொருட்டு, ஆவுரிஞ்சியென்றும் ஆவுரிஞ்சுதறியென்றும் ஆதீண்டுகுற்றியென்றும் சொல்லப்பட்ட தறிகள் ஊர்தொறும் நட்டப்பட்டிருந்தன.

மக்களால் வாழ்த்தப்படும் பொருள்களுள் ஆவும் ஒன்றாயிற்று. 'அறமுறை வாழ்த்து' என்னும் தொல்காப்பியப் பகுதியுரையில் (தொல். பொ. 81) "முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை வேந்தரும் உலகும்" என்னும் அறுவரை வாழ்த்தல் என்று உரைத்தனர் நச்சினார்க்கினியர். மக்கள் நல்வாழ்விற்கு ஆவும் ஒரு காரணம் என்பதை உணர்ந்தே அதை வாழ்த்தினர் தமிழர்.

"வாழ்க அந்தணர் வாழ்க ஆனினம்"

என்றார் திருஞான சம்பந்தரும்.

அந்தணர் - முனிவர். பார்ப்பார் - நூல் பார்ப்பவர். தமிழகத்தில் முதலாவது பார்ப்பார் என்றிருந்தவர் தமிழர். பின்னர் பிராமணரும் தொழிலொப்புமை பற்றிப் பார்ப்பார் எனப்பட்டார். முதலாவது, செம்மார் என்னும் தமிழ் மரபினர் செருப்புத் தைத்துக் கொண்டிருந்து, பின்பு வடக்கிருந்துவந்த சக்கிலியரென்னும் தெலுங்கரும் தொழிலொப்புமை பற்றிச் செம்மார் எனப்படுதல் காண்க.

ஆக்கள் மக்களைப்போல் மட்டுமன்றி அவரினும் மேலாகத் தூய்மை அல்லது தெய்வத் தன்மையுடையனவாகவுங் கருதப் பட்டன. ஒரு நாட்டிலுள்ள ஆநிரை கள்வரால் அல்லது பகைவராற் கவரப்படின், அது தூய்மைக் குலைச்சலாகவும் பேரிழப்பாகவும் கருதப்பட்டுக் கடும்போருக்குக் காரணமாயிற்று. ஆன்மடியறுத்தல் மாபெருங் குற்றமாயிற்று. ஆக்கொலையோ சொல்ல வேண்டுவதில்லை.

"ஆன்முலை யறுத்த அறனில் லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவே" (புறம். 34)

என்றார் ஆல்க்கூர்கிமார் எனினும், அது நன்றிமறந்த குற்றத்தை மிகுத்துக் காட்டற்கேயென வறிக.

தீயன செய்யாத செங்கோன் மன்னரும் வேற்று நாட்டைக் கொள்ளக் கருதின் அந்நாட்டு ஆநிரையைத் தன் மறவர் வாயிலாய்க் கவர்ந்தோம்பினர். சில இடங்களில் ஆவிற்குக் கோயிலெடுத்தும் வழிபட்டனர். இது பகுத்தறிவிழந்த காலத்தில் நிகழ்ந்தது.

ஆவிற்குக் கோவென்றும் பெயர். முல்லை நிலத்தார்க்கு அல்லது இடையர்க்கு ஆ என்னும் பெயரினின்று ஆயர் என்னும் பெயர் ஏற்பட்டது. கோ = பசு (பிங்), எருது (இ. வி. 9072). கோ என்னும் சொல் வடமொழியிலிருப்பதால் அது வடசொல்லாகி விடாது. ஆங்கிலத்திலும் அது (A. S. Cu. Ger. Kuh. S. Go.) Cow என்று வழங்குகின்றது. நூற்றுக்கணக்கான தூய தென்சொற்கள் மேலையாரிய மொழிகளினுஞ் சென்று வழங்குகின்றன. தா என்னும் வினைச்சொல் தனித்தமிழ்ச்சொல் என்பது, உலக வழக்காலும் "தாவென் கிளவி ஒப்போன் கூற்றே" என்னும் தொல்காப்பிய நூற்பாவாலும் அறியப்படும். ஆயினும், அதன் தொழிற்பெயரான தானம் என்பது வடமொழிச் சென்று வழங்கி வடசொல்லாகக் கருதப்படுகின்றது. தா என்னும் வினை இந்தியில் தேவ் என்றும் இலத்தீனில் தோ (do) என்றும் வழங்குகின்றது. Donum, donation முதலிய ஆங்கிலச் சொற்கள் இலத்தீனிலிருந்து வந்தவை. இங்ஙனம் எத்தனையோ சொற்களுள. அவற்றுள் குடி (L. Cot) என்பதும் ஒன்று. இதன் விளக்கத்தைக் கால்டுவெல் ஐயரின் ஒப்பியல் இலக்கணத்தின் முன்னுரையிற் கண்டு தெளிக.

கோ + அன் = கோவன் = இடையன்

"கோவ னிரை மீட்டனன்" (சீவக. 455)
கோவன் என்னும் பெயர் கோன் என்று குறுகும். அதன்மேல் 'ஆன்' விகுதிபெற்றுக் கோனான் என நிற்கும். கோனார் என்னும் பெயர் குடிப்பெயராய்த் தொன்று தொட்டுத் தமிழகத்தில் வழங்குகின்றது.

கோவன் என்னும் ஆயன் பெயரே திரியாதும், கோன் கோ எனத் தொக்கும் ஈறுகெட்டும் அரசனைக் குறித்தது. குடிகள் ஆக்களும் அரசன் ஆயனும் போல்வர் என்னுங் கருத்தில், அரசன் கோவன் எனப்பட்டான். கோவன் = அரசன். "கோவனும் மக்களும்" (சீவக. 1843). அரசன் கையிலுள்ள செங்கோலும் அவன் ஆயன் போன்றவன் என்னுங் கருத்தை வலியுறுத்தும். கிறித்தவரின் சமயாசிரியர் ஆங்கிலத்தில் Shepherd என்றும் Pastor என்றும் அழைக்கப்பட்டதும் இக்கருத்துப்பற்றியே. கடவுள் அனைத்துலகுக்

கும் அரசனுனதாலும் ஆயன் ஆநிரையைக் காப்பதுபோல் அவர் மக்களைக் காத்து வருதலாலும், அவரும் கோவன் எனப்பட்டார்.

கோவன் = சிவன் (அக. நி.)

பசு என்னும் வடசொல் கொள்கை நூலில் மக்களை அல்லது உயிர்களைக் குறிப்பது கவனிக்கத்தக்கது. ஆயா என்னும் தமிழ்ச் சொல் காட்டுப் பசுவைக் குறிக்கும். ஆ என்னும் பெயர் னகரச் சாரியை பெறின், ஆமா என்பது ஆன்மா என்றாகும். ஆனுகிய மா என்பது இதன்பொருள். இச்சொல்லே வடமொழியில் ஆத்மா என்றாகும். ஆன்மா என்னும் தென்சொல் உயிரையும் ஆத்மா என்னும் வடசொல் உடம்பையும் சிறப்பாய்க் குறித்தலை நோக்குக.

கோ என்னுங் குறைச்சொல் அரசனையுந் தந்தையையுங் குறிக்கும். "நின்கோ வரினு மிங்கே" (கலி. 116) என்னுமிடத்தில் தந்தையைக் குறித்தது.

இனி ஆனிலை யுலகம் என்று மேலுலகத்தின் ஒரு பகுதி பெயர் பெற்றது, காமதேனு என்னும் கற்பித ஆ பற்றியோ, கண்ணன் பற்றியோ, வேறு காரணம்பற்றியோ, அறிகிலம்.

இதுகாறுங் கூறியவற்றால், தமிழர்க்கு ஆவொடு தொன்று தொட்ட தொடர்புண்டென்றும், ஆவென்னும் பெயர்போன்றே கோ வென்னும் பெயரும் தனித்தமிழ்ச் சொல்லென்றும், வடமொழியி லிருப்பவையெல்லாம் வடசொலல்லவென்றும், ஆரியஞ் சென்று வழங்கும் தமிழ்ச்சொல் பலப்பலவென்றும், ஆவின் அருமை பெருமையைத் தமிழர் செவ்வனேயறிந்து அதற்குத்தக அதனைப்போற்றி வந்தனரென்றும், மக்கள் ஆக்களாகவும் அரசனும் கடவுளும் ஆயராகவுங் கருதப்பட்டனரென்றும், இக்கருத்தே உயிர்கள் ஆன்மாவென்று தென்மொழியிலும் பசுவென்று வடமொழியிலுங் குறிக்கப் பெற்றமைக்குக் காரணமென்றும் தெரிந்துகொள்க.

குறிப்பு:—அந்தணர் என்னும் சொல் முதன்முதல் தமிழ் முனிவரையே குறித்தது. பின்பு அது முறையே முனிவர் நிலையடைந்த ஆரியரையும், அடியாராயிருந்த அல்லது மறைத் தொழில் புரிந்த பிராமணரையும் இறுதியில் எல்லாப் பிராமணரையும், படிப்படியாய்த் தழுவலாயிற்று. 'ஆவொடு பொன்னீதல் அந்தணர்க்கு முன்னினிதே' என்பது பிற்காலக் கருத்து.

# நாணுடை மாது

வே. வெங்கடராஜுலு, பன்மொழிப்புலவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

பெரும்புலவர் தங் காப்பியத்தைக் கற்போர் இடைவிடாது கற்றற்கு விழையுமாறு சுவையை யமைத்து, நயமுற இயற்றுவர்; அதுவேயன்றி, காப்பியத் தலைவர் முதலியோரின் வரலாறுகளைக் கூறுமாற்றான், நல்லதன் நலனும் தீயதன் தீமையும் நன்கு விளங்கும் வண்ணந் தெரிவிப்பர். இனி, தங்காலத்து மக்களின் நடையுடை உணவுகளையும் பழக்கங்களையும் பிறவற்றையும் இடம் நோக்கி அமைப்பது வழக்கம். சிலர் தங்காலத்தில் வழக்காறு யில்லாதவற்றையும் தமது கற்பனைத்திறத்தால் உலகம் ஒப்புமாறு இயைபுற இயைத்தலும் உண்டு. இவற்றால், சிறந்த காப்பியங்களைப் படிப்போர் காப்பியச்சுவை நுகர்தலேயன்றி, அறம்பொருள் இன்பங்களின் திறனையும், அப்புலவர் காலத்து மக்கள் வழக்காறுகளையும் ஓராற்றான் அறிதலும் கூடும். ஆகலின், ஈண்டு, கம்பராமாயணத்திற் கூறப்பட்டுள்ள செய்தியொன்றனை நோக்குவோம் :

இராமபிரான் திருமணச் செய்தியை அறிவுற்ற தசரதர் தேவியரோடும் வசிட்டர் அமைச்சர்கள் படைவீரர்கள் முதலியோரோடும் மிதிலைக்குப் புறப்பட்டார். அதனையறிந்த நகரமாந்தர் பலருந் திருமணங் காண விழைந்து உடன் சென்றனர். அவர்கள் வழியில் ஆங்காங்குத் தங்கிச் சில நாட்களில் மிதிலையை அடைந்தனர். அயோத்தியிற் புறப்பட்டவர்கள் வழியிடைத் தங்கி மிதிலை புக்கனர் என்பதுவே வரலாறு. ஆயின், அவர்கள் வழியிடைத் தங்கியிருந்த மலையின் வளத்தினையும் பொழிலின் சிறப்பினையும் அங்குப் பூக்கொய்து விளையாடிய நிகழ்ச்சியினையும் நீராட்டு உண்டாட்டு முதலியவற்றையும் கம்பநாடர் விரிவாகக் கூறிச் சுவையுற அமைத்துள்ளார். இவையெல்லாம் வான்மீகத்திற் கூறப்படாதனவே. ஆகலின் இவற்றால், கம்பநாடர் பல்வேறு திறத்து மக்களின் ஒழுகலாறுகளையெல்லாம் ஊன்றி நோக்கி நன்கறிந்தவர் என்பது தெளிவாகும்.

வெண்ணிலவெறிக்குந் தண்ணிய இரவில், செறிமலர்ப் பொழிலில் நறவருந்த அமர்ந்த மக்களின் செய்கையை உரைக்கும் ஆசிரியர் மகளிர் சிலரது செய்கையைக் கூறும்வழி, ஒருத்தி நறவருந்திய செயலினை,

> 'தேன்றரு கமலச் செவ்வாய் திறந்தனள் நுகர நாணி
> ஊன்றிய கழுநீர் நாணந் தாளினால் ஒருத்தி உண்டாள்.'

என்று கூறியுள்ளார். அஃதாவது, பலர் ஒருங்கே அமர்ந்து உண்ணுமிடத்து ஒருபெண் வாய்திறந்து தேன்பருக நாணி, கழுநீர்த்

தாளினை அத்தேன்கலத்தில் ஊன்றி அதனால் தேனை உறிஞ்சிப் பருகி
னுள் என்பது. இதனால், மது முதலிய இனிய பானம் பருகுவோர்
பலர் ஒருங்கமர்ந்து பருகும்போழ்து குழலால் உறிஞ்சிப் பருகும்
வழக்கம் அறிய வருகின்றது. பானத்தைக் குழலாற் பருகும் வழக்கு
இக்காலத்தில் நகரமக்கள் பலரும் அறிவர். ஆயின், கம்பர் காலத்தில்
இவ்வழக்கு விருந்துக் கூட்டத்தில் நிகழ்ந்துவந்தது என்று துணி
தற்கு வேறு சான்று இல்லை. பெரும்புலவர், தம் முள்ளத்தில்
தோன்றும் புதுக் கருத்துக்களை இயைபுறத் தம் நூலில் அமைத்தல்
உண்டு. தங்காலத்தில் இல்லாத ஊர்தி முதலியவற்றை ஆங்கிலப்
பெரும்புலவர் தங்காப்பியத்திற் கூறியிருப்பது ஈண்டைக்கு அறிதற்
பாலது. கம்பநாடர் இவ்வாறு கூறியுள்ள புதுக்கருத்துக்கள் பல
வற்றை அவர் இராமாயணத்தில் ஆங்காங்கு அறியலாகும்.









# அப்பர் அருளிய அறவுரை

[பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார், M.A., கிருத்தவக்கல்லூரி, தாம்பரம்.]

'அரிது அரிது மானுடராதல் அரிது' என ஔவையாராகிய அருந்தமிழ் மூதாட்டியார் கூறிய வண்ணம் மக்கட் பிறவி கிடைப்பதற்கரிய பிறவி என்பது பெறப்படுகின்றது. ஆனால் மக்களுள் பலர் தாங்கள் பிறந்ததின் பலனைப் பெறுவதில்லை. பிறந்ததின் பயன் எது என்பதைக் குறித்து நமது சாத்திர நூல்களும் தோத்திர நூல்களும் நன்கு எடுத்து விளக்கியுள்ளன. மக்கட் பிறவியினைப் பெற்றான் ஒருவன், யான் என்னும் அகப்பற்றினையும் எனது என்னும் புறப்பற்றினையும் விடுத்து மெய்யுணர்ந்து, பற்றற்ற பரம்பொருளினை நினைந்து, வழுத்தி, வணங்கி வீடுபேறு எய்த விழைதல் வேண்டும். இதற்கு நேர் முரணாக மக்களுள் பலர் நன்றாக உண்டு, உடுத்து, உறங்கி, இருவகைப் பற்றினையும் ஏற்று, இவ்வுலக வாழ்வையே மெய்யென்று கொண்டு மகிழ்ந்து தம் வாழ்நாட்களைக் கொன்னே கழிக்கின்றனர். பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி சேர்ந்த ஞானிகள் தாம் பாடியருளிய பாக்களுள் உலகிலுள்ள மக்கள் உய்யும் வண்ணம் ஒரு சில அறவுரைகள் வழங்கியுள்ளனர். அத்தகைய பெருமக்களுள் நமது அப்பரும் ஒருவராவர்.

இவ்வுலக வாழ்க்கையே நிலைபெற்றது எனக்கொண்டு உற்றார் உறவினருடன் மகிழ்ந்து இறைவனை மறந்து வாழும் மக்கள் அப்பர் பெருமான் கூறும் அறவுரையினைக் காண்க. அவர் நமது நெஞ்சினை நோக்கிக் கூறும் அறவுரைகள் பிறரும் அவைகளை ஏற்றுக் கொள்ளும்படி உள்ளன.

> தந்தையார் தாயா ருடன்பிறந்தார்
> தாரமார் புத்திரரார் தாந்தா மாரே
> வந்தவா றெங்ஙனே போமா றேதோ
> மாயமா மிதற்கேதும் மகிழவேண்டாம்
> சிந்தையீ ருமக்கொன்று சொல்லக் கேண்மின்
> திகழ்மதியும் வளரரவும் திளைக்குஞ் சென்னி
> எந்தையார் திருநாமம் நமச்சிவாய
> என்றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே.

(பொது: திருத்தாண்டகம்)

ஆளுடைய பிள்ளையாரும் இதே கருத்தினை வலியுறுத்துகின்றனர்.

> தந்தைதாய் தன்னுடன் தோன்றினார் புத்திரர் தாரமென்னும்
> பந்தநீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றினாயே
> வெந்தநீ றாடியா ராதியார் சோதியார் வேத கீதர்
> எந்தையா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே.

சிலர் 'நாம் என் கடவுளை வணங்கவேண்டும்? நாம் வணங்க அவர் பார்த்துக் கொண்டிருக்கின்றாரோ?' என்றெல்லாம் கேட்பதுண்டு. இத்தகைய வினாக்களுக்கும் அப்பர் விடை இறுக்கின்றார். இறைவன் தன்னை வணங்கும் அடியவர் அன்பினையும் அளக்கின்றார் என்ற கருத்தினைக் கீழ்க் காணும் வரிகள் விளக்குகின்றன.

"விளக்கும் வேறு படப்பிறர் உள்ளத்தில்
அளக்குந் தன்னடி யார்மனத் தன்பினை" (திருக்குறுந்தொகை)

"வேட்கையாற் பரவுந் தொண்டர், அடிமையை
அளப்பர்போலும் ஆவடு துறைய னாரே" (திருநேரிசை)

இதுவன்றி எவரெவர் தன்னை வணங்கி வாழ்த்துகின்றார்கள் என்பதையும் எவரெவர் வீணுகப் பொழுதைக் கழிக்கின்றார்கள் என்பதனையும் இறைவன் கணக்கெடுக்கின்றான் என்பதை அப்பர் நமக்கு எடுத்து விளக்கியுள்ளனர்.

"தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே" (திருக்குறுந்தொகை)

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதனை மேற்கொண்டு அப்பர் பெருமான் நாம் உய்யும் வண்ணம் நமக்கு நமச்சிவாய மந்திரத்தின் சிறப்பினை எடுத்தோதி நம்மை இறைவன்பால் நல்லாற்றுப்படுத்துகின்றனர். 'அறிவற்ற ஏழைகாள்! யான் சொல்கின்றேன் அமைதியாக இருந்து கேளுங்கள். நீங்கள் நமச்சிவாய மந்திரத்தை ஓதுவிராகில் அதனால் பெறுதற்கரிய தவத்தினைப் பெறுவீர்கள். மேலும் நும்மிடத்துள்ள நோயும் பிணியும் போதற்கு இன்றவர் மருந்தாகிவந்து நும்மிடத்தே பொருந்துவர்' என அப்பர் கூறுவதை அடியிற் காணும் கவியிற் காண்க.

"இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்
அருந்தவந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே" (திருக்குறுந்தொகை)

நாம் இறைவர் திருவடியினை வழுத்துவோமாயின் இறக்கும்தருவாயில் அவர் நமக்கு உறுதுணையாக விளங்குவர். "யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்" என்ற திருவாசகத்தின்படி இறக்கும்பொழுது அடையும் துன்பம் பலவாகும். புலனைந்தும் பொறிகலங்கி, நெறிமயங்கி அறிவழிந்தபோது இறைவர் கூற்றினை நீக்கி, நம் குறைகளைந்து திருவருள் பாலித்து, நம்மை ஆட்கொண்டு நம்மிடத்தே மாற்றறியாத செழும் பசும்பொன்னாக விளங்குவார் என்பதை அப்பர் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

"சாற்றிச் சொல்லுவன் கேண்மின் தரணியீர்
ஏற்றின் மேல்வரு வான்கழ லேத்தினால்
கூற்றை நீக்கிக் குறைவறுத் தாள்வதோர்
மாற்றி லாச்செம்பொ னாவர்மாற் பேறரே" (திருக்குறுந்தொகை)

இத்துணைப் பெருங் கருணைக்கடலாக விளங்கும் இறைவனைக் காணும் வழியினை அப்பர் நமக்குக் காட்டியுள்ளனர். உடம்பாகிய கோயிலுள் மனமாகிய விளக்கில் மெய்யுணர்வாகிய நெய்யை ஊற்றி உயிர் என்ற திரியினை இட்டால் அதுபோழ்து தோன்றும் ஞானத்தீயால் இறைவனைக் காணலாம். இதுவே இறைவனைக் காணும் வழி.

"உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே" (திருநேரிசை)

ஞானத்தீயால் இறைவனைக் காணலாகும் என்பது ஈண்டு நோக்கத் தக்கது. இதே கருத்தினை

"உள்ளத்தே திரியொன் றேற்றி உணருமா றுணரவல்லார்"
(திருக்கடவூ-திருநேரிசை)

"ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தாய் உனை நானுந் தொழுவனே"
(பொது: தனித் திருக்குறுந்தொகை)

என நாவுக்கரசர் பிறிதோரிடத்தும் கூறுவதைக் காண்க.

"சிறப்புடைய புராணங்க ளுணர்த்தும் வேத சிரப்பொருளை
மிகத் தெளிந்துஞ் சென்றூற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின்
ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்

என்பது சிவஞானசித்தியார். (சிவஞான சித்தியார் 8, மு: 11)

வீடு பேறு அடைதற்குரிய சாதனங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காம். "பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவற் படிவழி சென்று சென்றேறி" (கருவூர்த் தேவர்-திருவிசைப்பா) என்பதற்கு ஏற்ப நாம் அப்பர் காட்டியுள்ள அறவுரையின்படி ஒழுகி, மேலே காட்டிய சாதனங்கள் நான்கின் வழியே முறையே நின்று, இறைவன் திருவடியைச்சேர இறைவன் திருவருள் கூட்டுவதாக.

# வாழ்த்தும் பாராட்டும்

முனிவர் முத்துவிழா சம்பந்தமாக விழாக் குழுவினருக்குக் கிடைத்த வாழ்த்துச் செய்திகளில் முக்கியமானவற்றிலிருந்து சில பகுதிகள் கீழே வெளியிடப்பட்டிருக்கின்றன. தாள் நெருக்கடியினால் மிகுந்தவற்றை வெளியிட இயலாமை குறித்துக் குழுவினர் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றனர்.

## திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

சென்னை.

வண்ணக் களஞ்சியம்—காஞ்சி நாகலிங்க முனிவரின் முத்து விழா அறிக்கை வரப்பெற்றேன்: அவ்வரவு எனக்குக் களிபேருவகை ஊட்டியது. இந்நாளில் முத்து விழாவைக் கேட்டலும் அருமை. அவ் வருமையைத் தவத்தால் எளிமையாக்கிய நாகலிங்கனார்க்கு எனது வணக்கம் உரியதாக.

நாகலிங்க முனிவர்க்கும் எனக்கும் உற்ற கேண்மை இன்றையதன்று; நேற்றையதன்று. அது நாற்பதாண்டையது. அவர்தம் நற்காட்சியும் இன்னுரையும், சிவ மணத்தையும் தமிழ் மணத்தையும் கமழ்விக்கும். அவரது சிவத்தொண்டும் தமிழ்ப் பணியும் காலத்தில் பயன்பட்டதை நாடறியும். மெய்கண்ட நூலை முதல் முதல் வெளியிட்ட பெருமை முனிவர்க்கு உண்டு.

வண்ணக் களஞ்சியத்தின் வாழ்க்கை வெள்ளி மலை இவர்ந்து, பொற்காடு புகுந்து, மணிவயல் கடந்து, இப்பொழுது முத்துக்கடலாகிறது. இனி அது பவள வண்ணமாய்ப் பொங்கி வளர்வதாக.

நாகலிங்க முனிவர் நாள் பெருக; கடல் மணலினும் பெருக.

சைவம் வாழ்க! தமிழ் வெல்க!

---

## மகா சன்னிதானம், ஸ்ரீ மௌனசாமி மடம், சிதம்பரம்.

வண்ணக்களஞ்சியம், காஞ்சி, நாகலிங்க முனிவர் அவர்கள் முத்துவிழா நடைபெறுவதறிந்து மிக, மிக மகிழ்ச்சி எய்துகின்றோம்,

சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கையும், மெய்கண்ட சாத்திரம் எனப் பெயரிட்டுப் பதிப்பித்தமையே யன்றி காஞ்சிப் புராணம் முதலான பெருநூல்களையும் பலப்பல சிறு நூல்களையும் அச்சிட்டு வெளிப்படுத்தியமை முதலியன உலகம் நன்கு அறியும்.

பல சங்கங்களை நிறுவியும் பத்திரிகைகள் நடாத்தியும் பணியாற்றிப் பலரை முன்னிலைக்குக் கொண்டுவந்துள்ளார். சென்ற நூற்றாண்டிலிருந்த புலவர் பெருமக்களொடும் இந்த நூற்றாண்டிலிருக்கும் புலவர் பெருமக்களொடும் பழகி நிறைந்த அனுபவம் வாய்க்கப்பெற்றவர்.

மிகப் பல நுண்ணிய நூற்கருத்துக்களை யெல்லாம் போது போக்காகப் பேசிக்கொண்டிருக்கும்போதே எடுத்துச் சொல்லுவர். பண்டிதர் முதல் பாலர் வரையில் எளிமையிற் பழகி அவரவர் உள்ளம் உவப்ப இனிய குரலில் எளிய நடையிற் பேசும்பான்மை போற்றத்தக்கது.

அன்னார் எங்கட்கு நெடுந்தொலைவில் வசித்து வந்தாலும் ஆண்டுதோறும் எங்கள் இருப்பிடம் வந்து எம்முடன் கலந்து உரையாடுவார். அவர் வரும்போ தெல்லாம் புதுப் புது புலவர்கள் துணையுடன் வருவார்.

சமயப் பணி, குலப் பணி, பொதுப் பணிகளில் மிகவும் ஈடுபட்டுழைத்து எண்பதாண்டு நிறைவுற்ற முனிவரின் முத்துவிழா பல்வளங்களோடும், நாடெங் கும் நடைபெறுக! அன்னார் இன்னும் பல அரிய பணிகள் புரிந்து, நீடுவாழ்க என சிற்றம்பல முடையான் திருவருளைச் சிந்திக்கின்றேம்.

மகா சன்னிதானம், ஸ்ரீமத் ஞானியார் மடாலயம், திருப்பாதிரிப்புலியூர்.

"காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களே முதன் முதலாகச் சிவஞானத்தை எல்லோரும் பருகும்படி தெளிவான நூல் வடிவில் தமிழ் நாட்டிற்கு வழங்கிய வர்கள்."

தென்னாப்பிரிக்கா திரான்ஸ்வால் செங்குந்த சங்கத்தினரின் தந்திச் செய்தி.

முனிவரவர்களின் 80-ம் ஆண்டு நிறைவிழா நேரத்தில் அவர்களை உளமார வாழ்த்துகின்றேம். அவர்கள் புரிந்துவரும் சமய, சமுதாய மொழித் தொண்டு களைத் தொடர்ந்து நடத்தி வெற்றி வாகை சூடுமாறு அவர்கட்கு நீண்ட ஆயுளை அளிக்க வேண்டுமென இறைவனை வழுத்துகிறோம்.

ஞா. தேவநேயப் பாவாணர்,

தமிழ்ப்பேராசியர், சேலம் கல்லூரி.

சிறந்த மேலைத் தமிழறிஞரான ஜி. யூ. போப்பையரும் பாராட்டுமாறு தமிழ்ச் சிவக்கொள்கை நூல்களை முதன்முதல் அழகாக வெளியீட்டும், ஒரு விரிவான தமிழ் அகர முதலைத் தமிழராய்த் தொகுத்தும், தமிழருள் ஒரு பிரிவா ரான செங்குந்தரை முன்னேற்றுதற்கெனத் தோன்றி நிலவிவரும் 'செங்குந்த மித்திரன்' என்னும் மாத இதழுக்கு முதற்காரணமாயிருந்தும் பல வண்ணம் பாடியும் பல வண்ணம், தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் அரும்பெருந் தொண் டாற்றி எண்பானாண்டு நிரம்பிய வண்ணக்களஞ்சியம் மறைத்திருக் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் நீடூழி நிலவுலகத்தில் நிலவுமாறு எல்லாம்வல்ல இறைவன் அருள் செய்க.

அன்பு கணபதி.

செயலாளர், தமிழ் வித்வான் சங்கம்.

"காஞ்சி உயர் திரு. நாகலிங்கர் தமிழுக்கும், தம் சமூகத்திற்கும் செய்த தொண்டு பெரிது. அவர் இன்னும் பல்லாண்டு இப்பாரினில் வாழ்ந்து பைந் தமிழுக்குப் பணிகள் பல புரிவாராக!"

திரு. அ. சண்முகம்,

பிரசாரகர், செங்குந்த மகாஜன சங்கம், சென்னை.

"உயிருக்கு ஆக்கந்தரும் ஐந்தெழுத்தைத் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டவல்ல சித்தாந்த சைவ நூலாகிய மெய்கண்ட சாத்திரத்தையும், தேவாரத் திருவாசகத்தையும், திருப்புகழ் தலபுராணம் முதலிய நூல்களையும் ஆராய்ந்து வெளியிட்டுதவி செய்தவரும், செங்குந்தர் பிரபந்தத் திரட்டினைப் பதிப்பித்தாரும், சமூக சம்பந்தமான அருஞ்செயலாற்றியவரும், தமிழ் நாட்டிற்குத் தமிழ்த்தொண்டே பெருந் தொண்டெனக் கருதி தொண்டு பூண்டவரும், ஆயிரம் பிறை கண்டவருமாகிய ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்கள் நீடூழி வாழுமாறு எனதுளத் துறையும் தணிகை நாதனை வாழ்த்துகின்றேன்."

வேத மொழிபெயர்ப் பாசிரியர்

காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள்.

வீரவாகு தேவர் குலத்திற்கொரு தோணியாயும், சைவ சமய நூல்களுக்கொரு விளக்காயும் உதித்து அறுமுகக் கடவுளின் அடிக்கமலத்தில் என்றும் நீங்காத வழுவ லன்புடையராய் தமிழ்நாட்டுக்குச் செய்த பணி மிகப் பெரிதா மன்றோ? வணக்கம்.

திரு. வே. ஏரம்ப முதலியார்,

நீர்ப்பாசன இலாகா அதிகாரி, மட்டக்களப்பு, இலங்கை.

"இப் பெரியாரின் வாழ்க்கை தமிழர் யாவர்க்கும் ஒரு படிப்பினையாக இருக்க நீண்ட ஆயுள் இறைவன் அருள்வாராக".

C. நடராஜ முதலியார், B.A., B.L.,

வழக்கறிஞர், அமைச்சர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம், கௌரவ ஆசிரியர் 'செங்குந்த மித்திரன்' சென்னை

"சைவசித்தாந்தத்திற்குப் புத்துயிரளித்தவர், செங்குந்தர் இயக்கத்தைத் தோற்றுவித்தவர், காரனேஷன் தமிழகராதியைத் தொகுத்தவர், அடக்கத்திற்கு இருப்பிடமானவர், எளிய வாழ்க்கையின் எழிலை எடுத்துக் காட்டுபவர், தூய வாழ்க்கையில் தோய்ந்தவர் நம் முனிவர். இறைவனருளால் இவ்வுலகில் பல்லாண்டு வாழ்க."

செங்குந்த வாலிபர் சங்கம், கூறைநாடு, மாயவரம்.

வண்ணக் களஞ்சியம் ஸ்ரீலஸ்ரீ முனிவர் அவர்களின் 80ம் ஆண்டு நிறைவினைப்பற்றிய முத்துவிழா வைபவம் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் தலைமையில் நடைபெறுவது கேட்டு இன்புறுகிறோம்.

கோயில்பட்டி தாலுக்கா, அயன் பொம்மையபுரம் செங்குந்தர் சன்மார்க்க சங்கத் தலைவர்.

தமிழ்ப் பேராசிரியர், வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர் சைவ சித்தாந்தத்திற்கும் செங்குந்த உலகத்திற்கும் புத்துயிரளித்த புனிதர்,

## ம. சாமிநாதன்

### காஞ்சிபுரம் நகர சபையின் முன்னாள் தலைவர்.

"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்" எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் அருளிச்செய்தனர். (உலகியல் எஞ்ஞான்றும் நடைபெற்று வருவதற்கு இன்றியமையாது வேண்டப்படுவன மழையும், அரசன் ஆணையும் முதலாகப் பல உளவேனும் அவை எல்லாவற்றுள்ளும் சிறந்து நிற்பது பண்புடையார் சார்பேயாகும். பண்புடையாராவார் செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர் குற்றம் கூறாமை என்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியராய்ப் பிறர்க்கென முயலும் முயற்சியுடையோரே யாவர். அத்தகையோரைச் சார்ந்து நின்றே உலகியல் நடைபெறா நிற்கின்றது என்பது பொய்யில் புலவராகிய திருவள்ளுவனார் தம் கருத்து.)

வண்ணக் களஞ்சியம்-காஞ்சி-அருட்டிரு. நாகலிங்க முனிவர் அவர்களை மேற்கூறிய இயல்பினையுடைய "பண்புடையார்" எனப் பாராட்டிப் புகழ்தல் மிகையாகாது. அருட்டிரு. முனிவர் அவர்கள் "தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சி" எனவும் "கல்வியைக் கரையிலாத காஞ்சிமாநகர்" எனவும் அருளாசிரியன்மார்களாற் புகழப்பெற்ற, காஞ்சிமாநகரத்தைச் சார்ந்த ஐயன்பேட்டை என்னும் ஊரில் பரம்பரைச் சைவ செங்குந்த குலத்திற்றேன்றி, மறுவின்றி வளரும் மதியமேபோல் கல்வி கேள்வி அறிவு ஒழுக்கம் முதலியனபெற்று வளர்ந்தோங்கி அரும்புலமை எய்தித் துறவுபூண்டு தமிழ் மொழி வளர்ச்சியும், சிவநெறி விளக்கமும், செங்குந்த குல முன்னேற்றமுங் கருதி முயன்று நன்றாற்றிய அறவோர். அவர் இயற்றியுள்ள செயல்கள் மிகப் பல. அவர் மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவராய் இருந்தமையானும், ஞான ராஜதானி எனப்படும் திருவாவடுதுறை ஆதீனத்தில் சிறந்த தொடர்புடையராய், பிற்காலத்து வந்து புகுந்த ஆரியப் புனர் நெறிகளால் பண்டைத் தமிழ் மெய்ந்நெறி விளக்கங் குறையாது துலங்கி நின்று மக்கட்குப் பயன்படுவகையில் அதனைத் தருக்கம், இலக்கணம், மரபு முதலிய கருவிகளாற் செம்மையாக விளங்க விரித்துரைக்கும் மெய்கண்ட நூல்களை அவற்றின் உரைகளுடன் வெளியிட்டருளினமையானும் பிறவாற்றானும் அவர் தம் அருந்தமிழ்ப் புலமையும், தொண்டும் புலனாகும். அன்னவர்தம் அருமை பெருமைகளை யுணர்தற் பொருட்டு, அவரைப் புகழ்ந்து பாடிய சில புலவோரது பாடல்கள் ஈண்டெடுத்துக் காட்டப்படுகின்றன.

"அப்பத்துடனே பலமொழி சேர்த்தங்
　　கச்சிட வேண்டுமென் றன்பால்
எப்பொருட் கிறைவன் திருவருள் பெற்றேன்
　　இருந்தமிழ் இனிதுகற் றுணர்ந்தோன்
செப்பருங் குணத்தான் காஞ்சிநா கலிங்கச்
　　செந்தமிழ்த் தொண்டைமண் டலத்தான்
தப்புற வில்லா தாயிரக் கணக்காய்த்
　　தமிழ்ப்பதஞ் சேர்த்தனன் குதவ."

—பாண்டித்துரைத் தேவர்.

"முன்னமச் சிட்டவிரண் டாம்பதிப்பின்
அகராதி முற்றுஞ் சூழ்ந்து
மொழிகள்ஆ யிரம்ஆயி ரம்ஆயி
ரஞ்சேர்த்து முற்று வித்தான்
என்னருமைக் கண்மணிநேர் மாணவகன்
காஞ்சிநகர் எழில்விற் பன்னன்
இரும்வண்ணக் களஞ்சியநன் ஞகலிங்க
நாவலனும் எழின்மை யோனே."

—பூவை. கலியாணசுந்தர முதலியார்.

"துங்கத்தார் புணைபாண்டித் துரைசாமித் தேவரவர்
தங்கத்தா மரைமதுரைத் தலத்திற்ரு பித்த தமிழ்ச்
சங்கத்தா ரினும் ஒருவன்."

—கே. எஸ். சுப்பராய ஐயர்.

என வரும்.

இப் பெரியார் நங்குலத்தில் தோன்றினமை நமக்கெல்லாம் பெருமிதம் பயப்பதேயாகும். அன்றியும் எமது முன்னோர்களுக்கும் திருவாவடுதுறை ஆதீனத்திற்கும் பெரியதொரு தொடர்புண்டென்பது யாவரும் அறிந்ததொன்று. அத் தொடர்பினை உண்டுபண்ணியவரும் அவ்வாதீனத்தாரால் குலதெய்வமாகக் கொண்டு போற்றப்படுபவருமாகிய சைவசித்தாந்த மாபாடிய கருத்தர் மாதவச் சிவஞான முனிவரது அரும்பெரும் வரலாற்றினை முதன்முதலாகத் தமிழுலகத்திற்கு விரித்து எழுதி உபகரித்த பெரியார் அருட்டிரு. நாகலிங்க முனிவர் என்பதை உணர எனக்குத் தனிப்பெரு மகிழ்ச்சி உளதாகின்றது. செங்குந்த வுலகின் குலதெய்வமாக, காஞ்சிமாநகரில் அழகம்மையுடன் இச்சித்து வீற்றிருந்து அரசுபுரியும் என் அப்பன் ஸ்ரீ கச்சபேசனது இன்னருளால் நங்குல விளக்கமாகிய முனிவரவர்கள் நீடினிது வாழ்க.

## திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை,

### ஆராய்ச்சியாளர், அண்ணமலைப் பல்கலைக் கழகம்

எங்குந்தம் தொழினலத்தால் இந்நிலத்தார் பாராட்டும்
செங்குந்தர் தோன்றல் திருவளரும் காஞ்சிநகர்
வந்தோன் தமிழ்ப்புலவன் வண்ணக் களஞ்சியமாய்ச்
செந்தே னொழுக்கன்ன தீங்கவிகள் செய்வலவன்
செங்குந்த மித்திரனுந் திங்கள் வெளியீட்டால்
பொங்குகுலத் தொண்டாற்றிப் பூத்த புகழுடையோன்
தமிழ்ச்சொன் னிதிநிரலாத் தக்க அகராதி தொகுத்
தமிழ்தப் புணரியென யாம்பரவு மொருதமிழன்
சைவ சமயமிது தான்தமிழர் கண்டதென
மெய் வகையாற் கூறும் மெய்ம்மையுரைக் கடியாகும்
மெய்கண்ட நூல்கள் வெளியிட் டறிவுறுத்த
சான்றோன் பெருந்தக்கோன் சாலநெறி நீங்கும்

ஆன்றோன் அறவோன் அறிவன் அருஞ்சைவன்
நாகலிங்க மாமுனிவன் கட்டற் கினியன்
ஏகம்ப மேவும் இறைவன்றாள் எண்ணுமுளத்
தீண்டை நிரம்பும் எண்பதாம் ஆண்டுவிழா
பூண்ட நலம்பேணிப் பொய்யாமெய் கண்டான்றன்
வேண்டு நெறிபோல் வியலறிஞர் உள்ளம்போல்
யாண்டும் நிகழ்க ; இன்னும்பல் லாண்டுவிழா
நிகழ்கஇவற் கெத்திசையும் நீண்டு.

## க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி.,

### பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.

"உண்டால் அம்ம இவ்வுலகம்...தமக்கென முயலா நோன்றாட், பிறர்க்கென முயலுநர் உண்மையானே." என்றது நல்லிசைப் புலவர் இளம் பெருவழுதியார் ஆய்ந்துரைத்த பொருண் மொழி. இதனால் மக்களாகப் பிறந்தார் யாவரும் வலிய முயற்சியினை யுடையராதல் வேண்டும் என்பதும், அம் முயற்சியினையும் தமக்கெனவுடையராதலன்றிப் பிறர்க்கென வுடையராதல் வேண்டும் என்பதும், அத்தகைய பெரியோர் உலகத்தில் உளராதல் பற்றியே உலகியல் நடைபெறுகின்றதென்பதும் நன்கு விளங்குதல் காண்க. அருட்டிரு நாகலிங்க முனிவர் அவர்கள் கற்பன கற்றும் புலமை நிரம்பித் துறவுபூண்டு பல நூல்களை வெளியிட்டும், தமிழகராதியிற் சைவசித்தாந்த நூல்களில் வழங்கும் சொற்களைச் சேர்த்து விளக்கியும், திங்கள் தாள் முதலியன தோற்றி வெளியிட்டும், கழகங்கள் நிறுவியும் நந்தமிழகத்தினர்க்குப் பெரிதும் பயன் தந்தமையின், மேலெடுத்துக் காட்டிய நல்லிசைப்புலவர் தம் வாயுரையாற் குறிக்கப்பட்ட "பிறர்க்கென முயலும் பெரியோராய்த் திகழ்ந்தனர் என்பது விளக்கம். அப்பெரியாரது முத்து விழா தமிழ் மக்கள் யாவருக்கும் மகிழ்ச்சியைத் தருவதொன்று. அன்னார் நீடினிது வாழ்க.

## வித்துவான். பாலூர். கண்ணப்ப முதலியார்,

### தலைமைத் தமிழ் ஆசிரியர், கெல்லட் உயர்கலாசாலை, சென்னை.

திங்கள் தங்கும் கங்கைச் சடையன்
பங்கில் உறையும் பார்வதி அம்மை
என்னோன் கறத்தை இனிதின் இயற்றிய
தண்ணார் நிலமெனத் தண்டமிழ்ப் புலவர்
நச்சிப் பெரிதும் மெச்சிப் புகழும்
கச்சிப் பதியின் கவினுறு புலவ !
நாகலிங்கமெனும் நற்பெயர் பெற்றோய் !
கோவையோ டுலாவும் கோதிலந் தாதியும்
பாடும் புலமையில் ஈடிலை இவர்க்கென
உரிமையோ டுலகர் உவப்பாய்க் கூறும்
ஒட்டக் கூத்தர் ஒளிர்மர புதித்தோய் !
உரைநூல் சிலவோ டுண்மைநூல் பலவும்

எழுதிப் பதிப்பித் தெழிலாய் அளித்தோய் !
முத்து விழாவென முதறி ஞர்பலர்
வித்தக மாக விரும்பிச் செய்யும்
பீடு பெற்ற பேறி வாளா !
இன்றும் பற்பல இன்றமிழ் நூல்கள்
உரமும் ஆயுளும் உள்ளக் கிளர்ச்சியும்
மயிலோன் உனக்கு மகிழ்ச்சியோ டீய
மற்றவன் மலரடி மனத்தே
வாழ்த்தி வந்தித்து வணங்கு வேனே.

## மோசூர். கந்தசாமி முதலியார், பி.ஏ.,

### தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

வெண்பா

சீர்திகழும் காஞ்சிநகர் நாகலிங்கன் சித்தாந்தப்
பேர்திகழும் மெய்ந்நூல்கள் பீடுறுமோர்—பார்திகழ
அச்சிட்டான் ஞானவொளி ஆசான் மணவழகு
விச்சிட்ட வித்தகத்தி னல்.

முருகப் பெருமான் முருகதாச வள்ளல்
பெருகுஞ் சிவதலங்கள் பேண—உருகும்
தமிழ்ப்புலவர் சைவமடம் ஏற்றத் தமிழர்
அமிழ்தமெனக் கொண்டோன் அறி.

1. [மெய்ந்நூல்கள்—மெய்கண்ட தேவர்செய்த சிவஞானபோத முதலிய பதினன்கு நூல்கள். ஞானவொளி—திருக்கைலாய பரம்பரை காஞ்சிபுரம் மகாசந்நிதானம் ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள். மணவழகு—சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார். விச்சிட்ட—விதையாக இட்ட. வித்தகம்—அறிவு.

2. ஏற்றம்—முன்னேற்றம்.]

## மொ. அ. துரைஅரங்கசாமிப் பிள்ளை

### தமிழ் விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி சென்னை.

சைவப் பசும்பயிர் தழைத்து வளரச் செய்து வரும் நற்றொண்டருள் நற்றொண்டர் திருமிகு காஞ்சி வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முனிவர். பூர்வ பக்கக் களைவாகிய களைகட்டலும் சித்தாந்த நாட்டலாகிய எருப்பெய்தலும் இப்பயிர் நலமுறுதற்கு வேண்டற் பாலனவன்றே! இவ்விரண்டு முடைய மெய்கண்ட சாத்திரங்களாம் கலைநூல்களை உலகிற்கு உதவிய தொண்டர் இம்முனிவர் பெருந்தகையரே ஆவர்; காஞ்சிப்புராணம் முதலிய பழையவரலாற்று நூல்களாகிய நீர்கால்கள் யாத்து இப்பயிர் மேலும் மேலும் தழையச் செய்துள்ளார். கைம்மாறு கருதாது உண்மை வேளாண்மைத் தொழில் புரிந்துவரும் இம்முனிவர்க்கு இன்று உலகம் முத்துவிழாக் கொண்டாட முன்வந்திருக்கின்றது. விழாத்தலைவர்க்கு இவ்விழாப்போன்ற விழாக்கள் பல நடைபெற்றிருக்க வேண்டும்.

ஆயின் என் செய்வது? இன்று தல் தமிழுலகம் தன் தவற்றை யுணர்ந்து விழாக் கொண்டாட முன்வந்ததே என்று உவகைபூத்து அமைதியுறுகின்றேன். முனிவர் மேலும் பல நற்றொண்டுகள் ஆற்றி இன்னும்பல நல்விழாக்கள் பெறுமாறும் பல்லாண்டு நல்லுடலுடனும் குன்றாத ஊக்கத்துடனும் வாழுமாறும் ஆண்டவன் தன் நல்லருளைச் சுரந்தருளுமாறு வேண்டுகின்றேன்.

## மா. அ. கனகசபை

### ஓய்வுபெற்ற அஞ்சல் நிலையத் தலைவர், கோடம்பாக்கம்

"வண்ணக் களஞ்சியம்", "கச்சியடிகள்", "காஞ்சி மாநாட்டு வித்யா பிரசாரகர்", "மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்" ஆகிய பல பட்டங்களைத் தக்க பெரியோரிடத்து பெற்று, பல யாத்திரைகள் செய்து, நூலறிவும், உலக அறிவும் நிறைந்துள்ள திரு. காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களை யான் சென்ற 44 ஆண்டுகளாக நன்கறிவேன். இவர்களது திருவுருவம் 44 ஆண்டுகளுக்கு முன் பார்த்தது போலவே இன்னும் பொலிகின்றது. குணங்களும் அவ்வாறே. கருத்தாற் பெரியராயினும் யாரும் காண்டற்கும், உரையாடற்கும் மிக எளியர். இம் முனிவர்க்கு "யாதும் ஊரே யாவரும் கேளிரே." எங்கள் வீட்டுக் குழந்தைகளும் "முனிவர்" என்றால் இன்னாரெனத் தெரிந்துகொள்ளக் கூடிய முறையில் இவர்கள் அவ்வளவு நெருங்கிப் பழகும் பேற்றை எங்களுக்கு அளித்துள்ளார்கள்.

ஆலய வழிபாட்டில் மிகுந்த பற்றும், நம்பிக்கையும் உடையவர். திங்கள் தோறும் வரும் கார்த்திகை நாட்களில் முனிவரைப் பெரும்பாலும் திருத்தணிகையில் காணலாம். இல்லையேல் கோடம்பாக்கம் வடபழனியாண்டவர் கோயிலிலும் எங்கள் வீட்டிலும் பார்க்கலாம். தம் பெருமையைத் தாமேயறியாத சிலருள் முனிவரும் ஒருவர். சென்னையில் செங்குந்தர் திலகமாய், வணிகர் அரசராய், செல்வர் சிகாமணியாய், லேண்டன்ஸ் தோட்ட (Landans Gardens)த்தின் உரிமையாளராய் விளங்கிய இரங்கூன் வள்ளல் முருகேச முதலியாரின் நெருங்கிய உறவினராகிய 80 ஆண்டுகள் நிரம்பிய இம்முனிவர் பெருமான் இன்னும் பல்லாண்டுகள் உடல் நலத்துடன் நம்மிடையேயிருந்து அறவுரைகள் கூற ஆண்டவன் அருள் செய்வானாக.

## பானுகவி மாணவர் கழகம், திருவத்திபுரம்

### பஃறொழிசைக் கொச்சகம்

எண்ணம்போல் நல்வாழ்வாம் எனுமொழியை மெய்யாக்கி
வண்ணங்கள் மிகக்குவித்த வளர்காஞ்சிக் களஞ்சியமே;

இவன்றந்தை என்னோற்றான் இவற்பெறுதற் கெனுமொழியை
தவனன்றாய் மெய்யாக்கும் தமிழ்அறிவுக் களஞ்சியமே;

உலகத்தில் குலத்தொண்டே உயர்தொண்டாம் எனுமுறையைப்
பலகற்றும் மெய்யாக்கும் பண்புநிறை களஞ்சியமே;

இறையுயிரோ டுலகிற்கீண் டியைந்ததொடர் பறிகல்வி
நிறையப்பெற் றோர்கற்றோர் எனநிகழ்த்தும் களஞ்சியமே;

துறவிக்கு வேந்தனொரு துரும்பெனுமெய் மெய்யாக்கும்
குறைவில்லா மெய்ஞ்ஞானக் குன்றுறையும் திருமுனியே,

" துறந்தார்தம் பெருமைமுற்றும் துணைக்கூறின் " எனுமொழியை
நிறைந்தமொழி யாக்கிமிக நீண்டநாள் வாழ்முனியே,

புலவர்கள்பா டும்பெரியோர் பொன்றுமல் வாழ்உண்மை
நிலவுலகில் நிறுத்தியருள் தொண்டாற்றும் தமிழ்முனியே,

நோகலிங்கென்? மற்றெவையும் நுதல்விழியோன் உளம்போல் என்
நாகலிங்கப் பெயர் காட்டி நலஞ்செய்யும் முனியே கேள்.

இவை நாலடித்தரவு.

"சித்தாந்த சரபம் அஷ்டாவதானம் பூவை-உயர்'
மெய்த் தமிழ்க்கல் யாணசுந்த்ரர் வியன்மாண வனும்நீயே;

சைவநெறி மிகவல்ல சண்டமா ருதப்பெரியார்
மெய்வழியை உள்ளூர விழைந்(து) இணைநண் பனும்நீயே;

குந்தர்குலம் வளர்ந்தோங்கக் குறையாமல் தொண்டாற்றிச்
செந்தமிழை வளர்த்ததிறல் செறிமுதன்மைக் குருநீயே;

தணிகைவண்ணம் வாயாரத் தான்பாடித் தமிழகத்தின்
அணிகைபெறச் செய்துழைத்த அருந்தமிழ்நற் கவிநீயே;

செங்குந்தர் பிரபந்தத் திரட்டினை நன்றே வெளியிட்
டெங்கெங்கும் குலக்கிளர்ச்சி இனிதீ தொண்டனும் நீயே;

மெய்கண்ட நூலைநல்ல விளக்கவுரைப் பதிப்போடு
கைகண்ட முறைவெளியாக் கிடும்பதிப்பா சான்நீயே;

தென்னிந்தி யக்குந்தர் திரள்சங்கம் நிலைநாட்டிப்
பன்னுகுல மித்திரனைப் பதித்தஇதழ்க் குருநீயே;

சொற்பொழிவால் கேளாரும் பிணிக்கவல்ல நிரைந்தினிய
கற்பொழுக்கம் உடையதமிழ்க் கலைப்பேச்சா ளியும் நீயே;

தலைவர்க்குத் தலைவனுய்த் தொண்டர்க்குத் தொண்டனுய்க்
கலைஞர்க்குக் கலைஞனுய்க் கருதவல்ல வனும்நீயே;

அஃதான்று

மாண்டகுந்தர் கவிஞர்குலம் வளர்ந்தெழநீ தோன்றினை என்
றீண்டியம்பி நினைப்புகழ்தல் எவ்வாற்றும் பொருந்துவதே;

அருளுடைமை, அடக்கமொடும் இன்சொல் மிக உடைமைகலைத்
தெருளுடைமை யேநின்றன் உடைமையெனல் பொருந்துவதே;

நினையறியாப் புலவரும் ஓர் புலவரல்லர் புல்லரவர்
என உரைப்போம் எனினுமது என்றுமிகப் பொருந்துவதே

இன்னணம்,

பலவா றினிதே பரந்தநின் மெய்ப்புகழ்
சிலவுமெம் மாலீண்டுச் செப்புதல்அரிதே,
குந்தர் குலத்தோர் குறைகள் நீங்கவும்,
செந்தமி ழன்னை செம்மாந் திலகவும்

சைவர் உலகம் தான் மகிழ்ந் தோங்கவும்
ஐப்பசி மழையின் துளியினும் பன்னாள்
இப்புவி நின்னடி ஏத்தவும் இனிதே
குன்றுதோ றாடும் குமரக் கடவுள்போல்
நன்றருள் வலத்தால் நற்றமிழ் இன்பம்
மாந்திவா ழியர்மிக; மனநலம் போன்றே!

திருநெறித் தமிழிசை வேந்தர்

## ஆ. விநாயக முதலியார், காஞ்சிபுரம்

ஆன்ற புலமையும், சைவ சீலமும், தமிழ்த் தொண்டும், மரபு பேணும் மாண்பும் மிக்க நமது முனிவர் அவர்களை முப்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்தே நான் நன்கறிவேன். அவர், புராணம், பிரபந்தம், அகராதி, முதலியவற்றை ஆராய்ந்து பதிப்பிப்பதில் அதிசமர்த்தர்; பத்திரிகைத் தொழிலிலும் பரிச்சயமுடையவர். தென்னாட்டில் செங்குந்த மரபினர் வதியும் சிற்றூர், பேரூர்களில் அம்மரபினர் முன்னேற்றம் அடையும்பொருட்டு சபைகள் பல நிறுவி, சொல்வன்மை மிக்க தமது சொற்பொழிவுகளால் அவைகள் அபிவிருத்தி யடையுமாறு செய்தும், பத்திரிகைகள் வாயிலாகச் செங்குந்தர்கள், தங் குலப் பெருமை அறிந்தின்புறுமாறு கட்டுரைகள் வழங்கியும் வந்தனர். இற்றைக்குப் பதினெட்டாட்டைப் பருவத்தை எய்தி இளஞ்சூரியன் என இனிதொளிரும் "செங்குந்தமித்திரன்" உன்னத நிலையில் உயர்ந்து விளங்குவதற்குக் காரணம் முனிவரது நன் முயற்சியெனின், அது மிகையன்று.

வளம் பெறும் காஞ்சிமாநகரில் பிறந்தவரும், திருவாவடுதுறை ஆதீனத்தில் பயின்றவரும், மகா சன்னிதானம் அம்பலவாண தேசிகர் முதலிய பல பெரியார்களால் நன்கு மதிக்கப் பெற்றவரும், தணிகைப் பெருமான்மீது பல வண்ணங்கள் பாடி வண்ணக் களஞ்சியம் எனும் சிறப்புப் பெயர் பெற்றவரும் தமது 60ம் ஆண்டிலே துறவு பூண்டவரும், மெய்கண்ட சாத்திரம், தமிழ்மொழி அகராதி முதலிய அரிய நூல்களின் தொகுப்பாளரும், தொழிற்கல்வி செங்குந்தமித்திரன் முதலிய பத்திரிகைகளைத் தோற்றுவித்து நடத்திய ஆசிரியருமாகிய ஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் இம் முத்து விழாவோடு நூற்றாண்டு விழாவும் கண்டு வாழ்வாராக.

## ஜே. தங்கவேலு B. A.

Journalist, Govt. of India, New Delhi.

1. முத்தைப் பழித்திடும் வெண்ணகையீர்—வண்ண
முளரி பழித்திடும் செங்கரத்தீர்
முத்துவிழாவினில் மூழ்கித் திளைத்திடும்
முனிவன் புகழினைப் பாடுங்கடி.

2. செந்தமிழ்த் தாயின் தவப்பயனே—அவள்
செல்வப் புதல்வர்கள் தம்பயனே
குந்தர் குலத்தின் குலப்பயனே—இந்தக்
குரிசில் பிறந்ததிங் கார்பயனே.

3. கன்னித் தமிழில் திளைத்தெழுந்தான்—தமிழ்க்
காவியத் தண்கடல் தோய்ந்தெழுந்தான்
தன்னுடை இன்பமித் தண்டமிழ் நாட்டவர்
தாமுற நூல்களை ஆய்ந்தெடுத்தான்.

4. சைவசமயத் துறைபடிந்தான்—தூய
சங்கமும் முத்தமும் தேர்ந்தெடுத்தான்
உய்வகை காட்டிட மெய்கண்டசாத்திர
ஒப்பறும் மாலையைத் தான்தொடுத்தான்.

5. தொழிற்கல்வி தன்னையும் தோற்றுவித்தான்—அருந்
தொண்டு பலகாலம் ஆற்றுவித்தான்
பழுதில்ஒழுக்கக் கைக்கோளர் விளங்கிடப்
பண்புடன் ஓர்விளக் கேற்றுவித்தான்.

6. காஞ்சிப் புராணமும் பேரகராதியும்
கச்சியடிகள் கை வண்ணமடி
வாஞ்சையுடன் வரும் செங்குந்தமித்திரன்
வள்ளலவன் தந்த செல்வமடி.

7. எண்ணக் களஞ்சிய மானவன்தன்—புகழ்
எங்கும் பரவக்கை கொட்டிடுவோம்
வண்ணக் களஞ்சியம் வாழ்ந்திடவே—இன்று
வாழ்த்துக்கள் பாடி வழுத்திடுவோம்.

8. எட்டாத எண்பதை எட்டிவிட்டான்—குன்றா
எவரிடமும் புகழ் பெற்றுவிட்டான்—அவன்
தட்டாமல் ஓர்சதம் எய்திடவே—எங்கும்
தங்குஞ் செங்குந்தனைப் போற்றிடுவோம்.

## ஆ. வே. முத்தையா முதலியார்,

### புதுவை அரசாங்கத்தின் ஓய்வுபெற்ற அமைச்சர்

"தொழிற்கல்வி" என்ற திங்களிதழ் வெளிவந்த காலந் தொட்டே நமது முனிவருடைய கூட்டுறவு எனக்குக் கிடைத்தது. அதன் முன்னிலையாகத்தான் முதன்முதல் அவர் என்னிடம் வந்ததாக நினைவு - அப்படி வந்த நாள் நன்னாளாகவேயிருந்தது. அதிலிருந்து தொடர்பாகச் சேர்க்கையும் பழக்கமும் நட்பும் வளர்ந்தன. அக்காலத்தில் நமது முனிவர் இல்லற உடையே ஏற்றிருந்தார்கள் - பிறகுதான் துவராடைத் துறவு உடை பெற்றுக்கொண்டார்கள்.

எனவே எங்களுடைய பழக்கம் நெடுநாளையது. அவர்களுக்கும் எனக்கும் வயது பதினைந்தாண்டுகளுக்குமேல் இடையிலிருப்பதால், அவர்கள் எங்களுக்குப் பெரியாராகவே இருந்து வருகிறார்கள். எனது வீட்டிலே கூட அன்றைக்கும் இன்றைக்கும் "முனிவர்" என்னும் சொல் வேறொருவரையும் குறிக்காமல் நமது காஞ்சி நாகலிங்க முனிவரையே குறிக்கும் மொழியாக இருந்து வருகிறது.

தென்னிந்திய செங்குந்த குலமக்கள் நிலை, வழி முதலிய விவரங்கள் எனக்கு முதன் முதலாக முனிவர்களிடமிருந்தே விரிவாகத் தெரியவந்தன. சாதி, சமயம் இவைகளைப் பற்றிய பலப்பல செய்திகளை இவரைச் சந்திக்கும் போதெல்லாம் கேட்காமலிருக்கமாட்டேன். அவர்களுடன் பழக்கமேற்பட்ட பிறகு அவர்கள் வெளியிட்ட சில நூல்களும் எனக்குக் கிடைத்தன. அவர்கள் பலமுறை புதுச்சேரிக்கு வந்திருக்கின்றார்கள். வந்தபோதெல்லாம் என்னைச் சந்திக்காமல் போனது கிடையாது. சில சமயங்களில் எனதகத்தில் உடனிருந்து உண்ணும் உரிமையையும் எனக் களித்திருக்கிறார்கள்.

திரு. ம. சண்முகசுந்தர முதலியார் M.A.L.T. அவர்களைத் தூண்டிச் செங்குந்தர் முதல் மகாநாட்டின் நடுவில் என்னை இழுத்து வைக்கும்படி செய்தவர்கள் அவர்களேயாகும். என்னை மாத்திரமல்ல; இதுபோல் இன்னும் பல பெரியார்களையும் நண்பர்களையும் ஒதுங்கிப் பதுங்கி இருந்தவர்களில் சிலரையும் அரங்கத்தில் இழுத்து வைத்தவர்களும் இழுத்துவைக்கச் செய்தவர்களும் அவர்களேயாவர். இது அவர்களுடைய குலப்பற்றை விளக்குகின்றதல்லவோ.

ஆங்காங்குள்ள நமது குலமக்களுடைய குணங்கள் போக்குகள் முதலியவற்றை நன்குணர்ந்தவர்களாகையால், இவரிவர்களைக் கொண்டு இந்த வகைகளிலே இன்னவின்ன காரியங்களை நடத்தலாமென்ற நுண்ணறிவும் அனுபவமும் நமது முனிவருக்கு உண்டு. ஆனல் சிற்சில சமயங்களில் அதிகமாக நம்பியிருந்த சில நேயர்கள் - இவர்களிடத்தில் பல நன்மைகள் பெற்றவர்கள் சமயத்தில் கைவிரித்து விட்டதுமுண்டு. இதுபோன்ற நிகழ்ச்சிகள் மனித இயற்கைதானேயென்று முனிவர் கருதுவார்களேயன்றி சினந்துகொள்வதில்லை.

மொழித் தொண்டு, குலத்தொண்டு, நட்புத் தொண்டு முதலிய பல துறைகளில் ஈடுபட்டுத் தனது வாழ்நாட்களில் பெரும்பகுதியைக் கழித்த நமது முனிவரவர்களுக்கு இனித் தனியேயிருந்து இறைவன் காட்சியில் களித்து நின்று சிவத்தொண்டுதனை இன்னும் பல்லாண்டு பல்லாண்டுகளாகச் செய்து வருவதற்குத் தக்க வசதிகளை அறுமுகவன் அருளும்படி இறைஞ்சுகிறேன்.

## தி. நா. சபாபதி முதலியார்

### தலைவர்.

### தென்னிந்திய செங்குந்த மஹாஜன சங்கம், சென்னை

யான் பிறந்த செங்குந்தகுலம் மிக மிகப் பிற்போக்கான நிலையிலிருந்தது கண்டு மனஞ்சகியாது அதை முன்னேற்ற எவ்வழிக்காண்போம், எவர் துணைக்கொள்வோம் என யான் ஏங்கியிருந்த காலத்தில், பரிபக்குவமடைந்த ஒருயிரைப் பரமனே ஆசிரியனாக வந்தருளி ஆட்கொள்ளுமாறுபோல நிறைந்த புலமையும், பல பெரியோர்கள் நட்பும், திருவருள் நிலையங்களின் தலைவர்களது அருள் நோக்கும் பெற்று, பல சைவ அருள் நூல்களை அரிதிற்றேடி எடுத்து சைவ சித்தாந்த உண்மைக் கருத்துக்களை உலகம் எளிதில் அறிந்து உய்யுமாறு, சிவஞானத்தை வாரி இறைத்தாற்போல அவற்றை அச்சிட்டு யாவர்க்கும் உதவிய பெருந்தகையாளராகிய மறைத்திரு வண்ணக்களஞ்சியம், காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் எனக்கு எளிதில் நேர்ந்து செங்குந்தர் பிரபந்தத்

திரட்டு என்னும் நூலை வெளியிடவும், செங்குந்த மித்திரன் என்னும் திங்க ளிதழைத் துவக்கி நடத்தவும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தை நிறுவவும், பேருதவியாக இருந்து என் கருத்தை முற்றும் நிறைவேற்றிவைத் தார்கள். அத்தகைய பெரியாரின் முத்து விழாவில் ஏனைய நண்பர்களுடனும், பல கழகங்களுடனும் யானும் கலந்துகொண்டு அன்னார் இன்னும் பல்லாண்டு கள் திண்ணிய உடல் நலத்தோடு வாழுமாறு அருள்புரிய வேண்டுமென என் சார்பாகவும், செங்குந்த உலகத்தின் சார்பாகவும் முருகப்பெருமான் திருவருளை இறைஞ்சுகின்றேன்.

## தமிழர் நல்வாழ்க்கைக் கழகத்தார், சென்னை.

அருட்செல்வர்களும், கல்விச் செல்வர்களும், பொருட்செல்வர்களும் செறிந்த தமிழ்ப்பழங்குடியிலே தோன்றி காலத்திற்கேற்றவாறு கற்பன கற்று, கேட்டு, தெளிந்து தமிழர் சமயமாகிய சைவ சித்தாந்த நூல்கள் பெரும்பாலும் அச்சில் வராத அக்காலத்தில் பல இடங்கள் சென்று ஏடுகளை அரிதிற்றேடி, எடுத்துச் சிலவற்றை உரையுடனும், குறிப்புரையுடனும் அச்சிட்டு வெளியாக்கித் தமிழுலகிற்கும் சைவ உலகிற்கும் பேருதவிபுரிந்து; தமிழ்க்கடவுளாகிய முருகப் பெருமானுக்குத் தமது உள்ளத்தை இருப்பிடமாக்கி துறவு மேற்கொண்டு ஆயிரம் பிறைகண்ட அருந்தவராகிய மறைத்திரு வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவரது முத்துவிழாவில் யாங்களும் கலந்துகொண்டு அன்னாரை இன்னும் பன் நெடுங்காலம் இப்படியில் வாழச்செய்யுமாறு ஆண்டவனை அடி பணிந்து கேட்டுக்கொள்ளுகிறோம்.

## ஆ. க. கு. முருகைய முதலியார்,

### தமிழ்ப்பண்டிதர், திருப்பத்தூர்.

1. அம்மைதழு வக்குழைந்த அம்மானும் பைந்தமிழின் ஆர்வத் தாலே
செம்மையுறு புலவன்பின் சென்றருளும் பெருமானும் தினமும் வைக
மும்மையுல கும்போற்றும் பலகலைக்குந் தாயகமாய் அறிவின் மூத்தோர்
தம்மைதன தகத்துடைய தனிப்பெருமை பெற்றுயர்ந்த தகைசால் காஞ்சி.

2. அக்காஞ்சி நகருதித்தார் அருங்கன்னித் தமிழ்ப்புலவர் அன்பி னும்
முக்கூற்றுப் பொருளுணர்த்தும் மெய்கண்ட நூல்தனித்தும் முழுதுமாகத்
தக்காருண் மதிக்கவெளி யிட்டபெருந் தகைவள்ளல் தமிழ்க்கும் என்றும்
மிக்குயர்சை வத்திற்கும் தொண்டாற்று மெய்யன்பர் விரிநீர் ஞாலம்.

3. தோன்றியமன் பதைகடமக் கிம்மையிலே நலம்பயக்கும் தொழிலின்கல்வி
ஊன்றியுணர் வார்க்குதவுந் தாள்முதல நடத்தியநல் லுணர்வின் மிக்கார்
என்றுதமி ழுலகுகொளும் தமிழகரா தியைத்தொடுத்தார் இன்சொ லாளர்
தோன்றில்புக ழொடுதோன்ற வென்றுமறைக் கிலக்கியமாத் துலங்க நின்றார்.

4. நிறைவண்ணக் களஞ்சியமென் பேர்பெற்றார் நன்னெறிசெல் நேர்மையாளர்
இறையடிகள் மறவாமல் இல்லறமாம் சகடுய்க்கும் இருவர் தம்மில்
நிறைகுணஞ்சேர் மனைக்கிழத்தி நிலவுலகை நீத்தறபின் நேர்ந்து நெஞ்சம்
துறவறத்தை நாடியிரு வகைப்பற்றும் முற்றுமறத் தூய்மை யுற்றார்.

5. நாகலிங்க முனிவரெனும் திருப்பெயரார் இருமையின்ப நாடா ராகி
ஆகமத்தின் முறைவழுவா நெறிநின்றார் ஐந்தவித்த ஆற்ற லுள்ளார்
சோகமிலா வீட்டின்பந் துய்த்துமுல குள்ளார்கள் நலங்குநன்மை
யாகச்செய் யுதவிபெற வாணாளும் பல்லாண்டா யமர்ந்து வாழ்க.

6. ஆண்டெண்ப தில்அடிகள் முத்துவிழ வினைநாமும் அன்பி னோடும்
ஈண்டிக்கொண் டாடிபல இன்னியங்கள் இயம்பவிசைத் தெழுந்துநின்று
பாண்டொடர்ந்து பாடிபல படியாக இவர்புகழைப் பகிர்ந்து பேசி [வோமே.
காண்டொறுங்காண் டொறும்வாழ்த்தி கதிர்வடிவே லவனருளைக் கருது

## T. V. முருகேச முதலியார்

### ஆசிரியர், தமிழ்ச் சங்கம், சென்னை

தொழிலாளியாய என்போன்றவர்க்குத் "தொழிற்கல்வி" என்னும் பத்திரிகை மூலமாக எக்காலத்தும் எவ்வகையினும் எல்லா நன்மையும் அமையும் வண்ணம், உணர்ச்சியும் ஊக்கமும் கொண்டு உழைத்த முனிவர்தம் அன்பினை நான் என்றும் மறவேன்.

யதீந்திரர் அன்பும் திருப்புகழ்ச் சுவாமிகள் நன்னோக்கமும் பெற்றுத் தன்னலங் கருதாது உவகையுடன் உலகுக் குழைப்பதே தலையாய பணியெனக் கருதி முறையாகச் சைவ சித்தாந்த நூல்களை வெளியாக்கியும், பொதுவாக எல்லாருக்கும் தொண்டாற்றியும் சிறப்பாகத் தன் குல மக்களுக்குப் பணியாற்றியும் வந்த முனிவர்தம் ஆர்வத்தைக் கண்ட நாங்கள் பேருவகை கொள்வதுடன் இனி நீண்ட ஆயுளும் அயர்வின்றி உலாவத் தளர்விலா உடலுரமும் எல்லையில்லா இன்பமும் அறநெறியாண்மையும் தக்க உரமும் அளிக்குமாறு தமிழ் அன்னை அற்புதத் தாள்களைப் போற்றிப் பணிகின்றனன்.

## வா. தி. மாசிலாமணி முதலியார்,

### இந்துமத பள்ளி உரிமையாளர், வாலாஜாபாத்

தம் மனைவி மக்களோடு ஒருவர் அறுபது ஆண்டுகள் வாழ்ந்து விட்டாலே அவருக்கு விழா நடத்துதல் வேண்டும் என்பது நம்மவர் கொள்கை. நம் நாகலிங்க முனிவரோ இல்லறத்து இயல்பின்படியும் நடந்து தமிழ்த் தொண்டு, சமயத்தொண்டு, குலத்தொண்டு ஆகிய பொதுநலத் தொண்டுகளைப் புரிந்து தாம் பிறந்ததின் பயனைப் பேரின்பத்தால் நுகர்தற் பொருட்டுத் துறவறத்தில் நின்று ஆயிரம் பிறைகண்ட பெரியாராகவும் ஆனார் எனில் அவர்க்கு இம் முத்துவிழாவேயன்றி நவராத்தின விழாவாகக் குறைந்தது ஒன்பது நாட்கள் கொண்டாட்டம் நிகழ்த்தினும் பொருந்தும். ஆதலின், அப்பெரியார் பல்லாண்டு பல்லாண்டு வாழவேண்டுமென நானும் எங்கள் இந்துமத பாடசாலையில் உள்ள ஆசிரியன்மார்களும், மாணவரும் ஆகிய எல்லோரும் சேர்ந்து அவரை வாழ்த்தி வணங்கிப் போற்றுகின்றோம். வண்ணக் களஞ்சியம், காஞ்சி. நாகலிங்க முனிவர் எண்ணில் ஆண்டுகள் இன்புற்று வாழ்வாராக.

## ஞானி. இலக்குமணசுவாமி பி. ஏ., எல். டி

### தலைமையாசிரியர், முத்தியாலுப்பேட்டை உயர்பள்ளி, சென்னை

சென்னைப் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமை யாசிரியர் ம. சண்முகசுந்தர முதலியார், M. A. L. T., அவர்தம் வாயிலாக நான் நெடு

நாட்களுக்கு முன்னரே நம் முனிவரை அறிவேன். அவர் தம் அடக்கம் மிகுந்த அருங்குணம், அவர் புரிந்துவரும் பொதுநலத் தொண்டுகள் முதலியனவற்றையும் நான் ஒருவாறு அறிவேன். ஆனால் அவர் ஆயிரம் பிறைகண்டவர் என்பது இப்போதுதான் எனக்குத் தெரியவந்தது. நல்ல வாலிபரைப் போன்று எடுத்த வேலையை ஊக்கத்துடன் உழைத்து முடிக்கும் அவரது உடல் நலமே என்னை அவ்வாறு ஏமாற்றியது. அவர் இயற்றியுள்ள வண்ணப்பாக்களைப் படித்து இன்புற எனக்கு ஓய்வு கிடைக்காவிடினும் அவரது உடல் வண்ணம், செயல் வண்ணம் முதலிய பல வண்ணங்களாலும் அவர் எனக்கு ஓர் களஞ்சியமாகவே காட்சி யளிக்கின்றார். முத்துவிழாவுக்குரிய நம் முனிவர் நூற்றாண்டு நிறைவுவிழாவினையும் கண்டுமகிழக் கடவுளை வேண்டுகின்றனன்.

## மணி. கோட்டீச்சுர முதலியார், B. A. L. T.,
### பிரின்சிபல், ஐதராபாத் இந்துமதக் கல்லூரி.

வண்ணக் களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவரை நான் என் இளம் பருவத்திலிருந்து அறிவேன். என் தமயனார் மணி. திருநாவுக்கரசு முதலியாரும் நம் முனிவரும் பூவை. மணவழகரிடம் கற்ற ஒருசாலை மாணவராதலின் முனிவர் அடிக்கடி என் அண்ணனாரைக் காண வருவர். அப்போது அவர் என் கல்வி நிலையினை வினவி எனக்கு வாழ்த்துக் கூறுவர். அவரது அன்பு கனிந்த வாழ்த்துரையே என்னை இந்நிலைக்கேனும் கொண்டுவந்தது என்று நான் நம்புகின்றேன். நான் பெரியவனான பின்னர் அந்த அன்புவளர்ந்து எங்களை நண்பராக்கியது. நான் சென்னையில் இருக்கும்போது அடிக்கடி அவரைக் கண்டு உரையாடுவதுண்டு. நமது முனிவர் தமிழுக்காகவும், சைவ சமயத்திற்காகவும், தம் குலத்தினருக்காகவும் புரிந்துவரும் அரும்பெருந் தொண்டுகளை எடுத்துரைப்பது கொல்லன் தெருவில் ஊசிவிற்றலையே நிகர்க்கும். வயதிற் சிறியவனாய நான் அவரை வாழ்த்துதலும் நேர்மையன்றென எண்ணி அவரை வணங்கி அவர் என் போன்றவர்களை வாழ்த்துதற்கு இன்னும் பல ஆண்டுகள் உடல் நலத்தோடு இன்புற்றிருக்க எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

## வித்துவான் ஜ. இராஜு முதலியார்,
### தமிழாசிரியர், போர்டு, உயர்நிலைப்பள்ளி, பூவிருந்தவல்லி.

நாவலர் குழுவும் பாவல ரீட்டமும்
நன்மை விழையும் பொன்மனத் தாரும்
செந்தமிழ்ச் செல்வரும் விந்தைசா லறிஞரும்
ஏனைய ரெவரும் ஆனவ ருடனே
வம்மின்! வம்மின்! வம்மின்! வம்மின்! ௧.

காஞ்சியி லுதித்த ஆஞ்சிறப் புடையோன்
செங்குந்த வுலக மங்கல ஞாயிறு
என்ன விளங்கியே மன்னும் முனிவன்
ஏக லிங்கமாம் இறைவனை மறவா
நாக லிங்கமாம் நற்பெய ராளன். ௨

செய்தவம் நிறைந்த சைவர் தழைக்க
மெய்கண்ட நூல்கள் வெளிவரச் செய்தோன்
'செங்குந்த மித்திரன்' செய்'தொழிற் கல்வி'
எங்கும் பரவ இதழ்பல அளித்தோன்
அறவினை பலவும் அமைந்த வுள்ளத் கடு.

துறவினை யுடையோன் தூய்மை யாளன்
பைந்தமிழ் நாடும் பரவுசெங் குந்தரும்
முந்துற இயற்றிய முனைப்பெருந் தவத்தால்
எண்பதா மினியவாண் டெய்துறப் பெற்றனன்
இத்தக வுடைய வித்தகன் றனக்கு உ௰.

மெய்த்திரு வளரும் முத்து விழாவினைப்
பல்கிய அணிபல ஒல்வழி அணிந்து
வாழ்த்துவம் வம்மின்! வாழ்த்துவம் வம்மின்!
வண்ணக் களஞ்சிய வல்லோன் வாழ்க!
கண்ணுக் கினிய காட்சியோன் வாழ்க! உடு.

செங்குந்த மணியாஞ் செல்வன் வாழ்க!
எங்குந் தெரிந்த இனியோன் வாழ்க!
பலகலை மணந்த புலவன் வாழ்க!
நலமிக விளங்கிய நற்றவன் வாழ்க!
வாழ்கநற் றண்டமிழ் நாடு! ௩௰.

வாழ்க செங்குந்த மரபுறு மாண்பே!

## சி. கு. நாராயணசாமி முதலியார்,

ஆராய்ச்சி நூலாசிரியர், பேரூர், கோவை.

ஆன்ற புலமையும், சைவசீலமும், தமிழ்த்தொண்டும், மரபுபேணும் மாண்பும் மிக்க நமது முனிவர் அவர்களை முப்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்தே நான் நன்கறிவேன். அவர், புராணம், பிரபந்தம், அகராதி முதலியவற்றை ஆராய்ந்து பதிப்பிப்பதில் அதிசமர்த்தர். பத்திரிகைத் தொழிலிலும் பரிச்சயமுடையவர். தென்னாட்டில் செங்குந்த மரபினர் வதியும் சிற்றூர், பேரூர்களில் அம்மரபினர் முன்னேற்றம் அடையும்பொருட்டு சபைகள் பல நிறுவி, சொல்வன்மை மிக்க தமது சொற்பொழிவுகளால் அவைகள் அபிவிருத்தியடையுமாறு செய்தும், பத்திரிகைகள் வாயிலாகக் குந்தர்கள் தங்குலப் பெருமை அறிந்தின்புறுமாறு கட்டுரைகள் வழங்கியும் வந்தனர். இற்றைக்குப் பதினெட்டாட்டைப் பருவத்தை எய்தி இளஞ்சூரியன் என இனிதொளிரும் "செங்குந்தமித்திரன்" உன்னத நிலையில் உயர்ந்து விளங்குவதற்குக் காரணம் முனிவரது முன் முயற்சி யெனின், அது மிகையன்று. முனிவரவர்கள் நீடூழி வாழ்க.

## திரு. T. துரைசாமி நாயுடு அவர்கள், Executive Officer,

கார்வேட் நகர் டிரஸ்ட் எஸ்டேட், திருத்தணி.

சைவத்திரு வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களின் முத்துவிழா நிகழ்ச்சி கேட்டுப் பெரிதும் மகிழ்கின்றேம். எம் திருத்தணி தேவத்தானத்திற்கும் முனிவரவர்கட்கும் நெருங்கிய தொடர்புண்டு. மாதந்

தோறும் திருத்தணிகை முருகப்பெருமானை வணங்கிச் செல்வதனை நீங்காக் கடமையாகக்கொண்ட இவர்கள் தணிகை முருகப்பெருமான்மீது வண்ண மஞ்சரி முதலிய தமிழ் மாலைகளைப் பாடிப்போற்றிய புலமைத் திருத்தொண்டராவர். தணிகை ஆறுமுகப்பெருமான் திருக்கோயிலும் வீராட்டகாசம் திருக்கோயிலும் ஆகிய இரண்டினையும் திருப்பணி செய்து திருத்தி முருகன் திருவருளுக்கு இலக்காகிய ஞானம் அம்மையார் என்பவர் நம் முனிவரவர்களின் உறவினராவார். மற்றும் தணிகைமலைக் கோயிலில் உச்சிக்கால வழிபாட்டின் திருவமுதினால் அடியார் சிலர்க்கு உணவளிக்கும் கட்டளை ஏற்படுத்திய நாயக்கன்பேட்டை கச்சபாலய முதலியாரவர்களும் இவர்களுக்கு நெருங்கிய உறவினராவார்.

இவ்வாறு தாமும் தம்முறவினருமாகத் தணிகைமலை முருகர்க்கு வழித்தொண்டு செய்யும் பேறுபெற்ற நம் முனிவரவர்கள் சைவமும் தமிழும் தழைக்கத் தம் நூறாண்டு விழாவும் கண்டு இன்புறும்வண்ணம் எல்லாம் வல்ல எங்கள் தணிகைப்பெருமான் திருவருள் சுரப்பானாக.

## வித்துவான் ஞா. தேவநேயப் பாவாணர், B. O. L.

சிறந்த மேலைத் தமிழறிஞரான ஜி. யூ. போப்பையரும் பாராட்டுமாறு தமிழ்ச் சிவக்கொள்கை நூல்களை முதன்முதல் அழகாக வெளியிட்டும், ஒரு விரிவான தமிழ் அகரமுதலைத் தமியராய்த் தொகுத்தும், தமிழருள் ஒரு பிரிவாரான செங்குந்தரை முன்னேற்றுதற்கெனத் தோன்றி நிலவிவரும் 'செங்குந்த மித்திரன்' என்னும் மாத இதழுக்கு முதற்காரணமாயிருந்தும், பலவண்ணம் பாடியும் பலவண்ணம் தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் அரும்பெருந் தொண்டாற்றி எண்பானாண்டு நிரம்பிய வண்ணக்களஞ்சியம் மறைத்திருக் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் நீடூழி நிலவுலகத்தில் நிலவுமாறு எல்லாம் வல்ல இறைவன் அருள் செய்க.

## திரு. C. பன்னிருகைப் பெருமாள் முதலியார் அவர்கள் M.A., B.L.,

*Head of the Dept. of Tamil, University of Travancore.*

நான் 1921ம் ஆண்டு எப். எல். (F. L.) வகுப்பில் படித்துக்கொண்டிருந்தபொழுது, முனிவர் அவர்கள் சட்ட கலாசாலை மாணவர் விடுதியில் என்னுடன் ஒன்று இரண்டு நாள் தங்கி இருந்ததை இன்று நான் மிகுந்த மகிழ்ச்சியுடன் என் ஞாபகத்துக்குக் கொண்டு வருகின்றேன். சென்னை மாசாணத்திலுள்ள செங்குந்தர்கள், முனிவர் அவர்கள் அம்மரபினருக்குச் செய்த தொண்டை, என்றும் மறவாதிருக்கக் கடமைப்பட்டுள்ளார்கள். இன்று தென்னாட்டிலுள்ள செங்குந்தரெல்லாம் நெருங்கின பந்துக்கள்போல வாழ்வதற்கு அடிகோலினவர்கள் முனிவர் அவர்களே. ஸ்ரீலஸ்ரீ முனிவர் அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து உலகத்தாருக்கு நன்மைபுரியக் கடவுள் அருள் செய்வாராக.

## திருமதி. S. தருமாம்பாள் அம்மையார்,

சென்னை மாதர் சங்கம்.

தமிழ்நாட்டுப் பெரியாராகிய காஞ்சி. நாகலிங்க முனிவரரை நீண்ட நாட்களாக அறிவேன். தமிழ்நாட்டுத் தவப் புதல்வர்களில் அவர் ஒருவர். பழகப்

பழக இனிக்கும் பான்மையினர். அவரிடம் பேசப்பேசத் தெவிட்டாத் தெள்ள முதத் தீந்தமிழ்க் கருத்துக்கள் பல நம் உள்ளத்தில் உறுதிபெறும். அறிவு வளர்ச்சிக்கான அளவிலா நூல்களை இயற்றியும் பதிப்பித்தும் தமிழர்க்குத் தொண்டாற்றிய பெரியார். இவர் நூறாண்டுகளுக்கு மேலும் வாழ்ந்து தமிழ் மொழி வளர்ச்சிக்குத் துணையாக நிற்க இறைவன் அருள்புரிவானாக.

## கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார்,
### சைவப்பிரசாரகர்.

எப்போதகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

1. அநாதிமல முத்தராகிய சிவபெருமான் அநாதிமல பெத்தராகிய ஆன்மாக்கள் தம்மையறிந்து வழிபட்டுய்யுமாறு அநாதியே திருவாய் மலர்ந்தருளியவை வேதமும் சிவாகமுமாம்.

2. வேதத்தின் ஞானகாண்டப் பொருளைச் சிவாகமத்திற்கு மாறுபடா வண்ணம் சைவ சமயாசார்ய மூர்த்திகள் தேவாரம் திருவாசகம் என்னும் தோத்திர வாயிலாக அருளிச் செய்தார்கள். சிவாகமத்தின் ஞானகாண்டப் பொருளைச் சந்தானாசார்ய மூர்த்திகள் சரித்திர வாயிலாக அருளிச் செய்தார்கள். இவையிரண்டுமே சைவர்களுக்குச் சிறப்பாகவும் தமிழர்களுக்குப் பொதுவாகவும் இரண்டு கண்களாக உள்ளவை. இவைகளே சைவசமயங்கட்குச் சிறந்த ப்ரமாண நூல்களாக விளங்குபவை. இவைகளையுணராத ஆன்மாக்கள் இறைவன் திருவடிகளைச் சேரமாட்டா என்பதையுணர்ந்த ஒரு பெரியார் 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்' என்ற பிரமாணத்தின்படிச் சைவத் திருமுறைகளை அச்சு வாகனத்திலேற்றி யுபகரித்தார்கள் என்றால் இது செயற்கரும் செய்கையன்றோ? இதுமட்டுமா? சைவர்களுக்கு ஒரு கண்ணிருந்தால் போதாது என்று கருதி மீண்டும் சிவஞானபோதம் முதலாகச் சங்கற்ப நிராகரணம் ஈறாகவுள்ள சைவசித்தாந்த சாத்திரங்களையும் முதன்முதலாக அச்சிட்டுச் சைவர்களுக்கு உதவினார்கள் என்றால் சைவர்கட்கு மற்றொரு கண்ணையுங் கொடுத்தருளிய பெரியார் இவரல்லவா? இதுமட்டுமா?

3. கலியுகத்தில், வேண்டுவார்க்கு வேண்டியவற்றை வேண்டவுதவும் பெருமாள், இகபர சௌபாக்கியங்களை யளிக்கவல்ல பெருமாள், திரிபுரதகனரும் வந்திக்கும் பெருமாள், ஓரெழுத்தில் ஆறெழுத்தை யோதிவைத்த பெருமாள், பேராற் பெரிய பேரூர்ப் பெருமாள், வள்ளி படர்சாரல் வள்ளிமலை மேவும் வள்ளி மணவாளப் பெருமாள் அநுபூதிபெற்று அநுபூதி சொன்ன அருணகிரிநாதர் அருளிய முருகப்பெருமான் தோத்திரங்களை ஆறு திருமுறைகளாக வகுத்துப் புதிய முறையில் அச்சிட்டுதவிய பெரியார் யார்?

4. அஷ்டாவதானம் பூவை, கலியாணசுந்தர முதலியார் அவர்களின் சிறந்த மாணவர்களுள் ஒருவராக விளங்கிப்பின் திருவாவடுதுறை முதலிய கயிலாய பரம்பரைச் சந்நிதானங்களின் நெருங்கிய அறிஞராகிப்பின், மதுரைத் தமிழ்ச் சங்கத்து மகா வித்துவானாக அமர்ந்து சென்னையிலும் தமிழ்நாட்டிலுமுள்ள பல உயரிய சபைகளில் சென்று, சீரிய சொற்பொழிவுகள் பல செய்து அநேக ஆயிரக்கணக்கான அன்பர்களுக்குச் சமயவுணர்ச்சியைத் தந்து உபகரித்த பெரியார் யார்?

5. இத்தகைய செயற்கரும் செய்கை பல செய்து இல்லறத்தை விட்டுத் துறவறத்தை மேற்கொண்டு நல்லொழுக்கத்துடன் சாந்த சீலராக விளங்கும் பெரியார் யார்? கற்பனகற்றுப் பிறர்க்கு எடுத்துச்சொல்லி சொல்லியபடி நடந்தும் வழிகாட்டிவரும் பெரியார் யார்?

6. இவரே வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவராவார்! இவரை யறியாதார் இவ் வரும் புவனத்தில் யாருள்ளார்? இவரது எண்பதாவது ஆண்டு நிறைவுவிழா இனிது நிகழ, இவர் இன்னும் பல்லாண்டுகள் பல நலங்களுடன் வாழத் தமிழ்நாடு உய்ய, என்றுமுள தென் தமிழ் சிறக்க, எல்லாம் வல்ல இறைவன், கலியுக வரதன் வல்லீ தேவசேனு சமேதனுகிய பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங்கயங்களை வழுத்துகின்றேன்.

## திரு. வே. வெங்கடராஜுலு ரெட்டியார்,

சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர்.

காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவரைத் திருவாளர் கா. நமச்சிவாய முதலியாரவர்கள் திருமாளிகையில் கண்டு வணங்கினேன்; அதன்பின் பலமுறை கண்டு உரையாடியுள்ளேன். அன்பு அமைதி அடக்கம் மேன்மை முதலிய குணங்கள் பல ஒருங்கு ஒருருவெடுத்து வந்தாலன்ன தோற்றத்தினையுடைய முனிவரைக் காணும்போதெல்லாம் எனக்குண்டாகிய அன்பு நாளடைவில் பக்தி ஆயிற்று. முனிவரும் என்மாட்டு அருளுடையர்; தாங்கள் பதிப்பித்த பழைய காஞ்சி புராணத்தை (காஞ்சிப்புராணக் கலித்துறை) எனக்கு அருளினர். முனிவர் இளமைப்பருவ முதல் சைவத்துக்கும் தமிழுக்கும் பெருந்தொண்டு புரிந்திருப்பதனைத் தமிழ்நாடு நன்கறியும். இப்போது முனிவர்தம் முத்துவிழாவினைச் சிறப்புற நடத்த முன்னின்ற தமிழ்ப் பெருந்தகையாளரைப் பாராட்டுதலுடையேன்; முனிவர் இன்னும் பல்லாண்டு சிறப்பொடு வாழ்ந்து தமிழுலகிற்கு நன்மை புரியுமாறு அருள்செயும் வண்ணம் இறைவனை இறைஞ்சுகின்றேன். நாகலிங்க முனிவர் நீடூழி வாழ்க !'

## வித்வான் கீ. சதாசிவ நாயகர்,

சென்னை.

'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்' என்றும் 'சால்பாயமும்மைத் தமிழ்' என்றும் சேக்கிழார் பெருமானுரால் புகழப்பட்ட தமிழ்மொழி வழங்கு நிலத்துக்கண் அவ்வப்போது புலவர்பலர் தோன்றினர். அவரெல்லாம் தமிழ் மொழிக்கே அன்றி, சமயாதீதப்பழம்பொருளை அடையுநெறியை ஐயப்பாடின்றி உணர்த்த வல்ல சைவசமயத்துக்கும் சொற்பொழிவுகள் ஆற்றுவதாலும், சமய நூல்களை அச்சிட்டு வெளியிடுவதாலும் அருந்தொண்டாற்றினர்; மற்றும் 'அறிவறிந்த மக்கள்', 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும் பெருமொழிகளுக்கு எடுத்துக்காட்டாவர். அவரேபோல் தற்காலத்தே, ஒழுக்கத்து நீத்து, இருமை வகை தெரிந்து அறம்பூண்ட பெரியார் நாகலிங்க முனிவர் விளங்குகின்றனர். இப் பெரியார் பாலியாற்று மணலிற் பன்னெடுங்காலம் நோயின்றியன்றயாக்கையோடிருந்து, மொழிக்கும் சமயத்துக்கும் வேண்டுவனவாகிய தொண்டாற்ற ஆதிபகவன் அருள்புரிவானுக !!!

கா. ப. தணிகை அரசு, வள்ளலார் இல்லம், வாலாஜாபாத்.

எண்பதாண்டுகள் இனிமையாய் வாழ்ந்து, செந்தமிழ் மொழிக்கும், சைவ நற்சமயத்திற்கும், அருந்தொண்டுகள் பல ஆற்றும் எங்கள் செந்தமிழ்ச் சைவப் பெருந்தகையார் அவர்கள் முத்துவிழா முழுமுதற் கடவுளின் திருவருளதனால் இனிது நிறைவேறுவதாக!

க. சு. உத்தமராயன்,

உதவி ஆசிரியன், சித்தவகுப்பு, இந்திய மருத்துவப் பாடசாலை, சென்னை.

இப்பெருந்தகையார் தூய உள்ளத்தையும், ஈறு பிறப்பில்லா முழுமுதற் கடவுளாய சிவபிரானிடத்து அன்புபூண்டு சிவ மதத்தை மேற்கொண்டு எளிய வாழ்க்கையை நடத்தும் இயல்பையுமுடையவர்.

எந்தையார் வைத்தியரத்தினம் க. ச. முருகேச முதலியார் (சித்த வகுப்புத் தலைமை விரிவுரையாளர், இறையாட்சி இந்திய மருத்துவப் பாடசாலை, கீழ்ப்பாக்கம், சென்னை) அவர்கட்கு முனிவரவர்கள் நெருங்கிய நண்பர். எந்தையாரும் தமிழரிடத்தும், தமிழ்ப்புலவரிடத்தும், தமிழ்க்கலை வல்லாரிடத்தும் எப்போதும் பேரன்புகாட்டும் பண்புடையவர். அன்னார் நம் முனிவர்பால் அன்பு கொண்டு முனிவர் வைத்தியர் இல்லம் வரும்போதெல்லாம் அவரை ஆதரவுடன் ஆதரிக்கும் இயல்புடையவர். முனிவர்கட்குத் தமிழ் மருத்துவ நூற்களிலும் சிறப்பாகத் தேரன் மருத்துப் பாரத நாடகத்திலும் பயிற்சியுண்டு.

க. வெள்ளைவாரணன்,

வித்துவான் ஆராய்ச்சிப் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,

"தமிழும் சமயமும் தழைக்க குலத்தொண்டாற்றிய பெரியாரின் முத்து விழா சிறப்புடன் நிறைவேறுக."

அ. அமிர்தலிங்க முதலியார், கருவேங்கநாதபுரம்.

"முனிவர் நீண்ட ஆயுளுடனும் திடகாத்திரத்துடனும் நமக்கும் நாட்டிற்கும் ஆவனசெய்ய ஆண்டவன் அருள்புரிக".

உ. துரைசாமி முதலியார்,

செங்குந்த மித்திரன் முதல் சந்தாதார், காரைக்கால்.

"எங்கள் ஊர் சைவத் திருமுறை மடத்தில் முனிவர் முத்துவிழா சிறப்பாகக் கொண்டாடினோம். சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர் சிவத் திரு ஞானானந்த சுவாமிகள் மூலம் (முனிவர் துறவியாவதற்கு முன்னரே) முத்து விழாத் தலைவரின் பெருமையை யறிந்துள்ளேன்."

வித்துவான், ந. ஆறுமுகம்,

தலைமைத் தமிழாசிரியர், நகராட்சி உயர் நிலைப்பள்ளி, விழுப்புரம்

"பழுத்த முது தமிழ்ப்புலவரின் முத்துவிழா, முனிவரும் போற்றற்குரிய தொன்றாகும். இதுபோன்ற உண்மைத் தமிழ்ப் பெரியார்களின் விழாக்களினால்தான் தமிழ்நாடு முன்னேற்றமடையும், தமிழ்மொழியும் வளர்ச்சிபெறும்."

# பல்லாண்டு பல்லாண்டு

மயிலை சிவ. முத்துக்குமாரசாமி முதலியார், தமிழாசிரியர்,
முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளி, சென்னை.

வாழ்த்துக் கூறுதல் எல்லா நாட்டினருக்கும் இயல்பாய் இருப்பினும் நம் தமிழ் நாட்டினருக்கு மிகவும் சிறப்பாக அமைந்துள்ள நலன்களுள் ஒன்று.' சங்க நூற்களுள் தலை சிறந்ததாய தொல்காப்பியத்திலே,

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்து"

என வருவதிலிருந்தே தொல்காப்பியனாருக்குமுன்னரே இப் பழக்கம் இருந்திருக்கின்றது என்பது தெரியவருகின்றது.

"பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென" எனத் தலைவி தன் தலைவனை மணந்து கொள்ளும் போதும், "பேரில் கிழத்தி ஆகென" என மணமக்கள் மணவறை புகும்போதும் பெண்கள் கூடி வாழ்த்துதலை அகநானூற்றுச் செய்யுட்களால் அறியலாகும்.

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என நம் நாட்டுப் பெரியோர்கள் மணமக்களை வாழ்த்துதல் வழக்கம்.

பதினாறு பேறு—பதினாறு வகைப்பட்ட செல்வங்கள். அவை யாவன: புகழ், கல்வி, வலிமை, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிபு, நோயின்மை, வாழ்நாள். இவைகளுள் இன்றியமையாதது வாழ்நாள்.

ஆதலின் வாழ்த்துவோர் அனைவரும் வாழ்த்தப்படுபவர் நீண்ட நாள் வாழ வேண்டும் என்னும் கருத்தினையே முதன்மையாக வைத்து வாழ்த்துவர்.

"ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம் தம்மை, நீடுவாழ் கென்பாக் கறிந்து" எனத் திருவள்ளுவர் 'புலவி நுணுக்கம்' என்னும் அதிகாரத்தில் கூறியிருத்தலானும் இவ் வழக்கினை நாம் அறிந்து கொள்ளலாம். தும்முதல் நேரினும் அதனால் தன் கணவனாருக்கு யாது தீங்கு நேருமோ என அஞ்சி 'நீடு வாழ்க' என அக்கணவனாரை வாழ்த்தும் பழக்கம் திருவள்ளுவர் காலத்திலேயே இருந்தல் இதனால் தெரிய வருகின்றது.

யாதேனும் ஒன்றைக் கூற விரும்பிய காலத்தும் "வாழி தோழி" என முன்னர் வாழ்த்திப் பின்னரே தோழியை விளிக்கும் பழக்கம் நம் நாட்டில் இருந்ததைச் சங்க நூற்களில் நிரம்பக் காணலாம்.

அவ்வாறு வாழ்த்துதலில் கூறப்படும் நாள்வரையறையும் மிகுதியாகவே தோன்றுகின்றது. 'மனிதற்கு வயது நூறல்லதில்லை' எனினும் நூற்றின் மேலும் வாழ்ந்திருக்க வாழ்த்துதலையே நாம் பெரிதும் காண்கின்றோம். "சென்றன போக நூறாண்டு வாழ்க" என வாழ்த்துதலை நாம் கவனித்திருக்கலாம்.

"மணவாள மாமுனியே! இன்னமொரு நூற்றாண்டிரும்" என வாழ்த்துவர் வைணவ அன்பர்கள். அவர்கள், கடவுளரையும் கடவுளருக்குச் சமமாக எண்ணும் அடியாரையும் வாழ்த்துதலால் அவ்வாறு பல நூறு ஆண்டுகள் இருக்க வாழ்த்துதல் தகுதியே; கடவுள், பல்லாண்டென்னும் பதங்கடந் தொளிரும் பரம்பொருளாதலின் பொருந்தும்; எனினும் பல்பிணிச் சிற்றறிவினராய மக்களையும் நம் பெரியோர் அவ்வாறு வாழ்த்தவே விரும்புகின்றனர். அவை வருமாறு:—

"வேங்கட விறல் வரைப்பட்ட
ஓங்கல் வானத்து உறையினும் பலவே"

—கல்லாடனார்.

"வானத்து, வயங்கித்தோன்றும் மீனினும் இம்மென
வியங்கு மாமழை உறையினும்
உயர்ந்து மேந்தோன்றிப் பொலிக நும்நாளே"

—ஔவையார்.

"முந்நீர் விழாவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

—நெட்டிமையார்.

"தண்கதிர் மதியம் போலவும், தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெருமநீ நிலமிசையானே"

— காரிகிழார்.

"நடுக்கின்றி நிலீயரோ......
பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே"

—முரஞ்சியூர் முடிநாகராயர்.

"ஆற்று மணலினும் நின் ஆயுள் சிறக்க; கழனியில் விளையும் நெல்லினும் நீ வாழ்க; விண் மீனினும் நின் நாள் பொலிக" என இவ்வாறெல்லாம் புலவர் பலரும் மக்களை வாழ்த்துதலின் நோக்கம் என்ன என்பது ஈண்டு ஆராயற்பாலது.

உலக நலன்களை யெல்லாம் நுகர்ந்து வெறுப்புறத்தக்க நிலையில் உள்ள மிக்க செல்வந்தனும் இவ்வுலகில் நீண்ட நாள் வாழவே எண்ணுகின்றான்; ஒருவேளை உணவிற்கும் வழியற்றுக் கிடக்கும் கொடிய வறுமையாளனும் மேலும் பல நாள் உயிரோடிருக்கவே விழைகின்றான்; நீங்காத நீண்ட நோயாளனும், தொண்டு கிழவனும் இவ்வுலகின்கண் நெடுநாள் இருக்கவே அவாவுகின்றான். இவைகளைக்

கூர்ந்து நோக்கும்போது நாம் இவ்வுலக நலன்களைப் பெற்று இன்புறு தற்கும், இப்பிறவியினுல் அடைய வேண்டிய பேரின்ப வீட்டினை அடைதற்கும் இறைவன் போதிய காலத்தினை நமக்கு அருளவில்லை எனவே எண்ண இடந்தருகின்றது. இதனையும் பிறகு எண்ணிப் பார்க்கலாம்.

இவைகளை யெல்லாம் நீக்கி நம் கண்கூடாக நிகழ்தலைக் கவனிக் கின் மக்களுள் ஐம்பத்தைந்து வயது வரையில் வாழ்வோரே பெரும் பாலோராவர். இவர்களுள் அறுபதுக்குமேல் ஒருவர் உயிர் வாழ்ந் திருப்பரேல் அதற்காக மகிழ்ந்து நாம் அவருக்கு 'மணி விழா' கொண் டாடுகிறோம். நமது நாகலிங்க முனிவரைப் போன்று எண்பதுக்கு மேலும் உயிர் வாழ்ந்திருப்பரேல் நாம் பெருமகிழ்வெய்தி 'முத்து விழா' கொண்டாட முந்துகின்றோம். இவ்விதம் இன்றி முப்பத் தைந்து அல்லது நாற்பது வயதில் ஒருவர் இறந்து படுவாராஞல் "ஐயோ! இன்னும் சில நாள் இருந்து இவர் இவ்வுலக நலன்களை யெல்லாம் கண்டு மகிழாமற் போய் விட்டாரே" என நாம் பெரிதும் வருந்துகின்றோம். எனினும் மக்களுள் பெரும்பாலோருக்கு இவ்வுல கின்கண் எவ்வளவு நாட்கள் இருப்பினும் அவர்கட்கு வெறுப்பு ஏற் படுவதில்லை. தொண்ணூறு வயது வாழ்ந்திருந்து இறக்கும் நிலையில் இருக்கும் ஒரு தொண்டு கிழவரும் தம் கொள்ளுப் பெயரன் மகனைப் பள்ளியில் வைத்துப் பார்த்து மகிழ்தற்கில்லையே என வருந்துதலையே நாம் காண்கின்றோம். இவ்விதம் மக்களுக்கு உலக வாழ்வின்மீதுள்ள பற்று ஓர் அளவில் நில்லாது செல்லுதலை உன்னியே அறிஞர் பலரும் 'எண்பது வயது வாழ்க' 'நூறு வயது வாழ்க' என வாழ்த்தாது "பல் லாண்டு பல்லாண்டு வாழ்க," "நீடூழிக்காலம் வாழ்க" என வாழ்த்து வாராயினர்.

மக்கள் தமக்கு ஆயுள் போதவில்லை என எண்ணி வருந்தும் படி, எல்லாம் வல்லவரும் அருள் வடிவானவருமாய கடவுள் மிகவும் குறைந்த ஆயுளைத் தந்திருக்கின்றார் என எண்ணுவது தவறு பெரி துடைத்தென்றே தோன்றுகின்றது. கடவுள் சிக்கனம் என்பதைச் சிறிதும் அறியாதவர்; வாரி வாரி வழங்கும் வள்ளன்மை வாய்ந்தவர்.

ஓர் ஆலமரத்திலிருந்து ஒன்றிரண்டு ஆலமரம் தோன்றுதற்காக ஒரு பழத்தில் எத்தனை விதை! எத்தனைப் பழங்கள்! எத்தனை முறை இவ்விதம் அந்த மரத்திற்கு இறைவன் உதவுகின்றார்! இவ்வி தமே மக்கள் உற்பத்திக்கு இன்றியமையாத உயிர் நிலைப் பொருள்க ளையும் கோடிக்கணக்கில் ஒவ்வொரு மனிதனிடத்தும் அமைத்திருக் கின்றார். ஓர் உயிர் தோன்றுவதற்கே இவ்வளவு பாதுகாப்புக்களை அளித்துள்ள அவர் அவ்வுயிர் வாழ்தற்கு வேண்டிய பாதுகாப்புக் களை அளிக்காமலா இருப்பா? மக்கள் ஒன்றிரண்டு பிழைகளாலே இறந்து படுவதேயில்லை. இவ்வுடல் ஓர் ஒழுங்கான அமைப்பில் ஏற்படுத்தப்பட்டிருப்பினும் எத்துணையோ தவறுதல்களைத் தாங்கக்

கூடிய தன்மையிலும் அமைக்கப்பட்டுளது. மக்களுக்கு நேரும் நோய் நொடிகள் பலவும் மக்கள் புரியும் தவறுகளைத் திருத்தி அவர்தம் உடலை ஒழுங்கு படுத்தும் நிலைமையிலே அமைந்திருக்கின்றது. இவ் விதமே நம் ஆயுட்காலத்தையும் மிக அதிகமாகவே நமக்கு அளித் துள்ளனர். பிறப்பின் பயனை உணர்ந்து வீடு பேற்றினை அடைய ஒரு வனுக்குச் சில விநாடிகள் அல்லது நாழிகைகள் அல்லது நாட்கள் போதும் என்பதே இறைவன் எண்ணம். ஆனால் அவர் அளித்துள்ள காலமோ அளப்பில. மக்களாய நாம் அவைகளை வீணில் கழித்துப் பிறகு நாட்கள் போதவில்லை என்று எண்ணுகின்றோம்.

கண்ணப்ப நாயனார் ஆறு நாட்களில் பெறுதற்கரிய வீடு பேற் றினை அடைந்தனர். ஞானசம்பந்தர் பதினாறு ஆண்டுகளில் புரிந்த செயல்கள் அளப்பில. சுவாமி விவேகானந்தர் முப்பத்தெட்டு வய திற்குள் உலகமெல்லாம் சுற்றித் தொண்டுகள் பலபல ஆற்றி மறைந் தார். அருட்பா என்னும் அரிய நூலினை உதவிய வள்ளலாரும் நாற் பதுக்குமேல் வாழ்ந்திருக்கவில்லை.

இவ்விதம் பல பெரியோர்களின் வரலாறுகளை உங்கட்கு நினைப் பூட்டலாம். நிற்க, ஒருவன் ஞான நிலையினை அடைதற்கு ஒரு சில நாட்கள் போதுமா என நமக்கு ஐயம் நிகழலாம்.

கல்லாய், மரமாகிப் புல்லாய்ப் புழுவாகி இவ்விதம் பல பிறவிக ளைப்பெற்றேமுடிவில் இம்மக்கட்பிறவியை உயிர்கள்பெறுவதாக மணி வாசகனார் கூறுகின்றார். "எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவிதான் யாதினும் அரிது அரிதுகாண்; இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க் குமோ ஏது வருமோ அறிகிலேன்" எனக்கூறி அஞ்சுகின்றார் தாயு மானவர். இத்தகைய அரிய பிறவியைத் தந்த இறைவன், மக்கள் வீடுபேற்றினை அடைவதற்கு மிகக்குறைவான நாட்களையா தந்திருப் பார்? ஒருவன் தன் ஆயுட்காலத்தை எல்லாம் தவறான வழியில் கழித்துவிட்டான்; அவன் உயிர் அவ்வுடலை விட்டு நீங்குதற்கு இன்னும் ஐந்தே நிமிடங்கள்தான் உள்ளன; அப்போது அவன் தன் பிழைகளை உணருகின்றான்; அவனுக்கு இவ்வுலகின்மீதும், இவ்வுலகில் உள்ள பொருள்களின்மீதும், தன் உடலின்மீதும் கொண்டிருந்த ஆசை அப்போது முற்றிலும் நீங்கிவிடுகின்றது; கட வுள் ஒருவர் இருக்கின்றார் என எண்ணுகின்றான்; அவர் தம் அருட் பெருங்கருணையை எண்ணி அவர்மீது அன்பு செலுத்துகின்றான் எனின், அச்சமயம் அவனுக்கு அக்கடவுளைத் தவிர்த்து வேறொரு பொருள் இருப்பதாகத் தோன்றாது. அவன் தன்னையும் மறந்து அன்பின் வடிவமாக இருப்பான். அவன் புரிந்த தீவினைகளும் அப்போது அவனைச் சாரா. ஆதலின் அவன் அக்கடவுளோடு ஒன்றியிருந்து அவன் வேறு, கடவுள் வேறு என்று சொல்ல இயலாத இரண்டற்ற தன்மையில் இருந்து அதனால் பெறக்கூடிய பேரின்பநிலை யினையும் அவன் அடைகின்றான். இவ்வளவும் அடைய அவனுக்கு

அந்த ஐந்து நிமிடங்களே போதும். ஆனால் அப்போது அவனுக் குத் தன் உடலினிடத்தும் பிறபொருள்களினிடத்தும் வெறுப்புத் தோன்றவேண்டும். இவைகளின் மேம்பட்ட ஒரு பொருள் உண்டு என்னும் உறுதியான எண்ணம் உண்டாகவேண்டும். இதனால் அன்றோ நம் பட்டினத்தடிகளும்,

> "ஐயும் தொடர்ந்து விழியும் செருகி அறிவழிந்திட்டு
> மெய்யும் பொய்யாகின்றபோது ஒன்று வேண்டுவன்யான்
> செய்யுந் திருவொற்றி யூருடையீர் திருநீறும் இட்டுக்
> கையுந் தொழப்பண்ணி அஞ்செழுத்தோதவும் கற்பியுமே"

என்று வேண்டுவாராயினர்!

"அற்றது பற்றெனின் உற்றது வீடு" என்னும் சொற்றொடர் பேரின்ப நிலையினை அடைதல் மிகவும் எளிது; அதற்கு நீண்ட காலம் வேண்டுவதில்லை என்பதைத் தெரிவிக்கவில்லையா?

அன்பர் பலரும் "போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே" எனத் தாம் வீணிற் கழித்த காலம் நினைந்து இரங்கினர்களே அன் றிப் போற்றுதற்குக் காலம் போதவில்லையே எனக் குறைகூறின ரில்லை.

> "பாத்திரம் சிவன் என்று பணிதிரேல்
> மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே"

என்னும் அப்பர் திருவாக்கினைச் சிந்தித்துப் பாருங்கள். "சுண்ணாம் பில் இருக்கிறது சூட்சம்; சூட்சத்தில் இருக்கிறது மோட்சம்" என்னும் பழமொழி மோட்சம் அடைதல் மிகவும் இலகுவானது என்பதைக் குறிக்கவில்லையா?

"தத்தையங் கனையார் தங்கள்மேல் வைத்த தயாவை நூறாயிரங் கூறிட்டு, அத்தில் அங்கு ஒரு கூறு உன்கண் வைத்தவருக்கு அம ருலகு அளிக்கும் நின் பெருமை" எனக் கருவூர்த் தேவர் அருளிய தும் இக்கருத்துப்பற்றியே ஆகும்.

மோட்சம் அல்லது வீடு என்னும் இடையறாத இன்பப்பேற் றினை அடைதற்கு ஒரு சில வினாடிகள் போதும் என்னும் கருத்தால் நாம் நம் நாட்களை வீணில் கழிக்கக் கருதுதலும் கூடாது. இன்பத் தைப் பெறுதற்கு அளித்துள்ள பொருள்களைக் கொண்டே நாம் ஒரு சில விநாடிகளுள் என்றும் நீங்காத துன்பத்தையும் பெறலாம். இறக்கும் தருணத்தில் நாம் அறிவிழந்து இருக்கவும் நேரலாம். இரண்டுமணி நேரத்திற்குள் எப்போது வேண்டினும் உண்ணலாம் என ஒருவர் ஒரு சுவை மிக்க தின்பண்டத்தினைத் தந்து செல்வாரா னால் பசியால் வாடிக்கிடக்கும் ஒருவன் அதனை உடனே உண்ண முய லாது 'இப்போது ஏன் இன்னும் இரண்டு மணிநேரம் இருக்கிறதே' என்று எண்ணுவான்? அவ்விதமே துன்பத்தில் அழுந்தியுள்ள அல்லது அழுந்தத்தக்க நாம் இடையறாத இன்பத்தை அடைதற்கு

காலத்தைப் போக்காது உடனே அடையவே முயலுதல் வேண்டும். ஆனால் இயல்பிலேயே அறியாமையில் அழுந்தியுள்ள உயிர்களுக்கு இன்ப துன்பங்களின் பாகுபாடும், இடையறாத இன்பத்தின் உண்மையும் முதலில் விளங்குவதில்லை. விளங்கினும் அதனை அடைய வேண்டிய நெறி புலப்படுவதில்லை. உலக இன்ப துன்பங்களில் உழன்று அலுப்புற்ற பின்னரே நிலைத்த இன்பத்தின்மீது மக்களுக்கு நாட்டம் செல்லுதல் இயல்பாதலின் வாழ்நாட்கள் பல்லாண்டு வேண்டியிருக்கின்றன." மக்கள் ஆண்டு பலவாக இவ்வுலகின்கண் உழன்று கொண்டிருப்பின் அவர்கட்கு என்றைக்கேனும் நல்லுணர்வு தோன்றும்; இடையீடில்லா இன்பத்தின்கண் எண்ணம் பிறக்கும் என எண்ணியே பெரியோர் நம்மைப் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகின்றனர்.

நாம் பெரியோரை வாழ்த்தும் கருத்தோ வேறு. உலக வாழ்வில் முதிர்ச்சிபெற்ற அவர்கள் நீடூழி இருப்பின் அவர்களால் நம் போன்றவர்கள் நலன் அடைதல் கூடும் என்னும் நோக்கத்தாலேயே ஆகும். ஆதலின் உலக அறிவில் முதிர்ந்து கல்வி கேள்விகளில் சிறந்து இடையறு இன்பப்பேற்றினை அடைதற்குரிய நெறியினையும் அறிந்துள்ள நம் பெரியார், வண்ணக்களஞ்சியம் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் நோய் நொடியின்றி, உடல் வன்மையும், ஊக்கம் குன்று உள்ளமும் மேன்மேலும் பெற்று இவ்வுலகம் உள்ளளவும் அவர் தம் திருப்பெயர் நிலவும்படி அளப்பரிய அரும்பணி பலவும் புரிந்து நீடூழிக் காலம் அன்புற்று இன்புற்று அருள் கனிந்து வாழ்வாராக என நாம் இம்முத்து விழாவின் காரணமாக அவர்க்குப் பல்லாண்டு கூற அவாவுகின்றோம்.

நல்லார் பலரும் போற்றும் **காஞ்சி நாகலிங்க முனிவரே!** நீவீர் பல்லாண்டு பல்லாண்டு வாழ்வீராக.

ஆயிரம் பிறை கண்ட அடிகளே, நும் திருப்பெயர் அளப்பில் நெடுங்காலம் நின்று நிலவுவதாக.



மேற்கண்ட வாழ்த்துரைகளைத் தவிர கீழ்க்கண்ட அன்பர்கள் வாழ்த்துப் பாக்கள் அனுப்பியிருந்தனர். அவைகளை இடச் சுருக்கம் கருதி வெளியிட முடியாமைக்கு விழாக் குழுவினர் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

### வாழ்த்துப்பாக்கள் அனுப்பியவர்கள்

திருவாளர்கள் கோ. வில்வபதி, அ. தம்பிரான், திருவோத்தூர்; குமரகுரு முதலியார், செங்குந்த மகாஜன சங்கப் பிரசாரகர், கல்யாணம்பூண்டி; மதுரை செங்குந்த இளைஞர் சங்கத்தினர்; அ. பசுபதி முதலியார், மானம்பதி; வை. ச. இராமலிங்க முதலியார், கண்டாச்சிபுரம்; கா. பொன்னுசாமி முதலியார், க. வி. நடராசன், காரைக்குடி; சுந்தரவிநாயக வாலிப சங்கத்தினர், செங்குந்தபுரம், திருச்சி; குடந்தை-வேதன்.

# முனிவர் நன்றி கூறலும், வாழ்த்தும்

தமிழன்னையின் தவப்புதல்வராகிய தலைவர் அவர்களே! தமிழ்த் தாய்மார்களே! புத்துணர்ச்சி பெற்றுத் தமிழ் வீரர்களாய் உலக மக்களிடையே விளங்க வேண்டுமென்ற பேராவல் கொண்டு நிற்கும் தமிழ் இளைஞர்களே!

எந்நாட்டவர்க்கும் முன்னாளில் நாகரிகத்தை வழங்கிய நாடு நம் தமிழ்நாடேயாகும்! அத்தகைய நாடு இன்று நாகரிகமற்றது என, பல நூற்றாண்டுகளுக்குமுன் நாகரிகம் இன்னதென்றே அறியாதிருந்து நம்மிடமிருந்து கற்றுக் கொண்டவற்றைத் தமதெனக் கூறிக் கொள்ளும் இயல்புடையார், கூறத் துணிந்தனர். இயற்கை மொழியாகிய தேனினும் இனிய தமிழ் தனிமொழியல்லவாம்; இசைக் கலைக்குப் பொருத்தமற்றதாம்; தமிழர் வீரமற்றவர்களாம்; படையில் சேரற்குத் தகுதியற்றவராம். தமிழுக்கும் தமிழர்க்கும் இவ்வாறு இழுக்கு தேட முயல்வார்க்குத் தக்க விடையிறுக்க வேண்டியது தமிழர் தம் தலைப்பிரியாக் கடமையாகும். வாயாலல்ல செயலால்.

தமிழ் தனிமொழியல்ல என்பதற்கும், தமிழர்கள் வீரமற்றவர்கள் என்பதற்கும் முறையே தொல்காப்பியம் முதலிய சங்க நூல்கள் கற்றுவல்லார் மொழியாராய்ச்சியும், இப்போது நடந்துவரும் உலகப் பெரும் போரும் தக்க விடையளித்துள்ளன.

இனி இசைக்குத் தமிழ் பொருத்தமற்றது என்ற தமிழறியாத, பொருந்தாக் கூற்றுடையார் வாய்க்குப் பூட்டுபோட இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடந்துவரும் தமிழிசை இயக்கம் பெரிதும் பாராட்டற் குரியதாகும்.

தமிழுக்கும் இசைக்கும் எத்தகைய பொருத்தமுண்டு என்பதைத் தேவாரம் முதலிய அருளாசிரியர்கள் பாடல்களே நன்கு விளக்கிக் காட்டுகின்றன. தமிழையும் பிறவற்றையும் இவ்வாறு பிறர் இழித்துக் கூறத் துணிந்தமைக்குக் காரணம் நாம் நம்முடைய தாய் மொழியைப் போற்றாது புறக்கணித்தமையும், நம்மிடையே ஒற்றுமை யின்மையுமேயாகும்.

ஆனால் தமிழர்கள் தங்கள் முன்னோர்களைப்போல் உலகம் போற்ற வாழும்நாள் சேய்மையிலில்லை என்பதை யான் உணர்கின்றேன். இன்று நடைபெறும் இவ்விழாவே அதற்குப் போதிய சான்றாகும். திருமணங்களைத் தமிழில் தமிழர்களைக்கொண்டு நடத்த நீங்கள் முற்பட்டிருப்பது போற்றத் தக்கதேயாகும். கடவுள் வழிபாட்டோடு இசைந்த தமிழர் திருமண முறையை யான் மனமுவந்து ஆதரிக்கிறேன். நமக்கு வேண்டும் வகையில் இந்துசட்டம் மாற்றப்படும்

வரையில் அச்சட்டத்திற்கு மாறுபடாத முறையில் திருமணங்கள் நடைபெறுவதே சாலச் சிறந்ததாகும்.

மொழி, சமயம், நாடு முதலிய பல துறைகளிலும் தமது கடமையை உணர்ந்து இடையறாது செயலாற்றிவரும் நமது தலைவர் போன்றார்க்கு இத்தகைய விழாக்கள் கொண்டாடுவது பொருத்தமாகும். ஆயின் செய்யவேண்டிய கடமைகளுள் நூற்றிலொரு கூறேனும் செய்யவில்லையே; தக்க அறிவாற்றலும் வசதியும் கிடைக்கவில்லையே; எனக் கருதும் என்போன்றார்க்கு விழாக் கொண்டாடல் பொருந்துமா? பொருந்தும். என் தகுதிக்காக அன்று. தமிழ்த் தொண்டாற்ற ஆர்வம் மேலிட்டு நிற்கும் தமிழ் இளைஞர்களை மேன் மேலும் ஊக்குவித்தற் பொருட்டேயாம். இளைஞர்களாகிய நீங்கள் உங்கள் கடமைகளை உணர்ந்து செய்ய ஆரம்பித்திருப்பதைக் கண்டு பெருமகிழ்ச்சி யடைகின்றேன். உங்கள் ஊக்கம் பாராட்டலுக்குரியது; அதனை இருநிலம் பிளக்க வேரூன்றி நிலைக்கச்செய்து தமிழ் நாட்டை உண்மைத் தமிழ்நாடாக்கப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென தமிழர்கள் அனைவரையும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஒவ்வொருவரும் தங்கள் கடமையைச் செய்ய வேண்டுமென்று இங்கிலாந்து எதிர்பார்க்கிறது என்ற ஆங்கிலத் தொடர்மொழி தமிழ் நாட்டிற்கும் பொருந்துமாக.

இந்த உலகப் பெரும்போரில் நமது மாட்சிமை தங்கிய மன்னர் பிரான் அவர்கள் வெற்றி பெறுவார் என்பதில் ஐயமில்லை. பெற்றதும் நம் நாடு விடுதலை பெறும் என்ற நம்பிக்கை எனக்குண்டு. அச்சமயம் தமிழர்கள் சிறப்பாகத் தமிழ் இளைஞர்கள் விழிப்பாக இருந்து ஆவன செய்து நன்மை பெறுவாராக. தண்டமிழன்னை தமிழ் இளைஞர்களாகிய உங்களைத் தட்டி எழுப்புகின்றாள். விழிப்புற்று எழுந்து அவளாணைப்படி ஒன்றுபட்டு முன்னேறுங்கள். உங்கள் குறிக்கோளை அடையும்வரை முனைந்து நடவுங்கள். நம் தாய் மொழியாகிய தமிழன்னையையும் அன்புநெறியாகிய தமிழ் சமயத்தையும் போற்றி முன்னேற்றவழியில் நடவுங்கள். உங்கள் குறிக்கோளைக் கட்டாயம் பெறுவீர்கள். இவ்விழாவை நடத்தி என்னை மகிழ்வித்த நீங்கள் நன்கு வாழ்க என மனமார வாழ்த்துகிறேன். எல்லாம் வல்ல இறைவன் உங்களுக்குத் துணை செய்வானாக.

இம் முத்து விழாவினை இவ்வளவு சிறப்புறச் செய்த விழாக் குழுவினரோடு ஒத்துழைத்து இதற்காகும் பொருளும் திரட்டிக் கொடுத்த தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்திற்கும், வெளியூர்களில் ஆங்காங்கு பலவகையில் சிறப்பாக விழாக் கொண்டாடிய கிளைச்சங்கங்கள், பொதுமக்கள் ஆகியவர்களுக்கும் சென்னையிலுள்ள

பல கழகங்களின் பிரதிநிதிகள் கொண்ட விழாக் குழுவினரின் அரிய முயற்சிக்கும், முத்துவிழா மலரைப் பிறர் உதவி இல்லாத காலத்திலும் வைக்கந்தளராது உறங்காது இரவு பகலாய் உழைத்து உதவிய செங்குந்த மித்திரன் அச்சக மானேஜர் பி. செ. மாணிக்க வாசக முதலியார் அவர்கட்கும் சிப்பந்திகளுக்கும் இக்கூட்டத்திற்குத் தலைமைதாங்கி நடத்திக்கொடுக்க இசைந்த தலைவர் அவர்களுக்கும், விழாவினைச் சிறப்பிக்கும்பொருட்டு விரும்பி வந்துள்ள நண்பர்களுக்கும் பொதுமக்களுக்கும் மற்றுமுள்ள எல்லோருக்கும் எனது மனமுவந்த நன்றியறிதலையும் வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தமிழ் வாழ்க! தமிழகம் ஓங்குக! அன்புநெறி தழைக்க!

---

## முனிவர் முத்துவிழா நிகழ்ச்சிகள்.

1-7-44ம் நாள் மாலை 4-மணிமுதல் சென்னை அரண்மனைக்காரன் வீதியிலுள்ள கோகலே மண்டபத்தில் தென்னிந்திய மகாஜன சங்கத்தையும் செங்குந்த மித்திரனையும் தோற்றுவித்தவரான ஆயிரம் பிறை கண்ட அறிஞர் வண்ணக் களஞ்சியம் உயர்திரு. காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களின் 80-ஆம் ஆண்டு நிறைவு விழா என்னும் முத்துவிழா தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பிலும் மற்றும் சென்னையிலுள்ள சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், நக்கீரர் கழகம், தமிழர் நல்வாழ்க்கைக் கழகம், ஞானியார் மன்றம், சென்னைத் தமிழர் கழகம், பெத்துநாய்க்கன் பேட்டை தாய்மார் கழகம் முதலிய பல கழகங்களின் ஆதரவிலும் திருவாளர் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. விழா ஆரம்பத்தில் திருநெறித் தமிழிசை வேந்தர் புதுவை திரு. ஆ. விநாயக முதலியார் அவர்கள் பக்க வாத்தியங்களுடன் இன்னிசை விருந்து கேட்போர் மனங்கசிய நடத்தினர். பின்னர் முத்துவிழாக் குழுவின் தலைவர் உயர்திரு. சுவாமி உருத்திரகோடீசுவரர் விழாவிற்கு வந்திருந்தவர்களை வரவேற்றுபசரித்துத் தலைவர் அவர்களைத் தலைமையேற்கும்படி கேட்டுக் கொண்டனர். தலைவர் தமது முன்னுரையில் முனிவர் அவர்கள் தமிழுக்கும் சைவசித்தாந்தத்திற்கும் செய்த தொண்டுகளைப் பாராட்டினர். பின்னர் சென்னை தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் திரு. தி.நா. சபாபதி முதலியார் முனிவர் அவர்களின் உருவப் படத்தைத் திறந்துவைத்து முனிவர் அவர்கள் சங்கத்திற்கும் மித்திரனுக்கும் செய்த சேவைகளைப் பாராட்டினர். திருவாளர்கள் தருமையாதீனப் புலவர் காஞ்சிபுரம் வஜ்ஜிரவேலு முதலியார் அவர்கள், B.A.,L.T., சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர் வெங்கடராயலு ரெட்டியார், காஞ்சிபுரம் நிலச்சுவான்தார் ம. முருகேச முதலியார், கோவை சாரதா மில்ஸ் மானேஜிங் டைரக்டர்

V. S. செங்கோட்டையா முதலியார், காஞ்சிபுரம் பொன்னுசாமி அடிகள், மயிலை சிவ. முத்துக்குமாரசாமி முதலியார், பண்டிதை கிருஷ்ணவேணி அம்மாள் முதலியவர்கள் முனிவர் அவர்கள் தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் செய்த சேவைகளைப் பாராட்டிப் பேசினார்கள்.

தென்னிந்திய செங்குந்தமகாஜனசங்கத்தின் சார்பாக சங்கஅமைச்சர் திரு. சி. நடராஜ முதலியாரும், பல கழகங்களின் சார்பாக காஞ்சி மணிமொழியாரும் விழாக்குழுவினர் சார்பாக திரு. சிறுவை மோகன சுந்தரனும், வாலாஜாபாத் இந்துமத பாடசாலை மாணவர்களின் சார்பாக வித்வான் திரு. கோ வில்வபதி அவர்களும் தனித்தனியே முனிவர் அவர்களுக்கு வாழ்த்துப் பத்திரங்கள் வழங்கினர். தலைச்சங்கத்தின் ஞாபகார்த்தமாக முனிவர் அவர்களுடைய திருவுருவப்படம் ஒன்று முனிவர் அவர்களுக்கு அளிக்கப்பட்டது. முத்துவிழா மலரை, வித்துவான் பாரிப்பாக்கம் திரு. கண்ணப்ப முதலியார் அவர்கள் அரங்கேற்றி வைத்தனர். காஞ்சீபுரம் ஸ்ரீ கச்சபேசர் ஆலயத்தின் சார்பாக ஷ ஆலயத்தின் தர்மகர்த்தர் திரு. ம. சாமிநாத முதலியார் அவர்கள் அனுப்பிவைத்த புட்பமாலை, பிரசாதம், பட்டு சரிகை துப்பட்டா முதலியன ஷ சாமிநாத முதலியாரின் இளவல் திரு. முருகேச முதலியார் அவர்களால் முனிவருக்கு அணிவிக்கப் பெற்றன. காஞ்சீபுரம் தீபப்பிரகாசர் ஆலயத்திலிருந்து புட்பமாலையும் பிரசாதமும் கொண்டுவரப் பெற்றவைகளை காஞ்சிபுரம் செங்குந்த வாலிபர் சங்கக் காரியதரிசி திரு. D. C. கந்தசாமி முதலியார் அவர்கள் முனிவருக்கு அணிவித்தார். கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் எல்லோருக்கும் முனிவர் ஆசிகூறி தமது நன்றியைத் தெரிவித்துக்கொண்டார். திரு. ம. சண்முகசுந்தர முதலியார் M.A.L.T., அவர்கள் முனிவர் அவர்களின் குடும்பத்தின் சார்பாக விழா சிறப்பாகக் கொண்டாடியதற்காகக் குழுவினருக்கு நன்றி செலுத்தினார். தலைவர் முனிவர் அவர்களின் தூய வாழ்க்கை, அடக்கம், விடாமுயற்சி போன்ற நற்குணங்களை யெடுத்துச்சொல்லி மற்றவர்களும் அவரைப் பின்பற்றி யொழுக வேண்டுமென்று தமது முடிவுரையில் வற்புறுத்திச் சொன்னார்.

இறுதியில் விழாக்குழுவின் அமைச்சர் வித்வான் திரு. இராசாக்கண்ணு முதலியார் B. O. L. அவர்களால் எல்லோருக்கும் நன்றி கூறப்பட்டு இரவு 9-மணிக்கு விழா இனிது முடிவுற்றது.



# வெளியூர்களில் விழாக் கொண்டாட்டம்

கீழ்க்கண்ட சங்கங்கள், மடங்கள் இவைகளின் ஆதரவில் வெளியூர்களில் முனிவர் முத்து விழா ஆலய வழிபாடு, ஏழைகளுக்கு அன்னமளித்தல், பொதுக்கூட்டம், ஊர்வலம் முதலிய நிகழ்ச்சிகளுடன் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றன. விவரமாக வெளியிட இயலாமைக்கு விழாக் குழுவினர் தமது வருத்தத்தை ஷை சங்கங்களுக்கும், மற்றவர்கட்கும் அறிவித்துக் கொள்கின்றனர்.

| தேதி | சங்கங்களின் பெயர் | ஊர் |
|---|---|---|
| 20-4-44 | செங்குந்த வாலிபர் சங்கம் | காஞ்சீபுரம் |
| 8-5-44 | இளைஞர் ஒற்றுமைக் கழகம் | பெருநகர் |
| 11-5-44 | செங்குந்தர் சங்கம் | மாணம்பதி |
| 24-6-44 | செங்குந்த வளர் நிலைச்சங்கம் | ஐயம்பேட்டை |
| 26-6-44 | செங்குந்த இளைஞர் முன்னேற்றக் கழகம் | அசனம்மா பேட்டை |
| 5-5-44 | இளங்கோ இல்லம் | ஆரணி |
| 9-4-44 | செங்குந்தர் சமாஜம் | கண்டாச்சிபுரம் |
| 28-6-44 | ஸ்ரீ மௌனசாமி மடம் | சிதம்பரம் |
| 11-5-44 | ஒட்டக்கூத்தர் மடாலயம் | கல்யாணபுரம் |
| 9-4-44 | செங்குந்த வாலிபர் சங்கம் | கூறைநாடு |
| ,, | விநாயகர் செங்குந்த வாலிபர் சங்கம் | நாங்கூர் |
| ,, | செங்குந்த இளைஞர் கழகம் | குடவாயில் |
| ,, | சைவத் திருமுறை மடாலயம் | காரைக்கால் |
| ,, | சிந்தாமணி விநாயகர் செங்குந்தர் சங்கம் | நருவிழுந்தநாதபுரம் |
| 20-4-44 | சுந்தரவிநாயகர் வாலிபர் சங்கம் செங்குந்தபுரம் | திருச்சி |
| 9-4-44 | செங்குந்த இளைஞர் சங்கம் | மதுரை |
| 26-5-44 | கார்த்திகேயன் செங்குந்தர் இளைஞர் சங்கம் | திருப்பரங்குன்றம் |
| 2-5-44 | செங்குந்தர் அபிவிருத்தி சங்கம் | மண்டல மாணிக்கம் |
| 9-4-44 | செங்குந்தர் அபிவிருத்தி சங்கம் | தேவகோட்டை |
| 25-6-44 | செங்குந்த வாலிபர் சங்கம் | ஸ்ரீ வில்லிபுத்தூர் ராஜபாளையம் |
| 18.6-44 | அகில இளசை செங்குந்த வாலிபர் சங்கம் | எட்டையபுரம், |
| 9-6-44 | செங்குந்த வாலிபர் சங்கம் | நடுவிற்பட்டி |
| 27-4-44 | செங்குந்த குலாபிமானச் சங்கத்தார் | சங்கரநயினார்கோவில் |
| 29-5-44 | பொதுக்கூட்டம் | வெண்ணந்தூர் |
| 22-4-44 | செங்குந்த மகாஜன சங்கம் | இண்டூர் |
| 5-6-44 | முத்துவிழாக் குழுவினர் | வேலகத்தம் கரவெட்டி கிழக்கு, யாழ்ப்பாணம் |